# நீங்கள் நீதிக்கென்று விதைவிதையுங்கள்; தயவுக்கொத்ததாய் அறுப்பு அறுங்கள்.

ஓசியா. 10:12



யோசேப்பு தன் சகோதரர்களுக்கு தானியம் வழங்குதல்.
(ஆதி. [illegible])

# ஆசிரியர் உரை

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபையை அறிந்திருக்கிறீர்களே! அவர் ஐசுவரியமுள்ளவராயிருந்தும் நிறைவுள்ளவராயிருந்து தரித்திரர்களாகிய நம்மிடத்தில் நம்மைப்போல் மனித உருவில் வந்தது அவரைப்போல் நம்மை ஐசுவரியவான்களாக, நிறைவுள்ளவர்களாக்கும்படிக்கே. அவருடைய கிருபையினால் நாம் கிருபையின்மேல் கிருபை பெற்றோம். கிறிஸ்தவ மார்க்கம் கிருபையில் இருக்கிறது. தேவ கிருபையில் இருக்கிறது. தேவனுடைய கிருபையினால், நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய கிருபையினால் நாம் இரட்சிக்கப்பட்டோம். தேவ கிருபையினால் ஆவிக்குரிய வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறோம், தேவகிருபையினால் நிலைநிற்கிறோம். தேவகிருபை நம்மைத் தாங்குகிறது. கிறிஸ்தவ வாழ்க்கையில் ஒரு மனிதன் எவ்வளவு கிருபை பெற்றுக் கொள்கிறானோ, அந்த அளவுக்கு அவன் நிறைவு உடையவனாக விளங்குவான். ஒருவர் பரிசுத்த ஜீவியம் செய்கிறாரென்றால் அவர் தேவகிருபையினால் நிரம்பி இருக்கிறார் என்று அர்த்தம். ஒருவர் விழுந்து போனாரென்றால் தேவ கிருபை அவரை கைவிட்டு விட்டது. அவர் கிருபையைச் சார்ந்து கொள்ளவில்லை, கிருபையைப் பற்றிக் கொள்ளவில்லையென்றே அதனுடைய அர்த்தம். கிருபையினால் இரட்சிக்கப்பட்டோம். கிருபையினால் வளர்ந்து கொண்டிருக்கிறோம். கிருபையினால் பூரணப்படுவோம். கிருபையினால் வருகைக்கு ஆயத்தப்பட்டு முக்தியடைவோம். எல்லாம் தேவ கிருபையே. ஆனபடியினால் இந்த ஆண்டின் ஆரம்பத்திலிருக்கிற நாம் ஆண்டு முழுவதும் தேவ கிருபையை நிறைவாய்ப்பெற்று கர்த்தருக்குள் வெற்றியடையவும், கர்த்தரை மகிமைப்படுத்தவும், அவரை மேன்மைப்படுத்திக் காண்பிக்கவும் தேவன் நம்மெல்லாருக்கும் அனுகிரகம் செய்வாராக. தேவகிருபையை அவருடைய பரிபூரணத்தினால் நாமெல்லாரும் கிருபையின்மேல் கிருபை பெற்றோம். அவர் ஏராளமான கிருபையை அருளுகிறாரே தாழ்மையுள்ளவனுக்கு கிருபையளிக்கிறார். பெருமையுள்ளவனுக்கோ தேவன் எதிர்த்து நிற்கிறார். ஆனபடியினால், கிறிஸ்துவினுடைய கிருபை நம்மேல் தங்கும்படியாக எப்பொழுதும் கவனமாயிருப்போம். இதுவே இந்த ஆண்டின் நோக்மாய் நமக்கு இருக்கட்டும்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிருபை வரங்கள் நீங்கள் அறிவில்லாதிருக்க எனக்கு மனதில்லை

தேவனுடைய திருச்சபையானது அறிவில்லாதிருக்கக் கூடாது. அறிவில்லாமை அந்தகாரத்துக்குச் சமம். எந்த ஒரு காரியத்தைக் குறித்தும் அறிவில்லாதிருக்க இறைவன் விரும்புவது இல்லை. I கொரி 12-ம் அதி. முதல் 14-ம் அதிகாரம் முடிய ஆவிக்குரிய வரங்களைக் குறித்து வேதாகமத்தில் பரிசுத்த ஆவியானவர் எழுதிக் கொடுத்திருக்கிறார். ஆவிக்குரிய வரங்களைக் குறித்து அறிவில்லாதிருக்க எனக்கு மனதில்லை என்று அப்போஸ்தலன் சொல்கிறார். புதிய ஏற்பாட்டிலே அறிவில்லாதிருக்க தேவன் விரும்பாத ஆறு காரியங்களில் ரோ. 1:13; 11:25; I கொரி. 10:1; 12:1; II கொரி. 1:8; 1 தெச. 4:13, இதுவும் ஒன்றாகும். இந்நாட்களிலே பரிசுத்த ஆவியானவரைப் பெற்ற சபைகளில் கூட அறிவின்மை காணப்படுகிறது. தேவ ஜனங்கள் ஆவிக்குரிய வரங்களைக் குறித்து தெளிந்த அறிவுடையவர்களாக இருக்கவேண்டும் என்று பரிசுத்த ஆவியானவர் எழுதிக் கொடுத்திருக்கிறார். ஆங்காங்கு உண்டாகிற சீர்கேடுகளும், தவறான ஆவிகள் உட்புகுவதினாலும், மனிதனது தவறான சித்தத்தினாலும் தெய்வீக மார்க்கம் தூஷிக்கப்பட்டு பரிசுத்த ஆவியானவரையும் அவரால் உண்டாகிற வரங்களையும் உலகம் தூஷிக்கவும், தேவ ஜனங்களில் அநேகர் வெறுக்கவும் தக்கதான ஒரு கடைசிக் காலத்தில் நாம் இருக்கிறோம். ஆனபடியினால், ஆவியானவரைப் பெற்றுக்கொள்வதிலும் ஆவியானவரைப் பெற்றவர்கள் அடைந்திருக்கிற ஆவிக்குரிய வரங்களைக் குறித்தும், அந்த வரங்களைப் பற்றியும் அறிந்து கொள்ளும்படியாய் தேவ வசன வெளிச்சத்தில் பார்ப்போம்.

## 1. பெற்றுக் கொள்ள அறிவு அவசியம்.

நான் அறியாமலிருக்கும் ஏதேனும் ஒன்றை ஒரு மனிதனும் பெற்றுக்கொள்ள முடியாது. ஆகவே ஆத்மீக வரங்களை பெற வேண்டுமாயின் முதலாவது அதைப்பற்றி அறிந்திருக்க வேண்டும். நீங்கள் விசுவாசிகளான போது பரிசுத்த ஆவியைப் பெற்றீர்களா என அப். பவுல் எபேசு கிறிஸ்தவர்களிடத்தில் கேட்டார். அவர்கள் : பரிசுத்த ஆவி உண்டு என்பதை நாங்கள் கேள்விப்படவில்லையே என்றனர். கேள்விப்படாத ஒன்றை பெற்றுக்கொள்வது எப்படி என்பதே அதன் அர்த்தம். பவுல் அவ்வனுபவத்தைக் குறித்து தெளிவாக அவர்களுக்கு விளக்கிக் கூறினபோது, பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டார்கள் (அப். 19:1-7).

எத்தியோப்பியா ராணியாகிய கந்தாகே என்பவளது மந்திரி சுவிசேஷகராகிய பிலிப்புவினிடம் எனக்கு ஒருவன் தெரிவிக்காவிட்டால் அது எனக்கு எப்படித் தெரியும், ஒருவன் விளக்கிச் சொல்லாவிட்டால் எப்படித் தெரியும் என்று சொன்னதாக பார்க்கிறோம். அதைத் தொடர்ந்து அந்த வேத வாக்கியத்தை முன்னிட்டு கிறிஸ்துவைக் குறித்து பிலிப்பு சுவிசேஷகன் விளக்கிச் சொல்லியதினிமித்தம் கந்தாகே என்பவளது மந்திரி இரட்சிப்பைப் பெற்றுக்கொண்டான். இதைப்போன்றே ஆவிக்குரிய வரங்களைக்குறித்து அறிவு இல்லாததினிமித்தம் இன்று அநேக விசுவாசிகள் கூட பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளாமலிருக்கின்றனர் வரங்களைக் குறித்து அறியாதிருக்கின்றவர். பெற்றுக் கொள்ளாமலிருக்கின்றவர். ஆகவே, இன்றைக்கு சபைகள் ஆவிக்குரிய தரித்திரம் உண்டாயிருக்கிறது என்றும் இதைக்குறித்து ஆத்மீக பாரம் அநேகருக்கு இல்லை என்றும் நாம் அறிந்திருக்கிறோம்.

## 2. சரியான எண்ணங்களுக்கு அறிவு அவசியம்.

எந்தக் காரியத்தைக் குறித்தும் தெளிவான அறிவு இல்லாவிடில் அந்தக் காரியத்தை, தவறானதை சரியாகவும், உண்மையைத் தவறு எனவும் கருதி, பின்னர் உண்மை என நினைத்த தவறை செய்யவும், பின்பற்றவும் செய்வார்கள். சரியான விவேகம் இல்லாததாலும் குறைந்த அறிவினிமித்தமாகவும் பெரிய ஆபத்துக்கள்

ஏற்படுகின்றன. இதினிமித்தமே கிருபை வரங்களைப் பெறாத சிலர் தாங்கள் கிருபா வரங்களைப் பெற்றுக்கொண்டதாக எண்ணி ஊழியத்தில் நன்மைக்கு பதில் தீமையை விளைவிக்கின்றனர். ஒருவருடைய ஜெபத்தினிமித்தம் ஒரு தடவை ஒரு வியாதிஸ்தர் சுகமானால், தனக்கு குணமாக்கும் வரம் இருப்பதாக சிலர் எண்ணிக் கொள்வார்கள். சிலருக்கு சிலவேளை அந்நிய பாஷைக்கு வியாக்கியானம் உண்டாகி விட்டால் தங்களுக்கு அந்நிய பாஷை வியாக்கியான வரம் இருக்கிறதாக எண்ணிக் கொள்வார்கள். எப்பொழுதாவது தீர்க்கதரிசன வார்த்தை உண்டாவதென்றால் தங்களுக்குத் தீர்க்கதரிசன வரம் உண்டென்று எண்ணிக் கொள்வார்கள். இன்னும் சிலர் வரம் இல்லாதவைகளையே தங்களுக்கு வரம் என்று சொல்லி எண்ணிக்கொள்வார்கள்.

ஆவிக் குரிய வரங்களைப்பெற்றவர்களும் அதைக்குறித்து சரியாக அறியாததால் உபயோகமற்றதாக வைத்திருக்கின்றனர். ஆவிக்குரிய வரங்களைக் குறித்து தெளிவு, அறிவு இருக்குமெனில் தேவனால் கொடுக்கப்பட்ட வரங்களினால் பிரகாசிக்கவும் வரங்களினால், சபைக்கும் ஊழியங்களுக்கும் மிகுந்த பிரயோஜனத்தை ஏற்படுத்தவும் முடியும். தேவ நாமமும் மகிமைப்படும். கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவதுபோல் அநேகருடைய நிலை காணப்படுகிறது. தேவன் தமக்குக் கொடுத்திருக்கிற கிருபைகளை. கிருபை வரங்களை குறித்து பகுத்தறிவு உண்டாகுமெனில் ஒரு ஆவிக்குரிய நதியானது நமது சபையில் ஓடும். அநேக ஆத்துமாக்கள் தாகந்தீர்த்து, திருப்தியடைவார்கள்.

3. சரியாக கிரியை புரிய அறிவு அவசியம்.

ஆவிக்குரிய வரங்களையுடையவர்கள் இதில் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். வரங்களையுடைய சிலர் அவைகள் எதற்காக கொடுக்கப்பட்டிருகின்றன, எப்பொழுது எவ்விதம் உபயோகிக்க வேண்டும், எப்பொழுது கட்டுப்படுத்த வேண்டும் என்பதை அறியாதிருப்பதால் பலத் தீமைகளையும் சிக்கல்களையும் உருவாக்குகிறார்கள், சபையின் பிரயோஜனத்திற்கு வளர்ச்சிக்கென்றே, ஆவிக்குரிய வளர்ச்சியை தேவஜனம் பெறும்படியாகவே தேவன் வரங்களை அருளுகின்றார். அதைப்பற்றி சரியான விவேகமில்லாததால் அது சில வேளைகளில் ஆவிக்குரிய அழிவை ஏற்படுத்துகிறது. ஆகையால் ஆவிக்குரிய வரங்களைக் குறித்து தெளிவான அறிவை உடையவர்களாயிருக்க வேண்டியது மிக அவசியம். இந்நாட்களிலே ஆவி பெற்ற சிலர் பாவத்திலே விழ்ந்து, பாவத்தினிமத்தம் அவர்களில் பரிசுத்த ஆவியானவர் கிரியை செய்கிற இடத்திலே அசுத்த ஆவிகள் நுழைந்து குறிசொல்ல ஆரம்பித்திருக்கின்றன. விழுந்துபோன சவுல் அரசனில் தேவ ஆவியானவர் நீங்கின இடத்திலே அசுத்த ஆவி ஒன்று அவனில் இறங்கி அவனை வேதனைப்படுத்தினது போலவாகும் இக்காரியங்கள். தேவ ஜனங்களை தீர்க்கதரிசியின் கூட்டத்தை, பரிசுத்தவான்களைப் பார்க்கும்போது அவனில் பரிசுத்த ஆவி கிரியை செய்யும். வேறு சமயங்களிலே அவனில் அசுத்த ஆவி கிரியை செய்யும். அபிஷேகம் பெற்ற தாவீதைக் கொலை செய்யும்படி கையில் ஒரு ஈட்டியை வைத்துக் கொண்டு குறி சொல்லிக்கொண்டு இருப்பான். பரிசுத்த ஆவியானவரைப் பற்றி அறிவில்லாததினால் அநேகர் பரிசுத்த ஆவியானவரைப் பெற்றுக்கொள்ளாமலிருக்கிறார்கள். பரிசுத்த ஆவியின் அபிஷேகம் என்று சொல்லப்படுவது புதிய ஏற்பாட்டுக்குரிய தேவனுடைய வாக்குத்தத்தமாகும். தேவனுடைய பிள்ளைகள் எல்லாருக்கும் இது சுதந்தரம். கேட்டுப் பெற்றுக் கொள்கிறவர்களுக்கே பரிசுத்த ஆவியானவர் அருளப்படுவார் (லூக். 11:13; 24:49; அப். 1:5-8). சிலர், தாங்கள் விசுவாசித்த பொழுதே பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொண்டதாக எண்ணியிருப்பது தவறான காரியமாகும். இயேசுவானவர் பரிசுத்த ஆவியானவராலே உற்பவித்துப் பிறந்தார். பரிசுத்த ஆவியானவராலே வளர்ந்தார். ஆவியிலும், சரீரத்திலேயும், ஞானத்திலேயும், மனுஷர் தயவிலும், தேவகிருபையிலும் நாள்தோறும் வளர்ச்சியடைந்தார். தம்முடைய முப்பதாவது வயதில் அவர் பரிசுத்த ஆவியானவருடைய அபிஷேகத்தைப் பெற்றுக்கொண்டார். இது மேலே இருந்து ஊற்றப்படுவதாகும். அது முதற்கொண்டு அவர் தேவனுடைய ஊழியத்தைச் செய்தார். யோவான் ஸ்நானன் தன்னுடைய தாயின் வயிற்றில் இருந்தபோது பரிசுத்த ஆவியினால் நிரம்பி களிப்பாய்த் துள்ளினார். ஆனாலும் அது

அபிஷேகமல்ல. தேவனுடைய ராஜ்யத்தில் சிறியவன் யோவான் ஸ்நானனைக் காட்டிலும் பெரியவன் என்று இயேசு கிறிஸ்து திருவுளம் பற்றினர். ஆனபடியினால் பரிசுத்த ஆவியானவருடைய அபிஷேகத்தைப்பற்றி தெளிவான அறிவு பெறாத எவரும் பரிசுத்த ஆவியானவரைப் பெற்றுக் கொள்ளவில்லை, பெற்றுக் கொள்ளமாட்டார்கள், பெற்றுக் கொள்ளுகிற தில்லை. அவ்விதமாகவே ஆவிக்குரிய வரங்களைக் குறித்த அறிவில்லாமையினால் அநேகர் வரங்களைப் பெற்றுக்கொள்ளாமலிருக்கிறார்கள்.

(தொடரும்)

"அவனவன் பெற்ற வரத்தின் படியே நீங்கள் தேவனுடைய பற்பல கிருபையுள்ள ஈவுகளைப் பகிர்ந்து கொடுக்கும் நல்ல உக்கிராணக்காரர்போல ஒருவருக் கொருவர் உதவி செய்யுங்கள்."

*(1 பேது. 4:10)*

# இந்து மதம்

(தொடர்ச்சி)-

## 2. பதஞ்சலியம் :

இது பதஞ்சலி என்ற முனிவரால் அஷ்ட யுகங்களைக் குறித்து சொல்லப்பட்ட சாஸ்திரம், அந்த யுகம் எட்டு. அவையாவன : யமம், நியமம், ஆதமம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி. இவற்றுள் இயமம், கொல்லாமை, மெய்மை கூறல், கள்ளுண்ணாமை, பிறர் பொருள் இச்சியாமை, இந்திரிய மடக்க. நியமம் ; தவம், தூய்மை, தத்துவ நூலோதல், மனமுவந்திருத்தல், தெய்வ வழிபடல் முதலியன. ஆதனம் : சுபத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், மொத்தம், மயூரம், சுகம். ஆதனம் என்றால் ஆசனம் என்றும் சொல்வார்கள். இவைகளைப் பற்றிய விவரம் பதஞ்சலியின் நூலில் எழுதப்பட்டுள்ளது.

## 3. வேதாந்தம் :

வேதத்தின் முடிவை வியாசரால் உண்டாக்கப்பட்ட சாஸ்திரம் உடமைகளிலிருந்து வேத உபதேச பிரமாணங்களை மாத்திரம் ஒழுங்காய்ச் சொல்லுகிறது. சங்கராச்சியார், இதிலே பரப்பிரமம் சர்வலோகத்துக்கும் ஆத்துமா என்றும் சகல வஸ்துக்களோடு ஐக்கியமாய் இருக்கிறாரென்றும், பல தேவர்கள் உண்டென்றும், பூலோகம் பஞ்ச லோகங்களால் உண்டான தென்றும் சொன்னார். இவர் சொன்னதிலே பல மாறுபாடுகள் உண்டு.

## ஆறு சாஸ்திரம்

வேதாந்தம், வைசிகம், பாட்டம், பிரபாகரம், பூர்வ மீமாஞ்சை, உத்திர மீமாஞ்சை என்பவைகளே. வேதாந்தம் முன்னால் கூறப்பட்டது. வைசியம் : இது கனாதர் என்பவரால் கூறப்பட்ட தர்க்க முதலிய சாஸ்திரம்.

பாட்டம் : பாட்டர் என்பவரால் உண்டாக்கப்பட்ட சாஸ்திரம்.

பிரபாகரம் : இது பிரபாகர் என்பவராலே உண்டாக்கப்பட்ட சாஸ்திரம்.

பூர்வ மீமாஞ்சை : சயமுனி என்பவராலே வேதத்திலுள்ள கர்ம காண்டத்தின் சடங்கு பிரமாணங்களைக் குறித்து எழுதப்பட்ட சாஸ்திரம்.

உத்திர மீமாஞ்சை : இது வியாசராலே வேதத்திலுள்ள ஞான காண்டத்தில் அடங்கிய உபதேச பிரமாணங்களையும் மகாத்துமாவைக் குறித்தும் எழுதப்பட்ட சாஸ்திரம்.

## 3. புராணங்கள்.

புராணங்கள் மும்மூர்த்திகளின் சரித்திரத்தை உடையது. ஒவ்வொரு தேவனைக் குறித்தும் அவ்வாறு புராணங்கள் உண்டு. புராணங்களில்' மகாபாரதம், ராமாயணம், பாகவதம், விஷ்ணு புராணம் விசேஷித்தவை

களாகும். புராணங்களும் வியாசரால் எழுதப் பட்டவைகளாம், அவையாவன: மச்ச புராணம், கூர்மம், வராகம், பாமணம், பிரம்மம், வைணவம், பாகவதம், சைவம், லிங்கம், பௌத்தம், நாராயணம், காருடம், பிரம்ம கலே, காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரம்மாண்டம், பதுமம் இவற்றுள் சைவம், காந்தம், லிங்கம், கூர்மம், மாமணம், வராகம் பௌபிகம், மச்சியம், மார்க்கண்டேயம், மாண்டம் இவை பத்தும் சிவபுராணங்கள். நாரதீபம், பாகவதம், காருடம், வைணவம் இவை நான்கும் விஷ்ணு புராணம்; பிரம்மம், பதுமம் இரண்டும் பிரம்ம புராணம். வர்த்தம், சூரிய புராணம், ஆக்கிவேயம், பிரமகை அக்கினி புராணம், அன்றியும் உப புராணங்கள் 18. உசனம், கபிலம், காளி, சர்க்குமாரம், சாம்பவம், சிவ தன்மம், செவுதம், தூர்வாசம், நந்தி, நார சிங்கம், நாரதீபம், பராசரம், பார்க்கவம், ஆங்கிரம் மாரிசம், மாணவம், வாசிட்ட லிங்கம், வாருணம் இவை அவ்வப்பெயரால் விளங்கும் கந்த புராணத்திலிருக்கிற அண்ட கவுச வரலாறு; பரமேசுவரர் எனக்குத் தந்த ஆயிரத் தெட்டண்டங்களின் நிலையை சொல் லவே வேண்டுமென்று சூரன் கேட்க குருவாகிய சுக்கிர பகவான் சொன்னது:

இலத் தொழில் பொருந்திய வேலினயுமுடைய ராசாவே கேள். மூல பிரகாிதுக்கு மேற்பட்டவைகளும் அவைகளிலுண்டானவை களோ நிற்க மூல பிரகாிதியிலே புத்தி தோன்றிற்று. புத்தியிலே ஆவம் தோன்றிற்று. ஆனத்திலே பஞ்சபுலன்கள்தோன்றிற்று, பஞ்ச புலன்களிலே பஞ்ச பூதியங்களும் தோன்றிற்று, பஞ்ச பூதியங்களிலே தோன்றிய இந்த பிரதிவி அண்டத்துக்கோ ஆயிரங்கோடியம் உண்டு. அந்த அண்டங்கள் ஒன்றின் மேல் ஒன்றல்ல பரந்திருக்கும் அவைகளோ பொன்மயம். இருபத்தி நான்கு கதிரெழுத்துக்கள் கொண்டது மயிர் நுனி. மயிர் நுனி எட்டு கொண்டது இர். இர் நான்கு கொண்டது பேல். பேல் எட்டு கொண்டது நெல். நெல் மூன்று கொண்டது அங்குலம். அங்குலம் இருபது கொண்டது கரம். கரம் நான்கு கொண்டது தனு. தனு இரண்டு கொண்டது தண்டம். தண்டம் இரண்டு கொண்டது குருசம். குருசம் நான்கு கொண்டது யோசனே. இவ்விதமாய்ப் பெருகிய யோசனே நாறு கோடியுண்டு. ஓர் அண்டத்துக்கு அகல நீளம் எவ்வளவோ அவ்வளவே மற்ற அண்டங்களுக்கும் உண்டென்று கண்டு கொள்க. இந்தப் பூமிக்கு கீழும் மேலும் ஐம்பது கோடி யோசனேயுண்டு. எட்டு திக்கும் மகா மேருவுக்கு திகாந்தத்தினுடைய ஐம்பத்தைம்பது கோடி யோசனேயுண்டு. அண்ட பத்திகையில் அகரம் ஒரு கோடி யோசனே, அதற்கு மேலே வலிய காலக்கில் ஒருத்திரருடைய கோயில் ஒரு கோடி யோசனே அதின் மேலே அக்கினி ஜுவாலே பத்து கோடி யோசனே. அதற்கு மேலே புகை ஐந்து கோடி.

இந்த பதினைந்து கோடிகளுக்குள்ளே அந்த காலாக்கினி ருத்திரருடைய சிங்காசம் ஆயிரம் யோசனே பரப்பு அகலம் கொண்ட இரண்டாயிரம் யோசனே அதிலிருக்கும் காலாக்கினி ருத்திரருடைய சரீர உன்னதம் பதினாயிரம் யோசனே, அவர் பரிசை வாள், அம்பு, வில்லு இவைகளே ஏந்தியிருப்பார். அவரைப் போல பத்துப்பேர் அவரிடத்திலே சூழ்ந்து இருப்பார்கள். அவருடைய பரிசனங்களாய் ஒரு கோடி பேர் அங்கே இருப்பார்கள், அதிலே தான் ஆதி கூர்வம் அவர்களே புகழ்ந்து கொண்டிருக்கும். அந்த புவனத்தின் மேலே ஒன்றின் மேல் ஒன்றுய் முப்பத்திரண்டு கோடி நாகங்கள் உண்டு. இவைகளுடைய உயரமே இருபத்து ஒன்பது கோடியும், பன்னிரண்டு லக்கம் யோசனே அகலம் அண்ட கடாகத்தை யொக்கும். அந்த நாகத்துக்கு மேலே, தொன்னூற்றொன்பது இலக்கம் யோசனேயிலே ஒரு புவனம் உண்டு. அதிலே கிழக்குப்புறம் இரும்பு, நடுவும் மேற்கும் பொன்மயம் அதற்கு நடு மத்தியிலே கூர்மாண்டேசர் இருப்பார். கரிய முகத்தையும், மழுவேந்தின கையினேயும் வடவா முகாக்கினி போலும் கண்ணேயும் உடையவர்களாக பொன்னாசனத்தின் மேலே இருக்கும் கூர்மாண்டேசரை சூழ்ந்து திருவுருத்திரர்களோ அநேகர் உண்டு.

அந்த புவனத்துக்குமேல் ஒன்பதிலக்கம் யோசனேகளில் அதற்கு மேலே பாதாளம் ஒன்றுக்கு மேல் ஒன்றுக சத்த பாதாளங்கள் உண்டு. ஒவ்வொன்றிற்கும் ஒன்பதொன்பதாக தொகை பாதாளங்களுககு அறுபத்து

மூன்றி லக்கம். இங்கே இருக்கும் க லிட் ட பாதாளத்தின் உயரமோ, எட்டிலக்கம். ஒவ்வொரு பாதாளத்துக்கு அகலம் பதினாயிரம், பதினாயிரம் யோசனை. அவைகளில் மூ ன் று பகுதியுண்டு. கிழக்கு திசையிலே அசுரர்களும், மேற்கு திசையிலே இராட்சதர்களும் இடையிலே நாகர்களும் இருந்து வா ழ் வா ர் க ள். இதற்கு ஒன்பது இலக்கத்துக்கு மேலே ஆடகேசுவருடைய கோவில். இதற்குமேல் வெளி ஒரு கோடியே இருபது லக்கம். இதற்கு மேலே அஷ்டமா நாகங்களும் அட்ட திக்கயங்களும் சூழ ஆதிசேடன் சுமந்து கொண்டிருப்பான், இதற்கு மேலே பூமி. அதனுடைய க ன ம் எண்பது இலக்கம் யோசனை. மூன் பாதாளங்களை காக்கிறவர்கள். ஆடகேசர், நாகர்கள், இராட்சதர்கள். இ வ ர் க ளு க் கு ம் இவர்களுடைய பரிவாரங்களுக்குமாக அண்டத்தின் புறப்புறம் முதலாக பூமியின் மேற்புரம் ஈராக ஐம்பது கோடியுண்டு. இனி பூமியையும் அதில் வாசம் செய்கிற அல்லது வாழுகிறவர்களையும் சொல்லுகிறேன் உற்றுக் கேள்

சம்பு, சாகம், குசை, கிரவுஞ்சம், இலவு, கோமேதகம் புத்தரம் என்று ஏழு தீவுகளுண்டு. இந்த ஏழு தீவுகளையும் சம்பு தீவை உப்புக் கடலும், சாகத் தீவை பாற்கடலும், குகன் தீவை தயிர்க்கடலும், கிரவஞ்சைத் தீவை நெய்க் கடலும், இலவத் தீவை கருப்பஞ்சாற்றுக் கடலும், கோமேதகத் தீவை தேன் கடலும், புற்றரத் தீவை நல்லத் தண்ணீர் சமுத்திரமும் பரிவேடம் போல சூழ்ந்திருக்கும். நல்லத் தண்ணீர் சமுத்திரத்துக்கு அப்பாலே சுவர்ண தருக்கள் வளர்ந்திருக்கும். சக்கிர வாளகிரி அதற்கப்பாலே, புறவாழி அதற்கப்பாலே, இருள் நிலம் அதற்கப்பாலே இந்தத் தீவுகளும் சமுத்திரம் மறறுமுள்ள ஒன்றையொன்று சுமந்திருக்கும். முதல் தீவு ஓர் இலக்கம் யோசனை அதைச் சூழ்ந்த கடல்களும், அவ்வளவு மற்றவைகளும், அவைகளைச் சூழ்ந்த கடல்களும், ஒன்றுக்கொன்று இரட்டித்திருக்கும் ஆகவே இவைகளுக்குத் தெ கை இரண்டு கோடி பத்து நாவிலக்கம் யோசனை. அதற்கப்பாலே கிடக்கும் சக்கர வானகிரியின் அகலம் பதினாயிரம் யோசனை. அதைச் சூழ்ந்த புறவழி ஒரு கோடியே இருபத்தேழிலக்கம் யோசனை. அதைச் சூழ்ந்த இருள்நிலம் முப்பத்துக்கோடியே பத்தொன்பது இலக்கத்து பதினாயிரம் யோசனை. அப்பாலே அண்டமொரு கோடி. ஆக பூமியின் அகலம் ஒரு பாதி ஐம்பத்தைந்து கோடி. நான் சொன்ன இந்தக் கணக்கை வடமேற்காகவும், கிழக்கு மேற்காகவும் வைக்க நூறுகோடியுண்டு. தாமரை புட்டத்திலிருக்குமாப் போலத் தேவருடைய வலது புயத்திலே வந்தது. புவன்ற சொல்லப்பட்ட இராச விவேதனாகிய முருக மூர்த்தியினுடைய விரதத்தை அனுட்டித்து பூமண்டல முட்டாக ஒரு குடைநிழலிலே ஆண்டான். அவனுடைய பிள்ளைகள் அங்கிரர். பதாதி, லகுட்டு, விதாதி, புறதிட்டு, துதியாவியன், தவன் என்று சொல்லப்பட்ட ஏழு பேரும் ஒவ்வொரு தீவை ஆண்டார்கள். அவர்களுக்குள்ளே சம்புத்தீவை ஆண்டவனாகிய அங்கிரன் தன்னுடைய பிள்ளைகளான பரதன், கிம்புருடன், கேதுமாவன், பிரத்திவத்தினி, பாராவிரதன், ரவி, அனவன், இரணியன், குரு என்று சொல்லப்பட்ட ஒன்பது பேருக்கும் சம்புத் தீவை ஒன்பது கண்டமாகக் கொடுத்தான். இந்த சம்புத் தீவுக்கு மத்தியிலே மகரமேடு பர்வதம் தாமரைக் காய்போல் நிற்கும். அதின் உயரம் எண்பத்து நாலாயிரம் யோசனை. பூமிக்குள்ளே தாழ்ந்தளவு பதினாயிரம் யோசனை. மேலகலம் முப்பத்திராயிரம் யோசனை. அடி அகலம் பதினாயிரம் யோசனையுண்டு. அதற்கு மூன்று மேகலை உண்டு. மூன்றிலும் மேல் மேகலையிலே பல பல கொடுமுடிகள் காணும். மகாமேருவுடைய மத்தியிலே பிரம்மாவுடைய மனோபதி என்னும் பட்டணம். அதற்கு மேற்கிலே விட்டுணு வாழும் வைகுந்தம். வடகிழக்கிலே பரமேசுவரன் வாழும் சோதி. அட்ட திக்கிலும் தேவேந்திரன் முதலானோர்கள் இருக்கும் பட்டணங்கள். தெற்கே இருந்து வடககே போக அந்த மகாமேருவின் அடிவாரத்திலே தலைகீழாக ஒரு முளைஞ்சி இருக்கிறது. அந்த மகா மேருவுக்கு கிழக்கு புறத்திலே மந்திரமலை, நிறம் வெண்மை. தெற்கு புறத்திலே காந்த மாதனம் நிறம் பொன்மை. மேற்கு புறத்திலே விபுலம், நிறம் நீலம். வடக்குப்புறத்திலே சுவரசுபம் நிறம் மாதளம்பூ. மகாமேருவைத் தழுவி அடிவாரத்திலே நிற்கும் இந்த நான்கு மலைகளுக்குள்ளே மந்திர மலையிலே கடம்பும், கந்த மாதனத்திலே நாவலும், விபுலத்திலே அககம், சுவரகபத்திலே ஆலும் நிற்கும். இதற்குள்ளே தெற்கு மலையில் நிற்கும் நாவல் மரம் இரண்டா

யிரம் யோசனை உயரம், மற்ற மூன்றும் ஆயிர மாயிரம் யோசனை. கீழ்ப்புறத்திலே அருண வாவி, மேற்புறத்திலே அசிதோதம். தென் புறத்திலே மானதம், வடபுறத்திலே மாமடி என்னும் வாவிகளும், கீழ்ப்புறத்திலே ஷயத்திர சோலை தென்புறத்திலே நந்தனம், மேற்புறத் திலே வைப்பிரசம், வடபுறத்திலே துருத்தாக்கி யம் என்ற சோலைகளும் மகாமேரு மலைச் சார லிலே இருக்கும். தென்புறத்திலே முன் சொன்ன நாவல்மரம் நிற்கும். தன்மை யினாலே பரதனுடைய காண்ட முற்றும் நாவல் தீவு என்னும் ஒரு பேர் பெற்றுக்கொண்டது.

இந்த நாவல் பழச்சாறு ஆறு போல மகா மேருமலையைச் சூழ்ந்து வடக்கே ஓடி சாம்பூந்த தீர்த்தம் என்னும் பேர் பெற்றிருக்கும். அதை உண்டவர்கள் சரீரம் பொன்மயமாய் பதிமூன் றாயிரம் வருஷம் இருப்பார்கள், அடிவாரத்தி லிருக்கும் மலைகளும் மகாமேருவுக்கு அசை அரைவாசி அதற்கு கிழக்கே மாலியாவானும், மேற்கே சுந்த மாதளமும், தெற்கே நிஷதவ மும், ஏமகுடமும் இமயமும், வடக்கிலே நீலமுற் சுவேதமும், சிறுந்தவுமாகிய அட்ட மலைகளும் கிடக்கும். இவைகள் ஒவ்வொன்றுக் கும் நீலம், பொன்மை, வெண்மை, சந்திர காந் தம் இந்த நிறங்களுமுண்டு. தெற்சனத்திலி ருந்து நிஷதற், வாட கூடம், இமயம் என்று சொல்லப்பட்ட மூன்று மலைகளும், கிழக்கே சமுத்திரமும், மேற்கு சமுத்திரமட்டாக மேலே உயரமட்டாக சொல்லப்பட்ட சுவேதமும், சுருக்கமாகிய மூன்று மலைகளும் கிடக்கும். இந்த எட்டு மலைகளுக்கும் உயரம் ஒவ்வொன்றும் இரண்டாயிரம் யோசனை. கிழக்கிலும் மேற் கிலும் சொல்லப்பட்ட மாலியவான், சுந்த மாதனம் எனும் மலைகளிரண்டும் ஒவ்வொன் றும் அகலம் பதினாயிரம் யோசனை. மற்ற ஆறு மலைகளுக்கும் அகலம் இரண்டாயிரம் யோசனை. இனிவகுத்த நவ கண்டங்களையும் சொல்லு கிறேன்.

நவ கடல் தொட்டு சிறுங்கம் என்று சொல்லப்பட்ட மலையளவு குரு வருடம் என்று சொல்லப்பட்ட கண்டம். சிறுங்கநகரம் தொட்டு சுவேத முனியம் இரணிய கண்டம். சுவேதத்துக்கும் நீல மலைக்குமிடையே இரமிய கண்டம். மகாமேருவில் நிற்கிற கண்டம இளா விரதம். சுந்த தானத்துக்கும் மேற்கு சமுத் திரத்துக்குமிடையே கேது மாலிய கண்டம். மாதேவனுக்கும் தெற்கு சமுத்திரத்துக்கு மிடையே சுபத்திர கண்டம். ரிஷித்தம் முத லான ஏமகூடம் எமகண்டத்துக்கும் இதற் கிடையே கிம்புருவ கண்டம். சமுத்திரத்திற்கும் இமயத்திற்கு மிடையே பரத கண்டம். கேது மான் கண்டமும் பத்திர கண்டமும் முப்பத்து நாலாயிரம் யோசனை. மற்ற கண்டங்கள் ஒன் பதினாயிரம், ஒன்பதினாயிரம் யோசனை, குரு வருடம் என்னும் கண்டத்திலே இருக்கிற வருஷன் ஒரு பொழுதிலே மாதாவினுடைய வயிற்றிலே ஆணும், பெண்ணுமாகப் பிறந்து விவாகம் பண்ணிக் கொள்வார்கள். அவர்கள் அணியும் பூ : கோட்டுப் பூ. உணவு : கனியும், காயும். நிறம் : பச்சை. வயது பதிமூவாயிரம் வருஷம்.

அந்தக் காண்டத்துக்கு வடக்கிலே ரிஷி களும், சித்தர்களும் பளிங்கு நிறத்துடனே பதிமூவாயிரம் வருஷத்துக்கு இருப்பார்கள். பத்திர சுகம் என்னும் கண்டத்திலே இருகிறவர் கள் காயும், கானியும் உண்கிறவர்கள். பதி மூவாயிரம் வருஷத்துக்கு இருக்கும். சிவந்த சரீரம் உள்ளவர்கள். இரணிய கண்டத்தி லிருக்கிறவர்கள் பழங்களை உண்பவர்கள், சந்தி ரனைப்போல வெண்மையுடையவர்கள். இவர் களுக்கு இரண்டாயிரத்து முப்பது வயதுண்டு. இரணிய கண்டத்தில் வாழ்கிறவர்கள் ஆலம் பழம் உண்கிறவர்கள். குவளைக்குடம் போல நிறமுள்ளவர்கள். அவர்களுக்கு வயது பன்னி ராயிரம் வருஷம் இலா விரதம் என்னும் கண்டத்திலுள்ளவர்கள் வெண்மை நிறத்தை யுடையவர்கள். உணவு, கருப்பஞ்சாறு, வயது பன்னீராயிரம வருஷம். கேதுவா கண்டத்தி லிருக்கிறவர்கள் உணவு குவளை பத்திலே இருக் கும் தேனும் தாளப் பழமும் ; வயது பன்னீரா யிரம் வருஷம். அரி கண்டத்திலிக்கிறவர்கள் உண்கிறது காயும், கனியும்; வயது பதினாயிரம் வருஷம், நிறம் வெண்மை. கிம்புரு கண்டத்தி லிருக்கிறவர்கள் உண்கிறது அத்திப் பழம். நிறம் பொன்மை ; வயது பதினாயிரம் வருஷம். ஏம குடத்துக்கு தெட்சிணமும் இமயத்துக்கு உத்திரமான மத்தியிலே கபிலாஷகிரி நிற்கும். அதன் மீது மூன்று கண்டங்களையுடைய கர்த்தா வாகிட பரமேசுவரன் தேவியுடனே இருப்பார்.

(தொடரும்)

# வேத பாடம்

(தொடர்ச்சி)

## லேவியராகமம் 23ம் அதிகாரம் :

இந்த அதிகாரத்தில் இஸ்ரவேலருடைய பிரதான பண்டிகைகள் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த பண்டிகைகள் குறித்த காலத்தில் ஆசரிக்கும்படியாய் யேகோவாவினால் கட்டளை உண்டாயிற்று (லேவி. 23:4).

1) வார ஓய்வு நாள் பண்டிகை (லேவி. 23:2-3)
2) வருஷத்திற்கு ஒரு முறை பஸ்கா பண்டிகை (லேவி. 23:4,5)
3) புளிப்பில்லாத அப்பப் பண்டிகை (லேவி. 23: 6-8)
4) முதற் பலன்களை செலுத்துவதற்கு (லேவி. 23: 9-14)
5) வருஷத்திற்கு ஒரு முறை பெந்தெகொஸ்தே பண்டிகை (லேவி. 23: 15-21)
6) வருஷத்திற்கு ஒரு முறை எக்காள சத்தப் பண்டிகை (லேவி. 23: 23-25)
7) வருஷத்தில் ஒரு முறை பாவ மன்னிப்பு பண்டிகை (லேவி. 23: 25-32) இது பெரிய உபவாச நாளாகும்.
8) கூடாரப் பண்டிகை வருஷத்தில் ஒரு முறை (லேவி. 23: 33, 34).

இந்தப் பண்டிகைகளுக்கு வெவ்வேறு பெயர்களும் கொடுக்கப்பட்டிருந்தன. வாரங்களின் பண்டிகை என்றும், முதற் பலன் செலுத்துகிற பண்டிகை என்றும் பெந்தெகொஸ்தே பண்டிகை என்றும் அறுப்பின் பண்டிகை என்றும் சேர்ப்பின் பண்டிகை என்றும் பெயர்கள் கொடுக்கப்பட்டிருந்தன. இவைகளிலே மூன்று பிரதான பண்டிகைகளில் ஆண் மக்கள் எல்லாரும் கண்டிப்பாக தேவ சந்நிதியிலே கூடி வர வேண்டும்.

1) பஸ்கா பண்டிகை (யாத். 12ம் அதிகாரம் : 23: 14-17)
2) பெந்தெகொஸ்தே பண்டிகை (லேவி. 23:15-21 ; யாத். 23: 16-17).
3) ஆசரிப்புக் கூடார பண்டிகை (லேவி. 23: 33-44 ; யாத். 23: 17; 34: 18-22; II நாளா. 8: 13)

இன்னும் பல பண்டிகைகள் இஸ்ரவேலிலே காணப்பட்டது.

## பண்டிகைகளின் அர்த்தம் :

1) வாரங்களின் பண்டிகை அல்லது ஓய்வு நாள் பண்டிகை.

ஒவ்வொரு கர்த்தருடைய நாளிலும் தேவ ஜனங்கள் ஓய்ந்திருந்து கர்த்தருக்கு ஆராதனை செய்யவேண்டும். தங்களுடைய உலக வேலையை விட்டு ஆத்மீகத்துக்காக செலவழிக்கவும், இறைவனைத் தேடவும் வேண்டும் என்று அறிவிக்கிறது.

2) பஸ்கா பண்டிகை :

நாம் இரட்சிக்கப்பட்டது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் விலையேறப் பெற்ற இரத்தத்தினால். அவருடைய பலியினால் நாம் இரட்சிக்கப்டோம் என்பதை ஞாபகப்படுத்தும்படியாக இந்தப் பண்டிகை கொண்டாடப்பட்டது. புதிய ஏற்பாட்டிலே வாரந்தோறும் அது ஆசரிக்கப்பட்டதாக பார்க்கிறோம். (அப். 2: 42; 20: 7; I கொரி. 16: 2).

3) புளிப்பில்லா அப்பப் பண்டிகை :

தேவ ஜனங்கள் புளிப்பில்லாதவர்களாக, பாவமில்லாதவர்களாக இருக்க வேண்டும். தங்களை பரிசுத்தப்படுத்திக் கொள்ளவேண்டும். புளிப்புள்ள அப்பம் புற ஜாதியார் உபயோகிப்ப தாகும். தேவ ஜனங்கள் புளிப்பில்லாதவர்களாக இருக்க வேண்டும்.

4) முதற் பலன்கள் செலுத்துதல் :

கர்த்தர்தான் நமக்கு விளைச்சலைக் கொடுக்கிறார், ஆசீர்வாதத்தைக் கொடுக்கிறார், வருவாயைக கொடுக்கிறார். அதனின் முதற் கனியைக் கர்த்தருக்குச் செலுத்தி, கர்த்தருடைய நாமத்தைக் கனப்படுத்த வேண்டும் (நீதி. 3:9, 10).

5) பெந்தெகொஸ்தே பண்டிகை :

இது சேர்ப்பின் காலம். தேவனுடைய ஜனங்கள் பரிசுத்த ஆவியினால் அபிஷேகம் செய்யப் பட்டு பரலோக வாசிகளாய் சேர்க்கப்பட்டுக்கொண்டு வருகிறார்கள். அது முதற்கொண்டு சேர்ப்பின் காலமாக இருக்கிறது என்பதை அறிவிக்கிறது.

6) எக்காள சத்தத்தைக் குறிக்கும் பண்டிகை :

தேவ ஜனங்கள் கர்த்தருடைய சமூகத்திலே மகிழ்ச்சியாக இருக்கிறோம் என்பதை ஞாபகப் படுத்துகிறது.

7) பாவ நிவாரண நாள் :

தேவ ஜனங்கள் தற்பரிசோதனை செய்து தங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டு சுத்த முள்ளவர்களாக காணப்பட வாய்ப்பளிக்கிறதாக இந்தப் பண்டிகை காணப்படுகிறது.

8) ஆசரிப்புக் கூடார பண்டிகை :

கூடாரப் பண்டிகை, நாம் இந்த உலகில் பரதேசிகளாய் இருக்கிறோமென்றும், வரப் போகிற ராஜ்யத்திற்காய், நகரத்திற்காக, அந்தத் தங்கப்பட்டணத்துக்காக காத்திருக்கிறோம் என்பதை இது அறிவிக்கிறது. (I பேது. 1; 2,3) கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்.

## லேவி. 24ம் அதி.

லேவி 24: 1-4 : குத்து விளக்கு

தேவ சந்நிதானத்திலே எப்பொழும் எரிந்து கொண்டிருக்க தேவ ஜனங்கள் இடித்துப் பிழிந்த தெளிவான ஒலிவ எண்ணெயைக் கொண்டுவந்து காணிக்கையாய்ச் செலுத்துவது. ஆரோன் சாட்சி பெட்டி இருக்கும் மகா பரிசுத்த ஸ்தலத்துக்கு வெளியே பரிசுத்த ஸ்தலத்தில் இதை சாயங்காலம் தொடங்கி விடியற்காலை மட்டும் எரியவிட வேண்டும். இந்த பரிசுத்தமான குத்துவிளக்கு எரிந்து கொண்டிருக்க வேண்டும் (லேவி. 24:4)

## லே. வி. 24.5-9 :

தேவ சமூகத்து பரிசுத்தமான மேஜையின்மேல் இரண்டு அடுக்காக ஆறு ஆறு அப்பங்கள் சுடச்சுட செய்து தேவ சமூகத்தில் படைக்கப்பட வேண்டும். அந்த அடுக்குகளின் மேல் தூப வர்க்கமிட வேண்டும். தேவ சந்நிதானத்திலே இது ஞாபகக் குறியாக இருக்கும். தேவ ஜனங் களுக்கு அப்பம் இறைவனிடத்திலிருந்து அருளப்படும் என்பது. ஓய்வுநாள் தோறும் இந்த அப்பம் மாற்றப்பட்டு புதிய அப்பம் அடுக்கப்பட வேண்டும். எடுக்கப்படுகிற அப்பத்தை ஆரோனும் அவனுடைய குமாரரும் தேவ சந்நிதானத்திலே புசிக்க வேண்டும் என்பதாம்.

**லேவி. 24:10-16 :**

எகிப்திய புருஷனுக்கும இஸ்ரவேல் ஸ்திரீக்கும் பிறந்த ஒருவன் கர்த்தருடைய நாமத்தைத் தூஷித்தான். அவனுடைய தாயின் பேர் செலோமித். கர்த்தருடைய ஆலோசனையின் பிரகாரம் கர்த்தருடைய நாமத்தைத் தூஷித்தவன் கொலை செய்யப்பட வேண்டும் என்ற கட்டளையின்படி கொல்லப்பட்டான்.

**லேவி. 24 : 17-22 :**

பழிக்குப் பழி வாங்கப்பட வேண்டும். ஒருவன் பிறனுக்கு எவ்விதமாக இடையூறு செய்து நஷ்டம் செய்தானோ அவ்விதமாக அவனுக்கும் நியாயத் தீர்க்கப்பட்டு தண்டனை வழங்கப்பட வேண்டும். அது நியாயாதிபதிகளின் தீர்ப்பின்படி செய்யப்பட வேண்டும். பழிக்குப் பழி மனிதர்கள் தானே வாங்காதபடி நியாயாதிபதிகளின் தீர்ப்பின்படி அது செய்யப்பட வேண்டும் (யாத். 21:22-25)

(தொடரும்)

---

'' நம்முடைய பண்டிகைகள் ஆசரிக்கப்படும் நகரமாகிய சீயோனை நோக்கிப் பாருங்கள்''

(ஏசா. 33:20)

---

## கிறிஸ்தவ திருமணம் (தொடர்ச்சி)

**மண் இன்பத்தின் நுழைவாயில்கள் :**

ஒரு நாட்டில் இரண்டு அரசர்கள் இருக்க முடியாது என்று சொல்லுவார்கள். உங்கள் மணவாழ்க்கை என்னும் சாம்ராஜ்யத்திலும் பல சமயங்களில் உங்கள் அபிப்பிராயங்களுக்குள், உங்கள் முடிவுகளுக்குள், உங்கள் தீர்மானங்களுக்குள் மோதல்கள் ஏற்படாமலிருக்க உங்களிருவருடைய மனமும் முதிர்ச்சி அடைய வேண்டும் இத்தனை ஆண்டுகளாக உங்கள் வாழ்க்கையில் தனிக்காட்டு ராஜாவாக உங்கள் வீட்டிலே நீங்கள் நடந்துவந்திருக்கலாம். இவர் சொன்னால் சொன்னதுதான் என்று பெருமிதம் பொங்கும் குரலில் நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு நீங்கள் சொன்னதுண்டு. உங்கள் வாழ்வைப் பற்றிய எல்லா முடிவுகளையும் நீங்களே செய்திருக்கிறீர்கள். இப்படி இத்தனை ஆண்டுகளைக் கழித்த பின்னர்தான் திடீரென்று மணவாழ்க்கையில் வந்து புகுந்திருக்கிறீர்கள். கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தீர்களானல் உங்கள் இல்லத்தரசியும் இதே போன்றுதான் தனிக்காட்டு ராணியாக எதை நினைத்தாலும் நடத்திக் காட்டினவராக இவள் சொன்னல் சொன்னதுதான் என்று பெருமிதம்பொங்கக் கூறியவராக இருந்திருப்பார். தம் வாழ்க்கையைப் பற்றிய முடிவுகளை தயங்காமல் மேற்கொண்டு நிறைவேற்றினவராக இருந்திருப்பார். திடீரென்று அவரும் உங்களைப் போன்று பல ஆண்டுகள் சுதந்தர வாழ்க்கைக்குப் பின்னர் மணவாழ்வில் வந்து புகுந்திருக்கிறர். கருத்து மோதல்கள் ஏற்படும்பொழுது நிதானமாக சிந்திக்கவும், விட்டுக் கொடுக்கவும் நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித் தன்மைகள் சில உண்டு. ஆகவே மனிதர்கள் ஒன்று கூடும்போது கருத்து வேறுபாடுகள் தோன்றத்தான் செய்யும். இது இயற்கை. உங்கள் வேறுபாடுகளை மனதின் ஆழத்தில் போட்டு புதைத்து வைக்காதீர்கள். பிரச்சினைகளுக்கு தீர்வு காணும் முறை அது வல்ல. மனம் விட்டுப் பேசுங்கள், உரையாடுங்கள், சுயநலமற்ற முறையில் பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து நல்முடிவுகளை இருவரும் ஒத்துக் கொள்ளுங்கள். நீங்கள் சுறுசுறுப்பும் துடிப்பும், வாழ்க்கையில் சிறந்த செயல்களையாற்ற வேண்டும் என்ற ஆர்வம் கொண்டவராக இருந்தால் உங்கள் மனைவியிடம் நீங்கள் மிக அதிகமாக முட்டி மோதிக்கொள்ள நேரிடும். அப்படியானல், நீங்கள் சற்று ஆழ்ந்த சிந்தனையுடன் செயலாற்ற வேண்டும். நினைத்தவை

களெல்லாம் நடக்கவேண்டுமென்று எண்ணுவது குழந்தைத்தனம். ஆசைகளுக்கும், விருப்பங்களுக்கும் கடிவாளம் போட்டு அடுத்தவரைப் பற்றிச் சிந்தித்து விட்டுக் கொடுத்து நடந்து கொள்ளுங்கள், நீங்கள் மனப்பயிற்சி பெற்றிருக்கிறீர்கள் என்பதை இது காட்டும்.

கொடுக்கக் கற்றுக்கொள்ளுங்கள் :

நீங்கள் பெறுகின்றவகையராய் இருக்கின்ற வரையில் உண்மையான இன்பத்தைக் காண முடியாது. கொடுக்கின்ற கை, உங்கள் வசதிகளை, உங்கள் கருத்துக்களை, உங்கள் அறிவை, உங்களுக்குரிய எல்லாவற்றையும் உங்களுடையதாக கொடுக்கும்போதுதான் நீங்கள் உண்மையாக இன்பத்தைக் காணுகிறவர்களாக இருக்க முடியும். காண்போமே பாதி பாதி என்று ஒரு பாட்டில் பாடினதை கேட்டிருக்கிறோம். பாட்டைப்பாடும் இந்த தம்பதியார் இல்லற சுகத்தை பங்குபோட்டு பாதி பாதி எடுத்துக் கொள்ளப் போகிறார்களாம். இது சரியான மனப்பாங்கு அல்ல. மண வாழ்வில் சுகத்தில் உங்கள் பங்கு பாதியல்ல பூஜியமே. நீங்கள் உங்கள் பங்கை உரிமையாகபெற முயலவதினால் மகிழ்ச்சியை பெற்றுவிட முடியாது. உங்களுக்குரிய எல்லாவற்றையும் கொடுக்க முயற்சி செய்வதின் மூலமாகவே நீங்கள் உண்மையான மகிழ்ச்சியைப் பெறமுடியும். இயற்கையின் பொருளாதாரம் எப்படித் தெரியுமா? நீங்கள் எதையும கொடுக்க கொடுக்கத்தான் பெற ஆரம்பிக்கிறீர்கள். அன்பை அள்ளிக் கொடுங்கள். மரியாதையை, மன்னிப்பை, பெருந்தன்மையை, பண்பாட்டை அருளை வாரிக் கொடுங்கள். நீங்கள் கொடுத்ததை மிகுதியாகத் திரும்பப் பெறுவீர்கள்.

## வேண்டாமை என்று சுயநலம் :

சுயநலமின்மைதான் உங்கள் மண வாழ்வின் முக்கியமான பாடமாக இருக்க வேண்டும். உங்கள் மனைவியின், சிந்தனை, கருத்து' எண்ணம் போன்றவைகளை அறிந்து கொண்டு உங்களுடையவைகளையும் ஒப்பிட்டுப் பார்த்து நீங்கள் ஒரு சுயநலம் கலவாத முடிவுக்கு வர கற்றுக்கொள்ள வேண்டும்.

## பணிவு :

இது சமஉரிமைக் காலம். ஆண்களோடு சரிநிகர் சமமாக பெண்கள் வாழத் துடிக்கின்ற காலம். காலவேகத்தின் மாற்றங்களை அணை போட்டுத் தடுக்க முடியுமா?

உங்கள் மனைவியுங்கூட பாரதியாருக் கென்ற இத்தகைய ஒரு புதுமைப் பெண்ணாக இருக்கலாம். ''பட்டங்கள் ஆளவும், சட்டங்கள் செய்யவும் புறப்பட்டு எட்டும் அறிவினை ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை'' என்ற முழக்கமிடுபவராக இருக்கலாம். சமுதாயத்தில் பெண்களுக்கு சமஉரிமை வேண்டும் என்பதை செயலிலும் காட்டலாம். ஒரு முன்னேற்றக் கருத்துள்ள ஆண்மகனாக இவை எல்லாவற்றையும் நீங்கள் வரவேற்பது சரிதான். ஆனால்...

நத்தைக் கணவனாக ஆகிவிடாதீர்கள். சம உரிமை பிரச்சனைகள் சமுதாய அளவில் இருக்க வேண்டுமேயொழிய குடும்பத்திற்குள்ளே வந்து விடக்கூடாது. பாரதியார் கருத்துப்படியே,

''மாதர் அறங்கள் பழமை யைக்
காட்டிலும் மாட்சி பெறச் செய்து
குடும்ப வாழ்க்கை நடத்தலே சிறப்பு''

கணவனை ஆளுகின்ற மனைவியோ மனைவியால் ஆளப்படுகின்ற கணவனோ மகிழ்ச்சியாக இருக்கவே முடியாது குடும்பத்தின் தலைமைப் பொறுப்பு உங்களிடம் இருக்கும் வரைதான் மகிழ்ச்சி நிலவும் உங்கள் மனைவியிடம் பணிவும் கீழ்ப்படிதலும் இருக்கவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்ப்பது நியாயந்தான். உங்கள் மனைவியின் பணிவுதான் நீங்கள் தலைமைப் பொறுப்பு ஏற்று ஆளுதற்குரிய சக்தி. உங்கள் மனைவியின் அன்பு கலந்த கீழ்ப்படிதல் தான் உங்களை குடும்பத் தலைவனாக ஆக்க முடியும். மனைவி ஆளுகின்ற குடும்பத்தில், கணவன், தன் ஆர்வம், சுறுசுறுப்பு, ஊக்கம் இவைகளையெல்லாம் சிறிது சிறிதாக சுருட்டி வளைத்து நத்தையைப் போன்று கூட்டுக்குள்ளே பதுங்கி விடுகிறான். சில வீர மிகுந்த ஆண்கள் திருமண தளையையே வெட்டிக் கொண்டு விடுகிறார்கள். இதில் பரிதாபம் என்னவென்றால் இந்த இரண்டிலும் பெருமளவு துன்புறப்போவது பெண்கள் தான். தன் கணவனை அடக்கி ஆளுகிற மனைவியினால் எதிலுமே திருப்தி காணமுடியாது: அவள் சிடு சிடுப்பும் வெடு வெடுப்பும் நிறைந்த

வளாய் தன்னுடைய பிள்ளைகளாலும், கணவனாலும் ஏன் சமுதாயத்தாலும் இறுதியில் தன்னாலுங்கூட வெறுக்கப்படத்தக்கவளாகி விடுவாள்.

## பணிவைக் கற்றுக் கொடுப்பது.

உங்கள் மனைவிக்கு பணிவையும், அடக்கத்தையும் கற்றுக்கொடுக்கும் பொறுப்பு உங்களுடையதாகும். அதுவும் உங்கள் திறமையையும், அறிவுக் கூர்மையையும் உங்கள் மனைவியின் தன்மையையும் பொறுத்தது. கொஞ்சம் பொறுங்கள். பணிவு என்றால் என்ன ? பணிவு என்றால் நிச்சயமாக அடிமைத்தனம் என்று பொருளல்ல. பணிவு என்றால் அறிவோடு பொருந்திய முடிவுகளை அன்போடு ஏற்றுக் கொள்ளுதல். பணிவு என்றால் அன்போடு கீழ்ப்படிதல், பணிவு என்றால் தலைவருக்கு இணங்கி நடத்தல். பணிவு என்றால் தலைமையை ஒப்புக் கொள்ளுதல். இத்தகையதோர் அன்பு கலந்த பணிவை உங்கள் மனைவி அணிகலனாக பெற்றிரா விட்டால் உங்களிடையே சுமுகமான மகிழ்ச்சியான உறவு இருக்க முடியாது. இந்தப் பணிவு உங்கள் மனைவியிடம் மாத்திரமல்ல உங்களிடமும் இருக்கவேண்டும்.

## அன்பு

திருமணமான புதிதில் நீங்கள் உங்கள் மனைவியின் மேல் அபரிமிதமான அன்பைப் பொழிவீர்கள். ஏறக்குறைய எல்லாத் திருமணங்களும் ஆரம்பத்தில் அன்பும், பாசமும் நிறைந்ததாகத்தான் துவங்குகின்றன. முப்பது நாளுக்குரியதாக சொல்லப்படும் மோகமும், அறுபது நாளுக்குரியதாக சொல்லப்படும் ஆசையும் முடிந்த பின்னர் எஞ்சியிருப்பது தான் உண்மையான அன்பாக இருக்க முடியும். இந்த அன்பு உள்ளத்தின் ஆழத்தில் இருந்து புறப்படுவது. உடலைமட்டும் சார்ந்திராதது. இந்த அன்புதான் உண்மையில் உங்கள் மண வாழ்வின் மகிழ்ச்சிக்கு அடிப்படை.

## அன்புக்கும் உண்டோ அடைக்குந்தாழ்

அன்புள்ளோருடைய தன்மைகளில் கீழ்க் கண்டவற்றைக் குறிப்பிடுகிறார் பவுல். உங்கள் அன்பின் தன்மைகளை இந்தப்பட்டியலுடன் ஒப்பிட்டுப் பார்த்து சரி செய்து கொள்ளவும்.

அன்புள்ளவர், பொறுமையுள்ளவர், அவர் பரிவுள்ளவர் அவரிடத்தில் பொறாமை இருப்பதில்லை. வெறுப் புகழ்ச்சிகளிலும், வார்த்தைகளிலும் காலங்களிலும் அவருக்கு நாட்டமில்லை. அவர் தற்பெருமைக்காரரல்ல. அவருக்கு எளிதில் கோபம் வருவதில்லை. பழிக்குப் பழிவாங்க எண்ணுவதில்லை. மற்றவர் தனக்குச் செய்கிற தீங்குகளை மனத்தாலும் எண்ணுவதில்லை. அவருடைய மகிழ்ச்சி அநியாயமாக நடந்து கொள்கிறதல்ல. நேர்மையாக நடந்து கொள்வதில் அடங்கி இருக்கிறது. எல்லாவற்றையும் அவர் பொறுமையோடு தாங்கிக் கொள்கிறார். அனைத்தையும் நம்புகிறார். எல்லாவற்றையும் நம்பிக்கையுடனே எதிர் நோக்குகிறார். பணமோ, பட்டுப் புடவைகளோ, நகைகளோ, திரைப்படங்களோ, பலகார பதார்த்தங்களோ, பாத்திரங்களோ, சொத்து, வீடு வாசல்களோ மனைவிகளை திருப்தியாக்கி விடுவதில்லை. கிறிஸ்தவப் பெண்கள் மிகவும் எளிமையானவர்கள். வெறும் அன்பு ஒன்றே அவர்களை திருப்தியாக்க முடியும். அன்பு நிறைந்த கனிவான பேச்சு, அன்புடன் அவளது எண்ணங்களையும் தேவைகளையும் உணர்ந்து நடந்து கொள்ளுதல் போன்ற செயல்கள் மூலம் நீங்கள் அவளை மனநிறைவுள்ள மனைவியாக மாற்றிவிட முடியும். வேளா வேளைகளில் இப்படிச் சொல்ல வேண்டும் "நான் உன்மேல் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறேன் தெரியுமா ? இந்தத் தாரக மந்திரம் ஒன்றே உங்கள் மனைவியைக் கீழ்ப்படிதலுள்ள, அன்புள்ள மனைவியாக மாற்ற முடியும்.

## உடலைச் சார்ந்திரா அன்பு :

என் மனைவியா ராட்சஷியாயிற்றே என்று வெளியே சொல்லாவிட்டாலும் மனத்தால் நினைப்பவர்கள் அநேகருண்டு. தன் மனைவிக்கு தன்னிடத்தில் போதுமான அன்பில்லை என்று எண்ணுபவர்கள் பலர் இருக்கிறார்கள். உண்மையில் குற்றஞ்சாட்டப்பட வேண்டியவர்கள் இவர்களாகவே இருக்கலாம். அன்பு தீப்பந்தம் போல் தொடுகிறவைகளை யெல்லாம் பற்றி எரியச் செய்யக்கூடியது. இனி எத்தனை பிறவி எடுத்தாலும் நீதான் எனக்கு மனைவியாக வந்து வாய்க்க வேண்டும் என்று எந்தக் கணவனால் மனமார பல ஆண்டுகளுக்கும் பிறகு கூற முடியுமோ அந்தத் தம்பதியரிடையே உடலைச்

சார்ந்திராத ஒரு ஆழ்ந்த அன்பு வளர்ந்திருக்கிறது என்று சொல்லலாம். அன்பினுடைய ஒன்பது தன்மைகளாக கீழ்க்கண்டவைகளை ஒரு ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

பொறுமை, பரிவு, பெருந்தன்மை, தாழ்மை, இங்கிதம், சுயநலமின்மை, நல்ல சுபாவம், ஒளிவு மறைவு இன்றி இருத்தல், விணயம்.

## உளங்கலந்த உரையாடல் :

மகிழ்ச்சிகரமான மண வாழ்க்கைக்கு இது அத்தியாவசியமானது. ஒன்று, புதிதாக மணமானவுடன் அதிகமாகக் காணப்படுகிற இது ஏனோ நாட்கள் செல்லச்செல்ல குறைய ஆரம்பித்துவிடுகிறது. பாத்ரூமில் இருக்கும் சிலந்தியைப் பற்றியும், பஜாரில் பார்த்த பெண்ணின் சேலையைப் பற்றியும், அன்றைய இரவே ஆர்வத்துடன் கணவனிடம் சொல்லும் மனைவியும் ஆபீஸ் நண்பர்களின் அளப்புகளைப் பற்றியும், பாதையில் பார்த்த சிறு நிகழ்ச்சியைப் பற்றியும் உற்சாகமாக மனைவியிடம் கூறும் கணவனும் மணமாகி சில மாதங்களுக்குப் பின்னர் முக்கியமான பல செய்திகளைக் கூட தங்கள் துணைவியிடம் சொல்லாமல் மறந்துவிடுகிறார்கள், மறைத்து விடுகிறார்கள். கணவன், மனைவி இடையே தோன்றும் பல சண்டைகளின் அடிப்படை பெரும்பாலும் ஏன் நீ அப்பவே என்னிடம் சொல்லவில்லை என்பதை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கிறது. ஒரு பெரியார், திருமணத் தகராறில் பல உளங்கலந்த உரையாடல் இல்லாமையாலே தோன்றுகின்றன என்று சொல்கிறார். தங்களுடைய மன வேற்றுமைகளை மனம்விட்டு ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளும் மனம் படைத்த தம்பதியின் உறவினிடையே காற்றுக் கூட புகுந்துச் செல்ல அஞ்சும். உளங்கலந்த உரையாடலுக்கு முதல் எதிரி சினந்தான். தம்பதியரில் ஒருவர் உண்மை சொல்ல நினைக்கும் போது அடுத்தவர் சினந்து, சீறி நீ இனிமேல் உண்மை சொன்னால் இப்படித்தான் சீறுவேன் என்று சொல்வதைப் போன்ற நடத்தை. உண்மைகளை பொறுமையாக ஏற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது தான் உங்கள் வாழ்க்கைத் துணைவியிடம் எப்போதும் உண்மை வெளிப்படும். பொறுமையோடு ஏற்றுக்கொண்டீர்களென்றால் உங்கள் வாழ்க்கைத் துணைவியிடம் எப்பொழுதும் உண்மையை எதிர்பார்க்க முடியும்.

## மௌன சாமிகள் :

உளங்கலந்த உரையாடலுக்கு மற்றொரு எதிரி மவுனம். சிலருக்கு தங்கள் கோபத்தை வெளிக்காட்டத் தெரிந்த வழி மவுனம். மவுனத்தைப் போன்றதொரு பயங்கரமான கருவி உலகத்தில் எதுவுமில்லையென்று தெளிவாகச் சொல்லுவார்கள். சினமானது வெளிவிட மவுனம் என்னும் தீ பற்றி எரியும்போது அதில் பொசுங்கி சாம்பலாவது எது தெரியுமா? மௌனசாமியின் உடலேதான். மவுனம் என்னும் அணையில் தேங்கி நிற்கும் மனக்கிளர்ச்சிகளால்தான் வயிற்றுப் புண், இரத்த அழுத்தம் போன்ற நோய்கள் தோன்றுவதாக டாக்டர்கள் கண்டுபிடித்திருக்கின்றனர். மனங் கலந்து பேச ஏற்ற நேரம் இரவு நேரந்தான். முன் விரவு நேரம். சிக்கலான விஷயங்களைப் பற்றி இந்த நேரத்தில் பேச ஆரம்பிக்காதீர்கள். இரவில் நிசப்தத்தில் சிக்கல் அதிகமாகத் தென்படும். கண்டதைப் பற்றி இனிமையாக, இதங்கலந்து உரையாடுங்கள். நாள்தோறும் மனங்கலந்து உரையாட ஒரு குறிப்பிட்ட நேரத்தை ஒதுக்கி வைத்துக் கொள்ளுங்கள். அது நல்லது. மனந் திறந்த உரையாடலில் நீங்கள் மறக்கக் கூடாத இரண்டு உரைகள் மன்னிச்சுக்கோ, நான் உன்மேல் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறேன் தெரியுமா. உளம் ஒன்றிய நிலையில் மனதார இந்த மொழிகளை அடிக்கடி தேவைப்பட்ட நேரத்திலெல்லாம் சொல்லுங்கள். உங்கள் மணவாழ்வில் மகிழ்ச்சி பொங்கி வழியும். கணவனை சந்தோஷப்படுத்துவது மனைவியின் கடமை. மனைவியை சந்தோஷப்படுத்துவது கணவனின் கடமை (I கொரி. 7:3).

மகிழ்ச்சி பெறும் வழி ஆரம்பம்.

(தொடரும்)

''வேசித்தனம் இராதபடிக்கு அவனவன் தன் சொந்த மனைவியையும், அவளவள் தன் சொந்தப் புருஷனையும் உடையவர்களாயிருக்க வேண்டும்''

(I கொரி. 7:2)

# சமாதானம்

சுவிசேஷம்

இன்றைய உலகின் அவசியத் தேவை சமாதானமாகும். ஏறக்குறைய உலகமனைத்தையும் மோசம் போக்குகின்ற பிசாசு மனித சமுதாயத்தில் பாவத்தை விதைத்து, ஆங்காங்கு கிளர்ச்சியையும் பகைமையுணர்வையும் வளர்த்து யுத்தங்களை உருவாக்கி, சமாதானம் என்ற நிலை அற்றுப் போகும்படியாகச் செய்துவிட்டான். இவை இப்படியிருக்க, தேசங்களுக்கிடையே சமாதான முயற்சிகளும், உடன்படிக்கைகளும் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. இவைகளின் விளைவு தோல்வியே. ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையிலும் சமாதானம் ஆட்சி செய்யும் பொழுதே உலகளவான சமாதானத்துக்கு வழி வகுக்க இயலும். யுத்தங்களையும், யுத்தங்களின் செய்திகளையும் கேள்விப்படுவீர்கள் (மத். 24:6) என்று கர்த்தராகிய இயேசுகிறிஸ்து முன்னறிவித்த பிரகாரம் சம்பவங்கள் நடந்து கொண்டிருக்கும் இந்தக் கடைசிக் காலத்தில், "சமாதானத்தை உங்களுக்கு வைத்துப்போகிறேன், என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன் (யோ. 14:27) என்று அவரே ஆறுதலான வாக்கருளுகின்றார்.

சமாதானமானது ஒருபோதும் மனித முயற்சியினாலோ, பயிற்சியினாலோ உருவாகக் கூடியது அல்ல. அது பரம்பொருளாகிய தேவனுக்குரியது, தேவனைச் சார்ந்தது. இறைவன் ஒருவரே அந்த சமாதானத்தை மனித சமுதாயத்துக்கு அருள் செய்யமுடியும் என்பதை அறிந்த விண் தூதர்களும் தங்களது வாழ்த்துச் செய்தியில், "உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையும், பூமியிலே சமாதானமும், மனுஷர்மேல் பிரியமும் உண்டாவதாக என்று சொல்லி, தேவனைத் துதித்தார்கள் (லூக். 2:14) என்பதாக லூக்கா தனது சுவிசேஷத்தில் குறிப்பிடுகின்றார். இறைவனால் அருளப்படக்கூடிய இந்த சமாதானத்தை மனிதன் தன் சொந்த முயற்சியினால் அடையத் துடிப்பது ஆதாம் அத்தி இலைகளை தைத்து தன்னை மறைத்துக்கொள்ள பிரயாசப்பட்டதற்கு ஒப்பாக இருக்கிறது. வெயில் ஏறும் பொழுது அந்த அத்தி இலைகள் கருங்கி, நொறுங்கி தன்மானம் காணப்படுமே என்று அவன் நினைக்கக்கூடாமற் போயிற்று. மனித முயற்சியும் இதுபோன்றதே. இரத்தஞ் சிந்தி யுத்தஞ் செய்து சமாதானத்தைப் பெறும் படிக்கு முயலும் மனிதனுடைய முயற்சிகள் பலவீனப் போய்க் கொண்டிருக்கும் இத்தருவாயில், இவையேதுமின்றி நிலைத்து நிற்கும் அழியாத சமாதானத்தை வெகு எளிதில் பெற்றுக்கொள்ள நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வழிகாட்டுகின்றார். மெய்யான தேவசமாதானம் இறைவனிடத்திலின்று புறப்படுகிறது. எந்த ஒரு மனிதனும் தனக்குத் தானே சமாதானத்தை ஏற்படுத்திக்கொள்ள முடியாது. இரண்டு மனிதர்களுக்கிடையே காணப்படும் பிரச்சினையைத் தீர்த்துவைக்க இன்னொரு நபர் அவசியப்படுகின்றார். சில வேளைகளில் நீதிபதிகள் அவசியப்படுகின்றனர். இங்ஙனமே, மனிதனுக்கும் தேவனுக்கும் நடுவே ஏற்பட்டிருக்கின்ற பெரும்பிளவை அகற்றி, கலங்கித் தவிக்கும் மனித சமுதாயத்துக்கு சமாதானத்தை அருட்செய்ய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மிகவும் விரும்புகின்றார்

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை, சமாதானம் அருளும் தேவன் என்று மனிதன் ஏற்றுக்கொள்ளாதவரை, ராஜ்யங்களிலும், தேசங்களிலும், சமுதாயத்திலும், குடும்பங்களிலும், தனி மனிதனுக்குள்ளும் சமாதானம் வரப்போகிறதில்லை. நீதிசெய்யும் நீதிபதியை குற்றவாளிகள் இரண்டுபேரும அவரைத் தங்களது நீதிபதி என்று ஏற்றுக்கொள்ளவில்லை என்றால் அவர் வழங்கும் நீதிக்கு இவர்கள் தூரமானவர்களே. அப்படியே, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை தேவன் என்று ஒத்துக் கொண்டு ஏற்றுக்கொள்ளாதவரை மனிதனது சமாதான முயற்சிகள் தண்ணீரற்ற மேகங்கள் போல பலனற்றுப்போகும் என்பதில் சந்தேகமில்லை.

இயேசு கிறிஸ்து உலகத்தில் இருந்த நாட்களில எருசலேம் நகரத்தைப் பார்த்துக் கண்ணீர் விட்டழுது, உனக்குக் கிடைத்த இந்த நாளிலாகிலும் உன் சமாதானத்துக்கு ஏற்றவைகளை நீ

அறிந்திருந்தாயானால் நலமாயிருக்கும், இப்பொழுதோ அவைகள் உன் கண்களுக்கு மறைவாயிருக்கிறது. உன்னைச் சந்திக்குங் காலத்தை நீ அறியாமற் போனபடியால், உன் சத்துருக்கள் உன்னைச் சூழ மதில் போட்டு உன்னை வளைந்து கொண்டு, எப்பக்கத்திலும் உன்னை நெருக்கி, உன்னையும் உன்னிலுள்ள உன் பிள்ளைகளையும் தரையாக்கிபோடும்... நாட்கள் உனக்கு வரும் (லூக். 19: 41-44) என்று கர்த்தர் மிகவும் வருந்திச் சொன்னார். மனுஷனுடைய வாழ்க்கையில் ஏற்படும் இனம்புரியாத போராட்டங்கள், பிரச்சனைகள் எல்லாவற்றிற்கும் காரணம் உண்டு. இவைகளை நிவிர்த்தி செய்து கொள்ள அவன் மேற் கொள்ளும் முயற்சிகள், பிரயாசங்கள் அவனுக்குத் தோல்வியை ஏற்படுத்தும் பொழுது காரணம் அறியாத அவன் தன்னையே கசந்து கொண்டு தன்னை மாய்த்துக் கொள்கிற சம்பவங்களை நாம் அடிக்கடி கேள்விப்படுகிறோம். அறிய வருகிறோம். சமாதான வழியை அறியாதிருப்பதே இதற்கு முக்கிய காரணம். சர்வலோகத்தையும் திட்டமாய்ப் படைத்து ஆளுகிற தேவன் எல்லாவற்றிற்கும் வழியையும் திட்டம் பண்ணியிருக்கிறார். வழி இல்லாத யாதொன்றும் இவ்வுலகில் இல்லை. வெளிச்சம் வாசம் பண்ணும் இடத்துக்கு வழியையும், காற்று வீசுகிறதற்கு வழியையும், மின்னலுக்கு வழியையும், ஆகாயத்துப் பறவைகளுக்கு வழியையும் வகுத்தவர் சமாதானத்தை மனிதன் பெற்றுக் கொள்ளும்படி அதற்கு மட்டுந்தான் வழியை ஏற்படுத்தாமல் விட்டுவிட்டாரா என்ன ? நீ உனக்குத் தானே வழியை ஏற்படுத்திக் கொள்ளாதே, மனுஷனுக்குச் செம்மையாய்த் தோன்றுகிற வழிகளுண்டு அதன் முடிவோ மரண வழிகள் என்று வேதம் சொல்கிறது. இந்த சமாதான வழியை அறிந்து கொள்வது மனிதனது கடமையாகும்.

சகோதரனே, கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அருளும் சமாதானம் உனக்கு மிகவும் தேவை. தேவனைத் தவிர வேறொருவராலும் வேறொன்றினாலும் நீ சமாதானத்தைப் பெற்றுக்கொள்ள முடியாது, உனக்குக் கிடைத்த இந்த நாளிலாகிலும் உன் சமாதானத்துக்கு ஏற்றவைகளை நீ அறிந்து கொண்டால் நலமாயிருக்கும். இந்தச் சமாதானத்தைப் பெற்றுக் கொள்ளும் வகையை நீ அறியாவிட்டால் உனக்கு ஏற்படப்போகும் ஆக்கினையின் கொடுமை என்னவாக இருக்கும் என்று கிறிஸ்து அறிந்திருந்தபடியினால் கண்ணீர் விட்டு அழைப்புக் கொடுத்தார். "சமாதானத்தை உங்களுக்கு வைத்து போகிறேன், என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன் .." (யோ. 14 : 27) என்றார் சமாதானப் பிரபு. உன் அந்தரங்கத்தில் காணப்படும் அமைதியற்ற வாழ்க்கைக்கு உன் சொந்த பந்தங்கள், நண்பர்கள், நீ வழிபடுகிற வஸ்துக்கள் இவை போன்றவை ஒருபோதும் நிவாரணம் அளிக்கப்போவது இல்லை. பூரண சமாதானம் உடையவரே (தேவன்) உனக்கு சமாதானத்தை அருளமுடியும். அதைப் பெற்றுக்கொள்ளும் வகையைக் காண்பிக்க முடியும். மனித சமுதாயம் இயேசுவைத் தள்ளிப் போட்டு அவர் அருளும் சமாதானத்தை வெறுக்கின்றபடியால் அதற்குச் சமாதானமில்லை. தேவனைத் தள்ளிப்போட்ட மகா கொடிய பாவமானது, மறுபடியும் அவரை ஏற்றுக் கொள்ளும் வரையில் அவனுக்குள் சமாதானத்தை அனுமதிக்காது. நீ கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தேவனென்று அறிந்தும், அவரைத் தள்ளிப்போட்டக் குற்றத்தினால் உனக்கு சமாதானமில்லை. இயேசுவை ஏற்றுக்கொண்டு சமாதானம் பெறும் வகையை அவரிடம் தேடு, கண்டடைவாய். "ஒன்றான மெய்த் தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பினவராகிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன்" (யோ. 17:3). நீ நித்திய ஜீவனைப் பெற்றுக்கொண்டிருந்தால் உனக்குள் சமாதானம் வாசம் பண்ணும். சமாதானம் இந்த உலகத்துக் குரியதல்ல, அது நித்தியத்துக் குரியது. நித்தியத்துக்குரியதை அநித்தியமான உலகத்தில் தேடாதே, கிடைக்காது. நித்தியமானவரிடத்தில் தேடு, பெற்றுக் கொள்வாய் உனக்குக் கிடைத்த இந்த நாளிலாகிலும் உன் சமாதானத்துக்கு ஏற்றவைகளை அறிந்துகொள். நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன் என்று இறைவன் இயேசு திருவுளம் பற்றுகிறார்.

"பொல்லாப்பை விட்டு நீங்கி, நன்மை செய்து, சமாதானத்தைத் தேடி அதைப் பின் தொடரக்கடவன்" (I பேது. 3 : 11)

# அழுக்கு வஸ்திரமும் சாத்தானும்

**சிறுவர் பகுதி :**

ஞாயிற்றுக்கிழமை மாலை நேரத்தில் ஜெமி ஞாயிறு பள்ளிக்குச் செல்வதற்காக ஆயத்த மாகிக் கொண்டிருந்தாள். அவளுடைய அம் மாவும் அவளை குறித்த நேரத்தில் அனுப்பி வைப்பதற்குத் தேவையான ஏற்பாடுகளை செய்து கொண்டிருந்தார்கள். ஜெமிக்கு,தனது பிறந்தநாள் பரிசாக மாமா வாங்கிக் கொடுத்த நீல நிற ஸ்கர்ட் என்றால் மிகவும் பிடிக்கும். அதையே சென்ற இரண்டு நாட்களாக அணிந் திருந்தாள், எனவே அவளுடைய அம்மா, அழுக்குச் சட்டையைப் போடாதே ஜெமி, இதோ இந்த ரோஸ் கலர் சட்டையைப் போட் டுக் கொள், இது உனக்கு மிகவும் அழகாகவும், நன்றாகவும் இருக்கும் என்று சொன்னார்கள். ஆனால் ஜெமியோ கேட்கமாட்டேன் என்று அடம் பிடித்தாள். ஜெமியின் பிடிவாதத்தைக் கண்ட அம்மாவும் சரி உன் விருப்பத்தின்படியே டிரஸ்ஸைப் போட்டுக் கொள் என்று கூறிவிட் டார்கள்.

அன்று ஞாயிறு பள்ளி ஆசிரியர் யோனா அவர்கள் பிரதான ஆசாரியனாகிய யோசுவா என்ற பரிசுத்தவானைப் பற்றி பின்வருமாறு எடுத்துரைத்தார். ஒருநாள் யோசுவா என்ற தேவனுடைய ஆசாரியன் கர்த்தருடைய தூத னுக்கு முன்பாக நின்று கொண்டிருந்தார். அப் பொழுது யோசுவாவின் வஸ்திரம் அழுக்காக இருந்தது. எனவே, சாத்தான் யோசுவாவுக்கு விரோதஞ் செய்ய யோசுவாவுடைய வலது பக் கத்திலே வந்து நின்றான். அதைக் கண்ட நமது ஆண்டவர், யோசுவாவுக்கு சாத்தான் தீமை செய்யாதபடிக்கு சாத்தானைக் கடிந்து கொண் டார். அதன் பின்னர் கர்த்தர் தமக்கு முன் பாக நிற்கிறவர்களை நோக்கி, ''யோசுவாவின் மேல் இருக்கிற அழுக்கு வஸ்திரங்களைக் களைந்து போட்டு, சுத்தமான வஸ்திரங்களைத் தரிப்பி யுங்கள்'' என்று கட்டளையிட்டார்.

இப்பொழுது யோசுவா புதிய, சுத்தமான வஸ்திரங்களை அணிந்திருந்தார். உடனே சாத் தான் அங்கிருந்து போய்விட்டான். இவ்வாறு கதையைச் சொல்லி முடித்த ஆசிரியர் யோனா தனது பிள்ளைகளிடம்,''அன்பான பிள்ளைகளே! அழுக்கான ஆடைகளை நீங்கள் அணிந்து கொண்டிருந்தால் சாத்தான் உங்கள் பக்கத்தில் வந்து உங்களுக்குத் தீமை செய்வான். ஆகவே நீங்கள் எப்பொழுதும் சுத்தமான நல்ல ஆடை களையே அணிந்து வரவேண்டும். மனதையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். அப் பொழுது சாத்தான் உங்களிடம் வராமல் ஓடியே போய்விடுவான்'' என்று கதையின் கருத்தை விளக்கினார்.

வீட்டிற்குத் திரும்பிய ஜெமி முதலாவது காரியமாக தனது அம்மாவிடம் தன்னுடைய கீழ்ப்படியாமைக்காக மன்னிப்பு கேட்டுக் கொண்டாள். அத்துடன், ''அம்மா நான் இனி ஒருபோதும் அழுக்கு வஸ்திரங்களை அணியவே மாட்டேன், ஏனென்றால், அழுக்குச் சட்டை போட்டவர்களின் பக்கத்தில் சாத்தான் வந்து நிற்பானாம்'' என்று அவள் தனது பள்ளியின் பாடத்தை அம்மாவிடம் கூறினாள்.

ஆம், அருமையான குழந்தைகளே; நாம் நம்முடைய வஸ்திரத்தை மட்டுமல்ல, நம் முடைய வாழ்க்கையையும் தூய்மையாக வைத் துக் கொள்ள வேண்டும். நாம் பொய் சொல் லக் கூடாது. பிறருடைய பொருளை எடுத்து வைத்துக் கொள்ளக் கூடாது. கோபத்தோடே மற்றவரிடம் பேசக் கூடாது. நாம் எப்பொழு தும் மற்றவர்களிடம் அன்புடன் பேசவேண்டும். மற்றவர்களுக்கும் நம்முடைய பொருளை அவ சியமான நேரத்தில் கொடுத்துதவ வேண்டும். பெற்றோருக்கும்,பெரியோர்களுக்கும் மரியாதை செய்ய வேண்டும், கீழ்ப்படிய வேண்டும். அவ் வாறு செய்தால் சாத்தான் நமது பக்கத்திலே வரவே மாட்டான்.

''யோசுவா அழுக்கு வஸ்திரம் தரித்தவ னாய் தூதனுக்கு முன்பாக நின்றிருந்தான். சாத்தான் அவனுக்கு விரோதஞ் செய்ய அவன் வலது பக்கத்திலே நின்றான்'' (சக. 3:3, 1).

# சாட்சி

என்னுடைய பெயர் I. பவுல், கொடைக் கானல் தாலுகாவைச் சேர்ந்த பெருமாள் மலை என் ஊர். நான் ரோமன் கத்தோலிக்க சபை குடும்பத்தைச் சேர்ந்தவன். ஒரு பெயர் கிறிஸ்த வனாக வாழ்ந்தவன். நான் சிறு வயது முதல் கோயில்களுக்கு செல்வது கிடையாது. என் குடும்பம் முழுவதும் பெயர் கிறிஸ்தவர்களா யிருந்தாலும் என்னை பல முறை சொல்வார்கள் ஞாயிற்றுக்கிழமை பூசைக்கு வரவில்லையென் றால் சாவா பாவம் என்று. நான் கோயிலுக்குப் போகாமல மிகவும துன்மார்க்க வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தேன். என் தாய், தகப் பனை மதிக்காமல் கெட்டவர்களோடு சேர்ந்து பீடி, சிகரெட் குடிப்பதும், பரிசுத்தமில்லாமல் பேசுவதும், களவு செய்வதும் அதை இல்லை என்று சாதிப்பவனுமாக மிகவும் கெட்டவனாக இருந்தேன்.

என்னுடைய 25வது வயதில் லாரி (Lorry) யில் லோடுமேன் காண்ட்ராக்டராக வேலை செய்து வந்தேன். அப்படி கஷ்டமான சுமை தூக்கும் பொழுது நான் சாராயம், கஞ்சா போன்ற மது மயக்கத்தினால் கஷ்டம் தெரியா மல் இருக்கலாம் என்று குடித்துக்கொண்டே வேலை செய்து வந்தேன்.

இப்படியாக 7 வருட காலமாக குடிகார னாக வாழ்ந்து வியாதிப்பட்டு இருதயத்தில் சமாதானமில்லாமல் என்னுடைய மனைவியுட னும் சண்டை போட்டுக்கொண்டு தீய மனிதனாய் வாழ்ந்து வந்தேன். வியாதியின் காரணமாக நான் அநேக கோயில்களுக்குச் சென்று பார்த்தும் எனக்கு சுகம் கிடைக்க வில்லை. கடைசியில் எனக்கு மூளை பாதிக்கப் பட்டு பைத்தியமும் பிடித்துவிட்டது. குடும்பத் தில் எல்லோராலும் வெறுக்கப்பட்டேன். என் சகோதரியின் கணவர் என்னை மருத்துவமனை யில் கொண்டுபோய் சேர்த்தார். அங்கு எனக்கு சுகம் கிடைக்கவில்லை. மனைவியும் என்னை விட்டு விட்டு தன் பெற்றோர்களிடத்திற்குப் போய் விட்டாள்.

இதன்பின் நான் என்னுடைய அண்ணன் வீட்டில் போய் சில நாட்கள் தங்கியிருந்தேன். அவர் புதிய எருசலேம் சபையில் இரட்சிக்கப் பட்டிருந்தார். புதிய எருசலேம சபையைப்பற்றி அவரிடம் விசாரித்தேன். அவரோடு கூட புதிய எருசலேம் சபை பரிசுத்த ஆராதனைக்குச் சென் றேன். அங்கே எனக்கு சத்தியம் போதிக்கப் பட்டது. 1986ல் B.L.Shed. கொடைக்கானல என்ற இடத்தில் ஊழியர் மாநாடும், கன்வென் ஷனும் நடந்தது. அப்பொழுது புதிய எருசலேம் சபை தலைமைப் போதகர் அவர்கள் எனக்காக ஜெபித்தார்கள். அப்பொழுது என்னை அலைக்க ழித்து வந்த பொல்லாத அசுத்த ஆவிகள என்னைவிட்டு நீங்கின. என்னுடைய மனைவியும் பிள்ளைகளும் என்னைத்தேடி வரும்படி கர்த்தர் உதவி செய்தார். வாழ்நாளில் என்றைக்கும் இல்லாத ஒரு சமாதானம், இருதயத்தில் சந்தோஷம் காணப்பட்டது. இப்படியாக நானும் புதிய எருசலேம் சபையில் விசுவாசி யானேன். கஷ்டத்திலிருந்தும், மரணத்திலிருந் தும், குடிப்பழக்கத்தில் இருந்தும், கவலைகளி லிருந்தும், துக்கத்திலிருந்தும் விடுதலையாக்கி னார். செப்டம்பர் (2-9-86) அன்று பள்ளப் பட்டி அருகிலுள்ள அணைப்பட்டியில் தமிழ்நாடு பரிசுத்தவான்கள் முன் பாவ அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்றேன். இப்படியாக பெரிய பாவியாகிய என்னை பரிசுத்தமுள்ள தேவன் தாமே இந்த கடைசி காலத்தில் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெறச் செய்து பரிசுத்தப் படுத்தி பரிசுத்த பந்தியிலும் பங்குள்ளவனாய் மாற்றிய என் தேவாதி தேவனுக்கு அதிக ஸ்தோத்திரம். இன்னும் அதிக பாவங்கள் சாத் தானால் எனக்குள் மறைக்கப்பட்டிருந்தன. சபையின் பரிசுத்த ஊழியர்கள் மூலம் தேவன் அதை வெளிப்படுத்தி அவர்களது ஆலோசனைப் படி என் பாவக் கறைகளை சபையில் சொல்லி அறிக்கை செய்தேன். கடந்தகால வாழ்க்கையில் நான் சினிமா பார்ப்பதிலும், வெற்றிலை பாக்கு போடுவதிலும், புகையிலை, பொடி போன்ற லாகிரி வஸ்துக்களை உபயோகிப்பதிலும் என்னைக் கறைபடுத்திக் கொண்டிருந்தேன். இப் பொழுது நான் எதுவும் உபயோகிப்பதில்லை. பாவத்தில் நான் வாழ்ந்திருந்தால் மரித்துப் போயிருப்பேன். II கொரி. 5:17-ன்படி இப்படி யிருக்க ஒருவன் கிறிஸ்துவுக்குள் இருந்தால்

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

   *20 (திங்கள்) ஜனவரி 1992*
   *18 (செவ்வாய்) பெப்ருவரி 1992*
   *18 (புதன்) மார்ச் 1992*

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (என்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15/- (பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by : Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at ; PESCA Art Printers, 19, Thiruvalluvar St , Ms-29. Ph : 425490

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 98 - Feb. 1992



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி ''தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)'' எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத் 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் – யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப் 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (தீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

**CHIEF PASTOR N. LAZAR**

### இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

இந்நாட்களில் தேவனுடைய பிள்ளைகளுக்கு உள்ளும், புறம்பும் நெருக்கடியான காலங்களாக இருக்கின்றன, உள்ளே நாம் தேவனோடுகூட சரியான ஐக்கியம், தொடர்பு உடையவர்களாய் எப்பொழுதும் இருக்கவேண்டும், காத்துக்கொள்ள வேண்டும். வெளியே பலவிதமான குழப்பங்களும், மதபுரட்சிகளும், துன்மார்க்கருடைய கோஷ்டங்களும், சாத்தானுடைய தீவிரமான கிரியைகளும் இருப்பதை நாம் பார்க்கிறோம். இவைகளைக் குறித்து தேவனுடைய பிள்ளைகள் கலங்கிவிடாமல் தேவனுடைய சர்வாயுத வர்க்கங்களை அணிந்துகொண்டு (எபே 6:10-18) எப்பொழுதும் போராட ஆயத்தமாயிருக்கவும். துன்மார்க்கர்கள், சாத்தானுடைய கிரியையை நடப்பிக்கிறவர்கள் பொய் சொல்லுகிறதும், வஞ்சிக்கிறதும், சூழ்ச்சி செய்கிறதும், மாருட்டம் பண்ணுகிறதுமான, பலவித குறுக்கு வழிகளையும் கையாடுவார்கள். நாமோ தேவனுடைய சர்வாயுத வர்க்கங்களையும் தரித்துகொண்டு, உறுதியாய் நின்று ஜெபம பண்ணி, விசுவாசத்தில் உறுதியாய் நின்று அவனை எதிர்க்க வேண்டும். ஜெயம் நமதே. தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் ஒன்றுகக்கூடும காலம் நெருங்கிக்கொண்டிருக்கிறது. உலகத்தில் உண்டாகிற நெருக்கங்களினாலும், தங்களுக்குள்ளே உண்டாகும் தோல்விகளினாலும் அப்படிச் செய்யவேண்டியது அவசியம் ஒரே அணியில் திரண்டுகொள்ள வேண்டும் என்பதை உணரும் காலம் அதிக தூரத்திலில்லை சீக்கிரமாக தேவஆவியானவர் இவ்விதமான கிரியைகளைச் செய்வார் எப்படியும் உலகத்தில் துன்மார்க்கர் ஒரு கூட்டமும், வேஷதாரிகளாய் உள்ளவர்கள் ஒரு கூட்டமும், மெய் பக்தர்கள் ஒரு கூட்டமுமாக கூடவேண்டியது அவசியமே. தேவன் அப்படிச் சொல்லியிருக்கிறார் (யோவா101:6) தேவஜனங்கள் அதிகமதிகமாய் கூடி கூடி ஜெபிப்பதும், தேவனுடைய வசனங்களைக் கைகொள்ளுவதும், ஆளுகைக்குள்ளாக இருந்து உலகத்தில் வெற்றியடையவும், கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படவும் வேண்டியது அவர்களுடைய கடமையாகும் ஏனோதானோ என்று இருந்துவிடாமல் சத்துருவினுடைய வேலையை முறியடிக்க கூடி ஆலோசித்து ஜெபிப்பதும், கிரியையாற்றுவதும் அவசியமான நடவடிக்கைகள் எடுப்பதும் அவசியமாகும் ஆனபடியினால் தேவஜனங்கள் எல்லாரும் யோவான் 17ம் அதிகாரம் 20 முதல 24 முடிய இறைவனாகிய இயேசு தீர்மானித்தபடி ஒன்று திரள்வார்களாக. எசே37:15-28 தீர்க்கதரிசனங்கள் இஸ்ரவேல் ஜனங்களுக்கும், திருச்சபைக்குமாக கொடுக்கப்பட்டிருக்கின்றன ஆனபடியினால் தேவ ஜனங்கள் எல்லாரும் ஒன்றுக்கொண்டிருக்கின்றனர் ஒன்றாக வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையாகவுமிருக்கிறது. கர்த்தர்தாமே தம்முடைய ஜனத்தை ஒன்றாய் திரட்டி தம்முடைய சேனையை ஆயத்தப்படுத்துவாராக (யோவேல் 2:1-11). கர்த்தர் தம்முடைய ஜனத்துக்காக வைராக்கியமாக இருந்து, தான் தீர்மானித்ததை நிறைவேற்றும்படி நாம் எல்லாரும் ஜெபம்பண்ணுவோமாக, செயல்படுவோமாக!

கர்த்தருடைய கிருபை உங்கள் எல்லார் மேலும் உண்டாயிருப்பதாக! ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# கிருபை வரங்கள்

(தொடர்ச்சி)

## கிருபை வரங்களின் அவசியம்

அவசியமில்லாத எதையும் தேவன் சபைக்கு வாக்குத்தத்தம் செய்யவோ அல்லது கொடுக்கவோ மாட்டார் என்பதை நாம் முதலாவது அறிய வேண்டும். நமக்குக் கர்த்தர் சில வரங்களைக் கொடுத்து இவைகளில் அவசியமானதை தெரிந்து கொள்ளுங்கள் என்று கூறுகிறவரல்ல, அவர் அப்படி கூறவும் இல்லை. பலர் மேற்கூறியவாறு எண்ணுகிறதாக தெரிகிறது. தங்களுக்கு விருப்பமானதை பற்றிக் கொண்டு மற்றதை விட்டுவிடுகிறார்கள். நமது தேவன் நமக்கு எது அவசியமோ அதை வாக்கருளியிருக்கிறார். தேவனுடைய கட்டளைகளெல்லாம் நமக்குரியது. அதை அநுசரிப்பதும் நமது கடமை. எனவே தேவனுடைய வாக்குத்தத்தங்களெல்லாம் நமக்குரியவைகளே. கர்த்தருடைய வசனத்தில் தெளிவாக இருக்கிறபடி ஆதிசபையில் காணப்பட்டவரங்களும் இன்னும் அதிகமானவைகளும் நமக்கு மிகவும் அவசியம். எக்காரியத்தைக் கொண்டு கிருபை வரங்கள் சபைக்கு அவசியப்படுமென்பதை ஆராயலாம்.

### 1) சபை பக்தி விருத்தியடைய:

நீங்கள் கூடிவந்திருக்கும்போது உங்களில் ஒருவன் சங்கீதம் பாடுகிறான், ஒருவன் போதகம் பண்ணுகிறான், ஒருவன் அந்நிய பாஷையில் பேசுகிறான், ஒருவன் இரகசியத்தை வெளிப்படுத்துகிறான், ஒருவன் வியாக்கியானம் பண்ணுகிறான். சகோதரரே இது என்ன? சகலமும் பக்தி விருத்திக்கேதுவாகச் செய்யப்படக் கடவது (I கொரி. 14:26). நீங்களும் ஆவிக்குரிய வரங்களை நாடுகிறவர்களானபடியால் சபைக்குப் பக்திவிருத்தி உண்டாகும்படியாக அவைகளில் தேறும்படி நாடுங்கள் (I கொரி. 14:12). தீர்க்கதரிசனம் சொல்லுகிறவனோ மனுஷருக்குப் பக்திவிருத்தி உண்டாகத்தக்கதாகப் பேசுகிறான் (I கொரி. 14:4).

ஒருவருடைய மறைந்திருக்கிற பாவத்தை வெளிப்படுத்துவது தீர்க்கதரிசியினுடைய முக்கிய வேலையாயிருக்கிறது. ஆனபடியினால் சபைக்குத் தீர்க்கதரிசனம் தேவை.

### 2) சபை பரிசுத்தமாக்கப்பட

சபையானது பரிசுத்தமாக இருக்க வேண்டுமென்றால் கிருபை வரங்கள் சுடர்விட்டு எரிந்திட வேண்டும். மாய்மாலக்காரன் சபையில் நுழையாதபடி தடுக்க வேண்டும் (அப் 5 1-11) அந்நாளிலே, பேதுருவில் வரமானது சுடர் விட்டு எரிந்திராவிட்டால் அனனியா (சப்பீராள்) அந்த சபையிலே ஒரு ஊழியக்காரனுகி பெரிய செல்வாக்கும் பெற்றிருக்க முடியும். அவர்களுடைய உண்மையான நிலையை பேதுரு கண்டு கொண்டு அவர்களை தண்டித்தார்.

### 3) மக்களின் மனத்திரும்புதலுக்கும் சீர்திருத்தலுக்கும் கிருபா வரங்கள் தேவை.

ஒரு அவிசுவாசி உள்ளே வந்தால் அவன் எல்லாராலும் உணர்த்துவிக்கப்பட்டு அவனுடைய காரியங்கள் வெளியாகிறதின் மூலமாக அவனுடைய பிரச்சினைகள் தீர்வதின் மூலமாக, அவனுக்கு தெய்வீக ஆலோசனை உண்டாகிறது மூலமாக அவன் மெய்யாகவே தேவன் உங்கள் மத்தியில் இருக்கிறாரென்று சொல்லி அறிக்கையிட்டு தேவனைத் தொழுது கொள்ளுவான் (I கொரி. 14:24,25). தேவனை வெறுத்து அவரை விட்டு விலகி ஜீவிக்கிற யாராவது ஒருவர் சபைக்கு வந்தால் கிருபையுள்ளவர்கள் அங்கு இருப்பவர்களில் ஒருவர் இவருடைய பின்மாற்றத்தைக் குறித்து தேவ ஆவியினால் வெளிப்படுத்தல் கொடுக்க முடியும். அவன் திருந்தி மனம் மாறினவனாய்ச் செல்ல முடியும்.

### 4) அவிசுவாசமுள்ளவனுக்கு சாட்சியாக அந்நிய பாஷை என்ற கிருபை வரம் அவிசுவாசிகளுக்கு அடையாளமாயிருக்கிறது.

### 5) தேவசித்தத்தை வெளிப்படுத்தவும் தேவ செய்தியை உறுதிப்படுத்தவும் கிருபா வரங்கள் தேவை.

பவுலையும் பர்னபாவையும் நான் அழைத்த ஊழியத்துக்கு பிரித்துவிடுங்கள் என்று பரிசுத்த

ஆவியானவர் திருவுளம் பற்றினர் (அப். 13:2). பவுலேயும் பர்னபாவையும் குறித்து தேவசித்தம் என்ன என்று வெளிப்பட்டது. அப்பொழுது அவர்கள் உபவாசித்து ஜெபம் பண்ணி அவர்கள் மேல் கைகளை வைத்து அவர்களை அனுப்பினார்கள் (அப். 13 : 3). இவ்விதம் அனுப்புகையில் சபையில் உள்ள யாருக்கும் தேவசித்தத்தைக் குறித்து சந்தேகமே உண்டாக வில்லை. கிருபை வரம் சுடர்விசின சபையில் தேவ சித்தம் வெளிப்பட்டதே இதன் காரணமாகும். அவுமட்டுமல்ல, வரப்போகிற காரியங்களை தேவ ஆவியானவர் சில சந்தர்ப்பங்களில் வெளிப்படுத்துவதன் நோக்கம் அதற்காக ஆயத்தமாவதற்கும் சம்பவத்தின் சமயத்தில் தவறிப் போகாமல் உறுதியாயிருப்பதற்கும் உதவியாயிருக்கிறது எருசலேமுக்குச் செல்ல விரும்பிய பவுலுக்கு வரவிருந்த உபத்திரவத்தைக் குறித்து அகபு தீர்க்கதரிசி எச்சரிப்புக் கொடுத்தார் (அப். 21:11). உபத்திரவத்தை எதிர்த்து நிற்பதற்கான தைரியத்தை முன் கூட்டி அப், பவுல் பெற்றுக்கொள்ள உதவியாயிருந்தது. அப்படியே ஆவியினால் அருளப்படுகிற செய்தியை ஜனங்கள் முன்னிலையில் உறுதிப் படுத்த தேவன் கிருபை வரங்களைக் கொடுக்கிறார். இப்படிப்பட்ட அநேக அனுபவங்கள் சபைமக்களுக்கு, நமக்கு உண்டு. ஒரு தடவை ஒரு ஊழியக்காரன் வந்து சபையை குற்றப் படுத்தி ஒரு செய்தி கொடுத்தபொழுது அந்த மனிதனுக்கு தேவனுடைய செய்தி இல்லை, பொறுமையினால் அவர் தன் இருதயத்திலிருந்து பேசினரென்றும் அங்கிருந்த ஊழியர்கள் வெளிப்படுத்தல் கொடுத்தார்கள். அந்தப் பிரசங்கியும் தன் தவறை ஒத்துக் கொண்டு, எழுந்து, மன்னிப்புக் கேட்டு எனக்கு கர்த்தரிடத்திலிருந்து செய்தி இல்லை, என்னுடைய இருதயத்திலிருந்து பேசிவிட்டேன், என்னை மன்னித்துவிடுங்கள் என்று மன்னிப்புக் கேட்கும் படியாய் ஏறபட்டது. அல்லவென்றால் பிரசங்கி தானே என்று மக்களெல்லாம் அவருடைய பிரசங்கத்தை நம்பி கலக்கமடைய ஏதுவாயிருந்திருக்கும்.

பரிசுத்தாவியானவருடைய கிரியை பற்பல விதமாக சபையிலே தேவைப்படுகிறது. ஆவியானவர் ஏவப்பட்டுச் செய்யும் பிரசங்கங்களும், போதனைகளும் தேவனால்தான் வெளிப் படுத்தப்பட்டதென்பதை தொடர்ந்து சபையிலிருந்து கொடுக்கிற சாட்சிகள், வெளிப்படுத்தல்கள் மூலமாக உறுதி செய்யப்படுகிறது. இதனால் மக்கள் உறுதி கொண்டு இது கர்த்தரிடத்திலிருந்து வந்த செய்தி, இது கர்த்தரால் காண்பிக்கப்பட்ட தரிசனம், இது கர்த்தருடைய ஆலோசனை என்று உறுதிப்படுத்திக் கொண்டு கிறிஸ்துவுக்குள் வளர பிரயோஜனமாயிருக்கிறது. மெய்யான சபையில இவைகளெல்லாம் நடைபெறுகின்றன.

(தொடரும்)

''முக்கியமான வரங்களை நாடுங்கள்''

(I கொரி. 12:31)

# இந்து மதம்

(தொடர்ச்சி)

அந்த மலைக்கு ஊழிகாலத்திலும் அழிவில்லை. நீ சொன்ன எட்டு கண்டத்திலிருக்கிற வர்களுக்கு நரை திரை இளமை மூப்பில்லை. முதல் யுகம் போலவே மற்ற யுகங்களிலும் வலிமை, அறிவு சவுரியம், முயற்சி, வயது, சிறப்பு இவைகளைக் கொண்டிருப்பார்கள். அவர்களும் பரத கண்டத்திலே வந்துதான் கர்ம பலனை அனுபவிப்பார்கள். அந்த 8 கண்டத்திலும் மழைவளம் இல்லை. பரத கண்டத்திலே இருப்பவர்கள் பூமியிலே பலபல தொழில்களையும் நடத்தி தருமத்தையும், பாவத்தையும் செய்து தெய்வத்தினாலும், முயற்சியினாலும், பூமியினாலும் வரும் பலனை அனுபவிப்பார்கள்.

பெருமை, வலிமை, அறிவு, சிறப்பு, வயது, உருவம், உணவு, செய்கை, யுகதருணத்திற்கு ஏற்ற கேற்க நிகரம். மூங்கிலரசி முதலானவைகளும், பல மூல சாகங்களும் உண்பார்கள்

8 கண்டத்திலும், தேவலோகத்திலும், பாதாள லோகத்திலும் இருக்கிறவர்கள் செய்கின்ற கர்ம பலத்தை பரத கண்டத்திலேதான் வந்து அனுபவிப்பார்கள் என்று சாத்திரம் சொல்லுகையால் சிறப்பு மிகுந்த பரத கண்டம் ஒன்றும் தான் நல்வினை, தீவினைக்கு மூலமாக இருக்கின்றது.

ரிஷிகளும், தேவர்களும் யாதொன்றை விரும்பியபொழுது பரத கண்டத்திலே வந்து தான் தவம் பண்ணுவார்கள். பரதன் என்று சொல்லப்பட்ட ராஜாவும், இந்திரன், கசேரவன், தாம்பிரகன், பலபாத்திரன், நாகன், சவுமியன், மருதவன், வருணன் இன்னும் ஆண் பிள்ளைகளும், குமரி என்று சொல்லப்பட்ட பெண்ணையும் பெற்று அவரவர் பெயருக்கு ஒவ்வொரு யோசனையளவுக்கு பரத கண்டத்தை ஒன்பதாகப் பகுத்துக் கொடுத்தான். அங்கே கங்கை, கௌதமை, யமுனை, பவானி, காவிரி, நர்மதை, பாலி, துங்கபத்திரை, குசை, கோமதி துர்ப்பாகை, சங்கவாகினி, மரத்துவாசி, பசாலிபதி, சந்திரமாகி, நாமவேணி, பின்கலை, குடலை, குமரி, பொருணை வேக்கர், பெண்ணை முதலான அளவற்ற ஆறுகளும் இருக்கும்.

மகேந்திரம், மலையம், சையம், சக்தி, வானிடம், பாதியாத்திரம், விந்தம் என்று சொல்லப்பட்ட 7 மலையும், காஞ்சி முதலாகிய 7 தலங்களும், அயிரம்திட்டு சிவதலமும் வேதத்தையுடைய பிராமணர்களும், வேத ஒழுக்கமும் பொருந்தி இங்கும் அப்படி மோட்சத்தையடையப் பண்ணுவது குமரி கண்டம். மற்ற 8 கண்டங்களும் விலேச்ச தேசம். இதெல்லாம் சம்பு தீவுக்குள்ளே அப்பால் சாகத்தீவுக்கு ராஜா. உமேதாதி அவனுடைய பிள்ளைகள் சாந்தயன், சசிரன், கோதையன், சிவன், கேமகன், துர்வம். இவர்கள் பேரினாலே ஏழாக பகுத்து இந்த ஏழு பேருக்கும் சாகத் தீவுக்கு ராஜாவாகிய கோமேதாதி கொடுத்தான். அங்கே இருக்கிறவர்கள் ஆரியர், அவிந்தகர், குரசர், அவனுடைய குல தெய்வம் வாயு பகவான், அங்கே சோமன், சோமவம், சந்திரம், உத்தம், துந்துமி, பத்திராசனம், கோமதாம் என்று சொல்லப்பட்ட 7 மலையும், சிவம், விவம், அமுதம், சுகிரதம், அனுபுத்தகை, சித்திரம், சிகா என்று சொல்லப்பட்ட ஏழு ஆறுகளும் அங்கே உண்டு. தயிர் சமுத்திரத்துக்குள்ளேயிருக்கிற குஷத் தீவில் ராஜா வபுட்டு. அவனுக்கு சுக்கிரதன், ரோகிதன், திக்கன், மூகன், சுவேதனன், சித்திரன், வைத்தியதன் என்ற 7 பிள்ளைகள், இவர்கள் பெயரினாலே ஏழாகப் பகுத்து குஷத் தீவைக் கொடுத்தான். அங்கே உன்னதம், குமுதம், மராம், மேகம், சந்தம், கமடம், துரோடம் என்ற ஏழு மலையும், சோலை, வெள்ளி, மதி, தோரணை, நேத்திரை, விமோசவி, விருத்தி என்று சொல்லப்பட்ட ஏழு ஆறுகளும் உண்டு. தெய்வம் வாயு பகவான். அங்கே வாழுகிறவர்கள் தற்பகன், கபிலர், சாரணர், நிலத்தர், தண்டர், விதண்டகர் என்று சொல்லப்பட்டவர்கள். அப்பால் நெய் சமுத்திரம் சூழ்ந்த குருஷ தீவுக்கு ராஜா புறத்திட்டு. அவனுடைய பிள்ளைகள் சாரணர், கபிலர், கிருதி, கீர்த்தி, வேலுமால், இலம்பகன், பொற்பிதன் என்னும் 7 பேருக்கும் அவர்கள் பெயரினாலே பிரித்துக் கொடுத்தான். அங்கே குஷேசயம், துருமம், குப்பம், வருத்தம், இமவந்து, திந்தம், மந்தாரம் என்ற மலை ஏழும், திவை தூதபாவயும், புவிதை பொறுமை, அகிலபாவை, அமுதம் என்று சொல்லப்பட்ட ஏழு ஆறுடனே இருக்கும். பதகா, கலாவகா, மதேகா இவர்கள்தான் அங்குள்ளவர்கள். அவர்களுக்கு தெய்வம் பிரம்மதேவர். அதற்கப்பாலே கருப்பஞ்சாற்றுக் கடல் சூழ்ந்த சாண்மலி என்னும் தீவு. அதற்கு ராஜா சாந்து. அவனுடைய பிள்ளைகள் குஷலன், வேலன், தேவன், 'முனி, அந்தகாரன், மனோதரன், துந்துமி என்ற ஏழுபேர். இவர்களுக்குத் தன் தீவை பங்கிட்டுக் கொடுத்தான். தமிரம், கரபி, வாமணம், விருத்தம், துந்துமி, கன்விகை, குண்டரீகம் என்ற 7 மலையும். போது, குமுதம், கபரி, ஆதிபரமும், குண்டரியம், சனோபவம், சந்திகம் என்று சொல்லப்பட்ட 7 ஆறுடனேயிருக்கும். அங்கே வாழுகிறவர்கள் புட்கலர் என்று சொல்லப்பட்டவர்கள். இவர்களுக்கு தெய்வம் பரமேஸ்வரன், அதற்கப்பாலே தேன்கடல் சூழ்ந்த கோமதகத் தீவு. அதற்கு ராஜா அவ்வியன். அவனுக்கு 7 பிள்ளைகள் உண்டு. விமோதவன், மோகன், சசலன், கோமன், சுர்நாதன், மரிச்சன் என்று சொல்லப்பட்டவர்கள். இவர்களுக்கு அந்த தீவை பகிர்ந்து கொடுத்தான். அங்கே ஏழு மலைகளும் ஆதி, தேனு, சமநதி, சுருமாரி, ஏக்ரு, மாயை என்னும் 7 நதியுண்டு.

அங்கே வாழுகிறவர்கள் மந்தகார், மங்கர், மானஷா. இவர்களுக்குத் தெய்வம் சந்திர பகவான். அதற்கப்பாலே நல்ல தண்ணீர் சமுத்திரத்திலிருந்து புக்கரத்திவு. அதற்கு ராஜா சவணன். அவனுக்கு உந்தாதி என்றும், மாவிரன் என்றும் இரண்டு பிள்ளைகள். அவர்களுக்கு அவன் புட்கரத் தீவை பங்கிட்டுக் கொடுத்தான். விடவம், மகேந்திரம், அருணம், பாரதம், நீலம், இந்திரி, அந்திர என்ற ஏழு மலைகளும் குடிலை, சிவை, புவை, தாரணை, சுமனை, சிந்தி, குமரி என்று சொல்லப்பட்ட ஆறுகளுமுண்டு. அங்கே வாழுபவர்கள் வியக நகர், நாகா என்று சொல்லப்பட்டவர்கள். தெய்வம் சூரிய பகவான். உட்கரத் தீவுக்கு அப்பால் ஐம்பதனுயிரம் யோசனை அளவுக்குமான சொத்தான், மற்றுண்டு மலை, சகபக் போல சூழ்ந்து கிடக்கிறது. அதிலே தேவேந்திரம் முதலானவற்றை ஏழு பெருக்கும் கிழக்கு முதலான அட்டத்திக்கிலும் ஒவ்வொரு பகுதிகள் உண்டு. இந்த சத்த சமுத்திரத்தின் எல்லைகளிலே ஒவ்வொரு மலையும் உன்னதமாய் நிற்கும் சாக முதலான தீவுகளிலே இருக்கிறவர்களுக்கு நரை திரையில்லை. அதுவுமின்றி யுக வித்தியாசமுமில்லை. அதற்கப்பாலே பொன்விலம் அதைச் சூழ்ந்து சங்கரவாழகிரியிடக்கும் அதற்குள்ளேயின்றி இப்புறத்திலே சூரியனில்லை. ஆகையால் இருட்டுலகம்—அதில் வாழுகிறவர்கள் இயக்க ராக்கதர், வேய்கள், அட்டபாலகர், மேருபர்வதம் போல அங்குமிருப்பார்கள் அதற்கப்பாலே புறவாழி, அண்டகடாகமளவும் பரந்திருக்கும். கன்ம வாழிகளாய் தம்முடைய உயிரை தாமாக விட்டவர்களும் அறிவில்லாத பைத்தியக்காரரும் சக்கிர வானகிரிக்கு அப்பாலே சூழ்ந்து கிடப்பார்கள். அதற்கு அப்பால் உள்ள இருட்டு உலகத்திலும் மும்மூர்த்திகளுக்கு ஒவ்வொரு கோயில் உண்டு. இந்த உலகத்தை அளவற்ற பேய்ரகடாகமளாவும், சொம்புத் தீவு முதவான அன்றகடாகமளவும் பூமியை என்று சொல்லுவார்கள். இந்த பூமிக்கு மேலே ஆகாய உலகம், அதற்கு மேலே கும்பலோகம், அதற்கு மேலே தசவாயுக்கள், அதன் மேலே சுத்த முகிலும் வழங்கப்பட்ட முகில் மண்டலம், அதற்கு மேலே கிம்புருடர், கருடர், சித்தர், விஞ்சகர், இயக்கர் இவர்கள் இருக்கும் பட்டணம், இதற்கு மேலே ஆகாய கங்கை வாழுமிடம், அதற்கு மேலே சூரிய மண்டலம். ஆக பூமியிலிருந்து லக்கமொன்று அதிலே முப்பத்து முக்கோடி தேவர்களும் சூரியனுடனே செல்லுவார்கள். அதின் மேலே ஒரு இலக்கம் யோசனை அளவிலே சந்திர மண்டலம். அதற்கு மேலே ஒரு இலக்கமளவில் நட்சத்திர மண்டலம், அதற்கு மேலே இரண்டு இலக்கம் யோசனையளவில் புதனுலகம். அதற்கு மேலே வெள்ளியுடைய உலகம் இரண்டு இலக்கம். அதற்கு மேலே இரண்டு இலக்கம் யோசனையளவில் செவ்வாய் உலகம், அதற்கு மேலே இரண்டு இலக்கம் யோசனையிலே வியாழனுடைய உலகம். அதற்கு மேலே சனி உலகம் (இரண்டு இலக்கம் யோசனை) அதற்கு அப்பாலே இரண்டு இலக்கத்திற்கு மேலே சுத்த ரிஷிகளுடைய உலகம். அதற்கோர் இலக்கத்திற்கு மேலே துருவனுடைய உலகம். ஆக பூலோகத்துக்கு கண்ட தொகை பதினைந்து இலக்கம். இதற்கு மேலே சிவலோகம் ஐம்பத்தைந்து இலக்கம். அதுவே தேவர்கள் புகழை தேவேந்திரரால் புகழ தேவேந்திரர் இராஜ்யம் பண்ணிக்கொண்டிருப்பார். அதற்கு இரண்டு கோடியின் மேலே வேமகலோகம். அங்கே மார்கண்டர் முதலான ரிஷிகள் வாழ்வார்கள். இதற்கு எட்டு கோடியின் மேலே சணலோகம். அங்கே பிதிர்தேவதைகள் இருப்பார்கள். அதற்கு பன்விரெண்டி கோடியின் மேலே தவலோகம். அங்கே ஜனகர் முதலான பெரிய யோகிகள் இருப்பார்கள். அதற்கு மேலே 16,000 கோடி. மேலே சத்திய உலகம்.

பிரம்ம தேவன் உலகத்தை சிருஷ்டிக்கும் பரமபதம் மூன்று கோடி. உற்றுண்ணியோர் வாழும் வைகுண்டம் மூன்றுகோடி. அதற்கு மேலே சிவலோகம் 4 கோடி. அதற்கு அப்பாலே அன்ற கடாகமும் ஒரு கோடி யோசனை. சூர பதுமனே வேதங்களும், மந்திரங்களும், குருதிகளும் வெவ்வேறாக சொல்லுவது எதுவோ? என்று கேட்டால் மலையல்ல. ஒவ்வொரு படைப்புக்கும் அளவற்ற பேதங்கள் உண்டாயிருக்கும். ஆனாலும் நான் அதற்குள் தெவிந்துள்ளது போலவே சொன்னேன். இந்த பூமியிலே நூற்று எட்டு (108) புவனம், உருத்திரமூர்த்திகளும் வாழுமிடம். இப்பொழுது நான் சொன்ன இந்த அண்டம் போலவே இருக்கும். பின்னையை பரமேஸ்வரன் உனக்குத் தந்த ஆயிரத்தெட்டு தடமும் நீயோ அங்கங்கே போய் பார்க்க

லாம் என்று சுக்கிர பகவான் சொல்ல மாத்திரத்திலே குரவ அளவற்ற உளகாங்கிதம் அடைந்தான்

### இராமாயண நாடகம்

பாலகாண்டம் பாயிரத்தில் எழுதப்பட்ட விருத்தம்:

சதிர் வரும் இராமர் காதை
சதகோடி பிரவந்தமாகும்
அதிலோவுச்சரர் சொன்னலும்
அறிவினை ஒரும் என்றே
விளம்பிய உறுதி கொண்டு
மதியினல் அறிந்த மாத்திரம்
வருத்து நாடகம் சொல்வேனே,

இதன் அர்த்தம்: வளமை பொருந்திய இராமருடைய சரித்திரம் 100 கோடி புஸ்தகமாகும். அதிலொரு அச்சரம் சொன்னலும் கொடிய துன்பங்களெல்லாம் போய்விடும் என்று உண்மையாக வான்மீகி முனிவர் சொன்ன உறுதியைக் கொண்டு புத்தியினல் அறிந்த மட்டும் வருத்து நாடகமாக சொல்வேன் என்றவாறு உபதேச காண்டம் 27-ஆம் சருக்கம், மிவகாட்சி பேரு, 91-ஆம் பாட்டு.

எண்ணிய புராணம் கேட்போர்
குருக்ஷேத்ரங்கால் உணர்ந்தோர் பெற்ற
புண்ணிய மதனிர் கூடி
புண்ணியம் பெறுவர் மட்டில்
மண்ணிடையாக முற்றும்
வளர்ப்பவர் பெரும்பெயரெல்லாம்
நல்தருவார் தானகமெல்லாம்
புரிபயன தொகுவோரால்''

இதன் அர்த்தம்:

எண்ணைதத்தக்க இந்த புராணத்தைக் கேட்கிறவர்கள் இருக்கும் உலகத்தில் நலு வேதத்தையும் கற்றவர்கள் பெறும் புண்ணியத்திற்கு கோடிமுதல் அதிகமான புண்ணியங்களை பெறுமக்களால் உலகத்தில் சகலவித யாகங்களையும் செய்து முடிக்கிறவர்கள் பெறும் பேரலைத்தையும் பெற்று சகல தானங்களையும் செய்கிறவர்கள் அடையும் பலனையும் அடைவார்கள் என்றவாறு

| | | |
|---|---|---|
| தத்துவம் | — | 96 |
| ஆன்ம தத்துவம் | — | 24 |
| நாடி | — | 10 |
| அவத்தை | — | 5 |
| மலம் | — | 3 |
| குணம் | — | 3 |
| மண்டலம் | — | 3 |
| பிணி | — | 3 |
| விகாரம் | — | 8 |
| ஆகாரம் | — | 6 |
| தாவி | — | 7 |
| வாயு | — | 10 |
| கோஷம் | — | 5 |
| வாயில் | — | 9 |

இவற்றுள ஆன்ம தத்துவமான:

| | | |
|---|---|---|
| பூதம் | — | 5 |
| கர்மேந்திரியம் | — | 5 |
| புலன் | — | 5 |
| ஞானேந்திரியம் | — | 5 |
| கரணம் | — | 4 |

இவைகளை சதுரங்கராவியில் தத்தம் வரிசையில் காண்க.

(தொடரும்)

''பொய்யான மாயையைப் பற்றிக் கொள்ளுகிறவர்கள தங்களுக்கு வரும் கிருபையைப் போக்கடிக்கிறார்கள்''

(யோனு 2 : 8)

### பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | காலம் | நடந்த இடம் |
|---|---|---|---|
| Bro M. ஆரோன் ஞானராஜ் | Sis. மிக்கேல் அர்மாள் | 23—1—92 | வள்ளியூர் |

# வேத பாடம் (தொடர்ச்சி)

## லேவியராகமம் 25 : 1-7 சொத்து (Property) சம்பந்தமான சட்டங்கள்

ஓய்வு வருஷம். ஏழாவது வருஷம் ஓய்வு வருஷமாக அநுசரிக்க வேண்டும். அந்த வருஷத்திலே நிலத்தில் பயிரிடாமலும், மரத்தின் கனிகளை பறிக்காமலும், வெட்டாமலும், விளைச்சல் எதுவும் மீதியிருந்தாலும் அறுக்காமலும் நிலத்திற்கு ஓய்வு கொடுக்க வேண்டும். அவ்விதமாகவே வேலைக்காரர்களுக்கும், வேலைக்காரிக்கும், கூலிக்காரனுக்கும், அந்நியனுக்கும். காட்டு மிருகத்துக்கும், தேசத்தில் இருக்கிற நாட்டு மிருகத்துக்கும் அதில் விளைந்திருக்கிறவைகளை ஆகாரமாக விட்டு விட வேண்டும். ஓய்வு வருஷத்திலே திராட்சைத் தோட்டத்தை கிளை கிளைக்காமலும், தானாய் விளைந்து பயிரானதை அறுக்காமலும் கிளைகழிக்காது விட்ட திராட்சச் செடிகளின் பழங்களை சேர்க்காமலும் இருப்பாயாக. தேசத்துக்கு அது ஓய்வு வருஷமாய் இருக்கக்கடவது என்று கர்த்தர் கட்டளையிட்டார். ஓய்வு வருஷம் ஆசரிக்கும்பொழுது நான் என்னத்தைப் புசிப்பேன் என்று நீ கவலைப்பட வேண்டாம். தேவனாகிய கர்த்தர் ஆறுவது வருஷத்திலே மூன்று மடங்கு விளைச்சல் உனக்குக் கிடைக்கும்படியாகச் செய்வார். ஏழாம் வருஷம் சாப்பிட்டு எட்டாம் வருஷ விளைச்சல் உண்டாகும் காலம் வரைக்கும் அது உனக்குப் போதுமானதாக இருக்கும் (லேவி. 25 : 18-22).

## லேவி 25 : 8-17 யூபிலி வருஷம்

யூபிலி வருஷம் என்று சொல்லப்படுவது 51-வது வருஷம். ஏழு ஓய்வு வருஷங்கள் முடிந்த பின்பு 50-வது வருஷத்தை யூபிலி வருஷமாகக் கொண்டாட வேண்டும். இந்த யூபிலி வருஷம் விடுதலை வருஷமாக அறிவிக்கப்பட்டது (உபா. 15:1-6). இந்த யூபிலி வருஷத்தை கணக்கில் எடுத்து வியாபாரம், கொடுக்கல் வாங்கல் விற்பது முதலியன செய்யப்பட்டது. யூபிலி வருஷம் வரும்பொழுது அவனவனுடைய நிலம் அவனவனுக்குச் சொந்தமாகும். கடன் கொடுத்தவன் தன் சகோதரனுக்குக் கொடுத்த கடனை விட்டுவிட வேண்டும். அந்நியன் கையிலே அந்தக் கடனைத் தண்டலாம். வேலைக்காரர்கள், வேலைக்காரிகள், அடிமைகள் இவர்களெல்லாரையும் விடுதலை செய்து விட்டுவிட வேண்டும். நிலத்தை விற்றவர்களுக்கு அவர்களுடைய சொந்த நிலம், காணி பூமியும் அவர்களுக்கு திருப்பிக் கொடுக்கப்படும். இவ்விதமாக யூபிலி வருஷம் விடுதலை வருஷமாக அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

யூபிலி வருஷத்தில் விதை விதைக்காமலும், தானாய் விளைந்து பயிராவதை அறுக்காமலும், கிளை கழிக்காமலும், விடப்பட்ட திராட்சச் செடிகளின் பழங்களைச் சேர்க்காமலும் இருப்பீர்களாக. அது யூபிலி வருஷம். அது உங்களுக்குப் பரிசுத்தமாக இருக்க வேண்டும். அந்த வருஷத்தில் வயல் வெளியில் விளைந்தவைகளை நீங்கள் புசிக்கலாம். அந்த யூபிலி வருஷத்தில் அவனவன் தன் காணியாட்சிக்கு திரும்பிப் போகக் கடவன். ஆகையால் பிறனுக்கு எதையாவது விற்றாலும், அவனிடத்தில் ஏதாவது கொண்டாலும் ஒருவருக்கொருவர் அநியாயம் செய்யக் கூடாது. பலனுள்ள வருஷங்களைக் கவனித்து அது விற்கப்பட்டது, வாங்கப்பட்டது. இவ்விதமாக கர்த்தருக்குப் பயந்து அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளும்படியாக கர்த்தர் கட்டளையிட்டார். யூபிலி வருஷம் சமீபமாயிருக்கிறதென்று வன்கண் வைத்து தன் சகோதரன் கஷ்டப்பட்டால் அவனுக்கு கடன் கொடாமல் மறுக்கக் கூடாது. அவசியமானதை உதவி செய்ய வேண்டும். இஸ்ரவேலர்களில் ஒருவரும் தரித்திரராய் இராதபடி கர்த்தர் கட்டளையிட்டார்

## லேவி 25 : 23, 24 நிலங்களை அறுதியாக விற்கக் கூடாது.

நிலங்களெல்லாம் கர்த்தருடையது. ஆனபடியால் நிலங்களை யூபிலி வருஷத்தில் மீட்டுக் கொள்ளத்தக்கதாக அதை அடமானம் வைக்கலாம், ஆனால் விற்கக் கூடாது. அவனவனுடைய

சுதந்தரம் அவனவனுக்கே இருக்க வேண்டும். உங்களில், சகோதரன் ஒருவன் தரித்திரப்பட்டு காணியாட்சியில் சிலதை விற்றால் அவன் இனத்தான் வந்து தன் சகோதரன் விற்றதை மீட்டுக் கொடுக்கலாம். மீட்க ஒருவனும் இல்லாவிட்டால் தானே அதை மீட்கத் திராணியானால் அவன் மீட்டுக் கொள்ளலாம். விற்றபின் சென்ற வருஷங்களின் தொகையைத் தள்ளி மீந்த தொகையை ஏற்றி கொண்டவனுக்கு கொடுத்து அவன் தன் காணியைத் திரும்பிப் போகக் கடவன். அப்படி அவனுக்கு கொடுப்பதற்கு நிர்வாகம் இல்லாவிட்டால் யூபிலி வருஷத்தில் நிலம் அவனுக்குத் திரும்பப் போகும். யூபிலி வருஷத்திலே வாங்கினவன் அந்த நிலத்தை திருப்பிக் கொடுக்கக் கடவன் என்பதாம். நிலத்தின் சொந்தக்காரனுக்கு நிலம் கிடைக்கும். இவ்விதமாக கர்த்தர் அந்தந்த கோத்திரம் குடும்பத்தினுடைய சொத்துக்கள் அந்தந்த கோத்திரத்திலே இருக்கும்படியாகக் கட்டளையிட்டார். இந்நாட்களிலே உலகத்தில் நடக்கிறதுபோல ஒருவருடைய சொத்தை இன்னொருவர் வாங்குவது போல ஒருவரை கொள்ளையடிக்கவோ எல்லாவற்றையும் விட்டுவிட்டு தரித்திரராய் நிற்கவோ இஸ்ரவேலில் அனுமதி இல்லை. இவ்விதமாக இஸ்ரவேலர்களுக்கு நல்ல சட்டங்கள் இறைவனால் வகுக்கப்பட்டன.

லேவி 25 : 29-31 : மதில் சூழ்ந்த பட்டணத்திலுள்ள ஒரு வீட்டை ஒருவன் விற்றால் ஒரு வருஷத்துக்குள் அவன் அதை மீட்டுக் கொள்ள வேண்டும் அப்படி மீட்டுக்கொள்ளாவிட்டால் அது வாங்கினவனுக்கு தலைமுறைக்கும் சொந்தமாகும். யூபிலி வருஷத்திலும் விடுதலையாகாது மதில் சூழப்படாத கிராமங்களிலுள்ள வீடோ நிலத்தைப் போல யூபிலி வருஷத்தில் சொந்தக்காரனுடையதாகும். இடையில் அவன் மீட்டுக்கொள்ள வேண்டுமானாலும் மீட்டுக் கொள்ளலாம்.

லேவி. 25 : 32-34: லேவியர்கள், ஆசாரியர்கள் காணியாட்சிகளாகிய மதில் சூழ்ந்த பட்டணத்திலுள்ள வீட்டை ஒரு லேவியன் விற்றால் அவன் எப்பொழுதும் அதை மீட்டுக் கொள்ளலாம். இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே லேவியருடைய பட்டணங்களில் உள்ள வீடுகள் அவர்களுடைய காணியாட்சியானபடியால் லேவியனிடத்தில் அவனுடைய காணியாட்சி பட்டணத்திலுள்ள வீட்டை ஒருவன் வாங்கினால், விற்கப்பட்ட அந்த வீடு யூபிலி வருஷத்தில் விடுதலையாகும். அவர்கள் பட்டணங்களிலுள்ள வெளிநிலங்களும் விற்கப்படலாகாது. அது அவர்களுக்கு நித்திய காணியாட்சியாயிருக்கும். லேவியர்கள் அதில் ஒன்றையும் விற்கவும் தேசத்தின் முதல் விளைவை மாற்றவும், அடுத்தவர்களுக்குக் கொடுக்கவும் தகாது. அது அவர்களுக்குப் பரிசுத்தமானது (எசே. 48:13, 14). ஊழியர்கள் தங்களுக்கென்று எதையாவது வாங்கினாலும் அதை விற்கக் கூடாது. கர்த்தருடைய காணிக்கை சம்பந்தப்பட்டிருக்கிற எந்த ஒரு பொருளையும் மற்றவர்களுக்குக் கொடுக்கவோ, விற்கவோ, மாற்றவோ அது கூடாது. ஊழியர்களுடைய குடும்பம் காணிக்கைகளை சாப்பிடலாம். தங்களுடைய உறவினர்கள், சொந்தக்காரர்கள், தெரிந்தவர்கள் பழக்கமானவர்கள் என்று சொல்லி மற்றவர்களுக்கு பகிர்ந்து கொடுக்கிறதோ இவ்விதமான காரியம் செய்கிறதோ ஆசீர்வாத குறைவு உண்டாகும். அது தகாத காரியமாகும். இந்தக் காரியத்தில் மாம்ச இழுப்புக்கு இடம் கொடுக்காதபடி ஊழியர்கள் நடந்து கொள்ள கடமைப்பட்டிருக்கிறார்கள்.

லேவி 25 : 35-38 : ஏழையான சகோதரன் இளைத்துப் போனால் அவன் தேவைக்குத் தக்கபடி அவனுக்கு பணமோ, தானியமோ, பொருளோ கொடுத்து வாங்க வேண்டும். பணத்தை வட்டிக்குக் கொடுக்கக் கூடாது. தானியத்தையும் அவ்விதமாக கொடுக்கக் கூடாது. அவனுடைய அவசரத்துக்குத் தக்கபடி அவனுக்குத் தாராளமாய் உதவி செய்து அவனைத் தாங்க வேண்டும். இப்படி செய்வதினால் இஸ்ரவேலர் ஒவ்வொருவரும் ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று கர்த்தர் கட்டளையிட்டார் (உபா. 15:7-11). விடுதலை வருஷம் சமீபமாய் இருக்கிறதென்று எண்ணி ஒன்றும் கொடுக்க மறுக்காதே. உனக்கு உண்டானதிலிருந்து எடுத்து தாராளமாய்

கொடு. வன்கண் வைத்து உன் சகோதரனுக்கு இல்லையென்று சொன்னால் அது உனக்குப் பாவமாகும். எளியோன் உன் மத்தியில் இராதபடி உன் சகோதரனுக்குத் தாராளமாய் கொடுக்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் ஒரு கிறிஸ்தவன் வட்டி வாங்கக் கூடாது: இவ்விதமாய் நீ செய்வதினால் கர்த்தர் உன்னை ஆசிர்வதித்து உன்னுடைய எல்லா கிரியைகளிலும், நீ கையிட்டு செய்கிற எல்லாவைகளிலும் உன்னை ஆசிர்வதிப்பார்.

லேவி 25 : 39-46 :- உன் சகோதரன் ஒருவன் தரித்திரப்பட்டு கடன்பட்டு உனக்கு அடிமையானால் அவன் கூலிக்காரனைப போல உன் மத்தியிலே தங்கியிருக்கட்டும், உனக்கு ஊழியம் செய்யட்டும். உன் சகோதரரில் யாரையும் நீ அடிமையாக்கக் கூடாது, கொடூரமாய் ஆளக் கூடாது. எகிப்து தேசத்திலிருந்து நான் புறப்படப் பண்ணின என்னுடைய ஊழியக்காரர்களே அவர்கள். ஆகையால் உன் சகோதரரில் ஒருவனையும் அடிமையாக, அடிமை வேலை வாங்காதே, கொடூரமாய் ஆளுகை செய்யாதே.

லேவி 25 : 47-55 :- சகோதரன் ஒருவன் தரித்திரப்பட்டு விலைபட்டுப் போனாலோ, அல்லது எதையாவது விற்றுவிட்டாலோ அவன் மீட்கப்படலாம். தன்னைத் தானே மீட்டுக் கொள்ளக் கூடுமானால் தன்னை மீட்டுக் கொள்ளலாம் அல்லது அவன் பிதாவின் சகோதரரில் யாராவது ஒருவர் அவனை மீட்டு விடலாம். அப்படியில்லையென்றாலும் யூபிலி வருஷத்தில் அவன் விடுதலையாவான். இஸ்ரவேல் புத்திரர் எல்லாருமே தேவனுடைய ஊழியர்கள். ஆனபடியினால் அவர்களுடைய சொத்துக்களை அநியாய வாங்குவதோ அவர்களை நிரந்தர அடிமைகளாய் வைக்கிறதோ கூடாது. யூபிலி வருஷத்தைக் கணக்குப் பார்த்து அவர்களுக்கு கூலி யூபிலி வருஷம் நீளமாயிருந்தால் அதிகமாயும், குறைவாயிருந்தால் அதற்குத தக்கவும் விலைகிரயமா வைத்து விலைப்பட்டவன் கொடுத்து விடுதலையாகலாம். இல்லையென்றாலும் யூபிலி வருஷத்திலே இலவசமாக விடுதலையாவார்கள் என்பதாம்.

(தொடரும்)

''(இயேசுவானவரும்) ஜீவகாலமெல்லாம் மரண பயத்தினாலே அடிமைத்தனத்திற்குள்ளானவர்கள் யாவரையும் விடுதலை பண்ணும்படிக்கும் அப்படி (மனிதன்)யானார்''

(எபி. 2 : 15)

# கிறிஸ்தவ திருமணம் (தொடர்ச்சி)

ஒரு புனிதமான உறவு :-

வாழ்க்கையில் பரிசுத்தமும், மேன்மையும் நிறைந்த உறவு திருமண உறவேயாகும். ஆதி-2-ம் அதிகாரத்தில் தேவன், அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என்று கூறுகிறார். ஒருவரின்றி மற்றவரில்லை. இதுவே தேவ நியமனம். இதுவே குடும்பத்திற்கு ஆதாரம். இதுவின்றி குடும்பம் முழுமையடையாது. அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள். இருமணம் கனமுள்ளது என்று தேவன் கூறுகின்றார். விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயும், விவாக மஞ்சம் அசுசிப்படாததாயும் இருப்பதாக. வேசிக்கள்ளரையும், விபச்சாரக்காரரையும் தேவன் நியாயந் தீர்ப்பார் (எபி. 13:4). ''புருஷன் தன் தகப்பனையும் தாயையும் விட்டு தன் மனைவியோடு இசைந்திருப்பான். அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என்று இருமறை கூறுகின்றது. மனிதனின் நன்மைக்காகவே தேவன் குடும்பத்தை ஏற்படுத்துகிறார். மனிதன் தனிமையாயிருப்பது நல்லதல்ல என்று தேவன் கூறுகிறார். எனவேதான் ஏற்ற

துணையை அவனுக்கு உண்டாக்குவேன் என்று உரைத்து தகுந்த துணையை உண்டாக்கினர். திருமணம் மிக இன்றியமையாதது என்பதற்கு இன்னொரு காரணத்தையும் வேதத்தில் பார்க்கிறோம். வேசித்தனம் இராதபடிக்கு அவனவன் தன் சொந்த மனைவியையும் அவளவள் தன் சொந்த புருஷனையும் உடையவர்களாயிருக்க வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது (I கொரி. 7:2). ஒழுங்கீன வாழ்க்கையை அழித்துப் போடவும், ஒழுங்கான சமுதாயத்தை ஏற்படுத்தி நிலை நாட்டவும், ஒழுங்குள்ள குடும்பங்கள் மூலம் உண்மையையும் பரிசுத்தத்தையும் தலைமுறை தலைமுறையாக நிலைநாட்டுவதற்காகவும் தேவன் திருமண உறவை ஏற்படுத்தினர். நாட்டின் சமாதானமும், நல்வாழ்வும் இவ்வித பரிசுத்த குடும்பங்களையே சார்ந்துள்ளது. வீடு எவ்விதமோ அவ்விதமே நாடும் காணப்படும் என்பது நாட்டறிஞர்களின் கருத்து.

### கிறிஸ்துவுக்கும் சபைக்குமுள்ள உறவுக்கு அடையாளம்

திருமண உறவில் உள்ள ஐக்கியத்தை கிறிஸ்துவுக்கும், சபைக்குமுள்ள ஐக்கியத்துக்கு அடையாளமாக தேவன் நியமித்துள்ளார். கிறிஸ்துவுக்கும் சபைக்குமுள்ள உறவு பரிசுத்தமாயிருப்பது போலவே தேவனால் ஏற்படுத்தப்பட்ட திருமண உறவு கணவன் மனைவிக்கிடையிலுள்ள ஐக்கியம் பரிசுத்தமானதாக இருக்க வேண்டும். புருஷனுக்கும் மனைவிக்குமுள்ள உறவும். (கிறிஸ்துவுக்கும் சபைக்குமுள்ள உறவும்) எவ்விதமானவை அவை எவ்விதமாயிருக்க வேண்டும் என்று விளக்கப்பட்டுள்ளது என்பதை எபே. 5:21-25 முடிய வாசிக்கிறோம்.

### மன ஐக்கியம் :

மன ஐக்கியம் உடல் ஐக்கியத்திற்கு முன் அவசியம், ஒருவரையொருவர் அன்பு கூர்ந்து ஒருவரையொருவர் நேசிக்க வேண்டும். ஒருவருக்காக ஒருவர் தியாகம் செய்ய வேண்டும், எப்பொழுதுமே உடல் சார்ந்த இணைப்பையே விரும்பாதபடி அளவோடுகூட நடந்து கொள்வது அவர்களுக்கு நன்மை பயக்கும். ஒருவரை காணுவதில் சுகம், ஒருவர் பக்கத்தில் ஒருவர் அமர்வதில் சுகம், பேசி மகிழ்வதில் சுகம், உளங் கலந்த உரையாடலில் சுகம், ஒருவரையொருவர் புரிந்து கொண்டு ஒருவருக்காக ஒருவர் தியாகம் செய்து தாங்குவதில் சுகம்; இவைகளில் சுகம் காண்பவர்களது வாழ்க்கை இனிமையாக இருக்கும். அப்படியில்லாமல் வேளா வேளையில் கூடிபிரியும் எந்திர வாழ்க்கை போல் வாழ்க்கை இருக்குமானுல் அது ரசிக்காது. உங்கள் மனைவியை ஒரு ரப்பர் பொம்மை என்று எண்ணிக் கொண்டு நீங்கள் நடத்த ஆரம்பித்தால் உள்ளாக வெதும்பி, வெளிப்படையாக சிரிப்பதுபோல் காட்டி, மன வருத்தத்தோடு வெளிவேஷமாக நடந்து கொள்ளுகிற மனம் புழுங்கியிருக்கிற மனைவியாக ஆக்கக் கூடாது. ஒருவரையொருவர் புரிந்து கொண்டு ஒருவருடைய மன விருப்பத்தை இன்னெருவர் நிறைவேற்றுபவராக வாழ்க்கை இருக்க வேண்டும்.

### தேவனைத் தேடுதல்

குடும்ப வாழ்வில், வீட்டில் தெய்வீக பிரசன்னம் இருக்க எப்பொழுதும் கவனமாயிருக்க வேண்டும். குடும்ப ஜெபம் இருக்க வேண்டும். வாரத்தில் ஒரு முறையோ, இரண்டு முறையோ கண்டிப்பாக ஆலயம் இருவரும் சேர்ந்து செல்ல வேண்டும் என்கிற முடிவு அவர்களுக்குள் இருக்க வேண்டும். முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள். மனக் கசப்புகள் உண்டாயிருந்தாலும் இருவருக்கும் மனவேறுபாடுகள் இருந்தாலும் ஞாயிற்றுக்கிழமை இறைவனை ஆராதிக்க அவர்கள் ஆலயம் செல்ல தீவிரப்பட வேண்டும் ஒருபோது பேசாமல் இருந்தாலும் பேசாமலாவது ஆயத்தப்பட்டு சேர்ந்து போகவில்லையென்றால் முன் பின்னுவது ஆலயம் போய்ச் சேர வேண்டும். குடும்ப ஆசீர்வாதத்துக்கு ஊற்றும் இருப்பிடமும இறைவனே. இறைவனை, அவருடைய நாளில் போய்த் தொழுது கொண்டு ஆராதித்து, அங்கே ஆசீர்வாதம் பெறுவது இவர்களுடைய குடும்ப நிறைவுக்கு முதல்காரணமாக இருக்கும் இறையாசீர்வாதத்தைத் தேடாமல், வீட்டில் ஜெபித்துக் கொண்டால் மட்டும் போதாது. குடும்ப ஜெபம் நிறைவுடையதாக இருக்காது. ஆகையால், தீர்மானம் இருக்க வேண்டும். எக்காரணங் கொண்டும், கர்த்தருடைய ஆராதனையை தவறக் கூடாது, யாராவது ஒருவர் நிவிர்த்தி இல்லாமல் மிக சுகவீனமாக ஆகிவிட்டால் அவர் மாத்திரம் படுக்கையில் இருக்க

லாம். அடுத்தவர் சென்று இறைவனை ஆராதித்து தன்னுடைய துணைக்காக வேண்டிக் கொண்டு திரும்பி வரலாம். மற்றப்படி சிறிய தலைவலி, காய்ச்சல், வயிற்றுவலி, மன அமைதி இல்லை என்கிறதற்காக வீட்டில் ஒருபோதும் ஒருவரும் தங்கக் கூடாது. இவ்விதமாய் இறைவனை கனம் பண்ண ஆரம்பிக்கிறவர்களை இறைவனும் கனம் பண்ணி, ஆசீர்வதித்து குடும்பத்தில் நிறைவு உண்டாக்குவார்.

### விருந்து உபசரிப்பு

வீட்டில் தேவ ஊழியரை அடிக்கடி அழைத்து தாங்கள் அருந்துகிற சாப்பாட்டை விருந்தளிப்பது மிகவும் நல்லது. அது தேவ ஆசீர்வாதத்தைக் கொண்டுவரும். விருந்தளிப்பது என்றால் விசேஷ சாப்பாட்டை சமையல் பண்ண அதிக பணம் செலவழிப்பது என்று அர்த்தமல்ல. தாங்கள் வழக்கமாக சாப்பிடுகிற ஆகாரத்தை விருந்தாக வழங்கலாம். அப்படி சகோதரர்கள், உற்ற நண்பர்கள், உறவினர்கள் இவர்களை சாப்பாட்டு வேளையில் நம்மோடு கூட பந்தியில் சேர்த்துக் கொள்வது மிகவும் ஆசீர்வாதம். விருந்து உபசாரம் குடும்பத்தினுடைய முக்கியம்.

### தேவ ஊழியம்:

தேவனுக்கு ஆராதனை செய்வதும், தெய்விக பணிவிடைகளில் பங்கு பெறுவதும் குடும்பத்தார் ஒவ்வொருவருடைய கடமையாகும். இருவரும் சேர்ந்தே திருச்சபையின் தேவ பணியில் ஊழியரோடு, திருச்சபையொடு சேர்ந்து கொள்வது நலம் பயக்கும். அப்படி இல்லை என்றாலும் ஒருவர் வீட்டுக் காரியங்களை கவனிக்க கணவனை ஊழியத்திலே உதவி செய்யும்படி குருக்களுக்கு உதவியாயிருக்கும்படி, வீடு சந்திக்கப் போகிறதிலேயும், விழாக் காலங்களில் அலங்காரங்கள், சபையின் ஆயத்தங்கள் இவைகளிலே பங்கு பெறும்படிய க அனுப்புவதும் மிகவும் நல்லது இது பிற்காலங்களிலும், இவர்கள் தேவனுக்கும் மனிதருக்கும் சேவை செய்ய அவர்களை ஆயத்தப்படுத்துவதாக இருக்கும்.

### உடல் நலம்:

விவாகத்துக்குப் பின்பாவது இருவரும் தங்கள் உடல்நலத்தை மிகவும் கவனமாய்க் கவனித்துக் கொள்ள வேண்டும். சமசீரான உணவை அநுசரிக்க வேண்டும். விசேஷமாக மனைவிமார்களின் சரீர சுகத்தைக் கவனிக்க வேண்டும். விவாகத்திற்குப் பின்பாவது இருவரும் அளவான உடற்பயிற்சி செய்வதிலும் சரீரத்தை ஆரோக்கியமாகவும் பெலமாகவும் வைத்துக் கொள்வதிலும் கவனம் செலுத்த வேண்டும். குழந்தைகள் குடும்பத்தில் தோன்றி வளரும்போது தங்கள் குடும்ப வாழ்க்கை செழிப்பாய் இருக்கவும் ஆரோக்கியத்தைக் கவனித்துக் கொள்வதும் இருவருடைய கடமையாகும்.

### குடும்ப ஜெபம்:

தினந்தோறும் காலையிலோ மாலையிலோ தமக்கு தங்களுக்கு வசதியான நேரத்தில் குடும்ப ஜெபம் செய்ய வேண்டும். குடும்ப ஜெபம் இல்லாத வீடு கூரையில்லாத வீடு என்று சொன்னார்கள் கூரையில்லை யென்றால் வெயிலும் அடிக்கும் மழையும் பெய்யும். திருடனும் புகுவான். குடும்ப ஜெபம் கண்டிப்பாக இருக்க வேண்டும். இருவருக்கும் மனஸ்தாபம் பிணக்குகள் இருந்தாலும் குடும்ப ஜெபத்திற்கு முன்பாக பேசி ஒருவருக்கொருவர் மன்னிப்புக் கேட்டுத் தீர்த்து குடும்ப ஜெபத்தில் கலந்து கொள்ள வேண்டும். அதற்காக குறித்த ஒரு இடம் வீட்டில் பல அறைகள் இருந்தால் ஒரு அறையை ஜெபங்களுக்காக ஒதுக்கிவிட வேண்டும். இல்லையென்றால் வீட்டில் ஒரு இடத்தை முக்கியமாக ஒதுக்கி வைக்க வேண்டும். குறித்த வேளையில் யார் முந்தி வந்தாலும் அவர்கள் அந்த இடத்தை ஆயத்தப்படுத்தி விரித்து ஜெபத்தில் அமர வேண்டும். ஒன்றோ, இரண்டோ தெய்விகப் பாடல்களைப் பாடி தேவனை வாழ்த்துவது. பின்பு வேதபாகம் ஒன்றை ஒழுங்காக காலண்டர் பிரகாரம் வாசிக்கிறது. வாசிக்கும்பொழுது அனுக்ருப் பாதியாக அந்த பாகத்தை வாசித்த பின்பு அந்தப் பாகத்தில் இறைவன் என்ன சொல்லியிருக்கிறார் என்று குடும்பத் தலைவன் சுருக்கமாக விளக்கலாம், தங்களுக்கு மனதில் தோன்றுவதை சுருக்கமாகப் பேசி, கேள்வி கேட்டு பதில் கொடுத்து அவைகளை புரிந்துகொள்ள முயற்சிக்கலாம். பின்பு ஜெபம் பண்ண வேண்டும். ஒரு நாள் கணவன் முந்தி ஜெபிக்கலாம். பின்பு மனைவி ஜெபிக்கலாம். மறுநாள் மனைவி முந்தி

ஜெபிக்கலாம். பின்பு கணவன் ஜெபிக்க வேண்டும். இவ்விதமாக தங்களுக்காகவும் தங்கள் குடும்பத் தேவைகளுக்காகவும் உலக இரட்சிப்புக்காகவும், அழிந்து போகிற ஆத்துமாக்களுக்காகவும் சபையில் பெலவீனமாயிருக்கிற குடும்பங்களுக்காகவும் குறைச்சலில் இருக்கிறவர்களுக்காகவும் சமாதானமில்லாத குடும்பங்களுக்காகவும் விசேஷமாய் குருக்களுக்காகவும் தெய்வீக பணிகளுக்காகவும் இறை சந்நிதானவதிலே ஜெபித்து இறையாசிர்வாதத்துடனே இயேசுவின் நாமத்தில் முடிக்கலாம். ஏதாவது ஒரு காரணத்தினால் தூர இடம் பிரயாணம் போயிருக்கிறதினால் அல்லது ஒருவர் வீட்டில் இல்லையென்றால் குடும்ப ஜெபம் நிறுத்தப்பட வேண்டியது இல்லை. மீதியாக இருக்கிற ஒருவர் அதைச் செய்யலாம். இரண்டு பேருமே சேர்ந்து குடும்ப ஜெபத்தில் அமர முடியாத தடை உண்டாயிருக்குமென்றால் கர்த்தரிடம் மன்னிப்புக் கேட்டு மறுநாள் ஒழுங்காக அதைச் செய்ய வேண்டும். ஒழுங்கான வேத வாசிப்பு குடும்ப ஜெபத்திலும், தனி ஜெபத்திலும் கையாட வேண்டும்.

## தனி ஜெபம் :

தனி ஜெபங்களில் ஒவ்வொருவரும் தங்களுடைய துணைக்காக கர்த்தரை ஸ்தோத்தரிக்க வேண்டும். கணவன் தனக்கு கர்த்தர் கொடுத்த மனைவிக்காக கர்த்தரை ஸ்தோத்தரிக்க வேண்டும். அவளுக்காக ஜெபம் பண்ண வேண்டும். குழந்தைகளுக்காக ஜெபம் பண்ண வேண்டும். ஏதாவது மனஸ்தாபம் இருந்தாலும அந்த மனஸ்தாபத்தை தேவன் நீக்கித் தரும்படியாகவும், பேசப் போகிறேன் அப்போது சமாதானம் அருளும என்று ஜெபித்துக் கொள்ள வேண்டும். அப்போது கர்த்தர் கிரியை செய்வார். அப்படியே மனைவியும், கர்த்தர் தனக்குக் கொடுத்த கணவனுக்காக கர்த்தரை ஸ்தோத்தரிக்க வேண்டும். எவ்விதமாய் நடந்துகொள்ள வேண்டும் என்கிற புத்தியும் ஞானமும் கர்த்தர் தரும்படியாக ஜெபிக்க வேண்டும். ஏதாவது மனஸ்தாபம் இருந்தாலும் அதை சரி செய்து கொள்வேன் என்று இறைவனிடத்தில் சொல்லிவிட்டு பின்பு அந்தக் காரியமாக பேசும்பொழுது இணங்கி சமாதானமாகப் போவது நல்லது. எக்காரணத்தைக் கொண்டும் மனக்கசப்பு நீடிக்கவிடக் கூடாது. விவாக ஒப்பந்தம் என்று சொல்லும்போது உயிருள்ள மட்டும் உள்ள ஏற்பாடாகும். நான்கு சுவர்களுக்குள்ளே வசிக்கிறவர்களாயிருக்கிறபடியினாலே எப்படி என்றாலும் சமாதானமாய் இருக்கக் கடமைப்பட்டுள்ளோம். ஒவ்வொரு நாளையும் சந்தோஷமாகக் கழிக்க கற்றுத் தேர்ச்சியடைய வேண்டும். சந்தோஷமாய் என்றால் மன ஐக்கியமாக அவர்கள் நித்திரைக்குச் செல்ல ஒருவருக்காக ஒருவர் கர்த்தரை ஸ்தோத்தரிக்க மனமுள்ளவர்களாக அவர்களுடைய வாழ்க்கை அமைய வேண்டு இவ்விதமாக அவர்கள் தங்கள் வாழ்க்கையில் இணைந்து வாழ்ந்து இறைவனுடைய எல்லா ஆசீர்வாதங்களையும் பெற்று தேவனுக்கு மகிமையாகவும், திருச்சபைக்குச் சாட்சியாகவும் தூண்களாகவும் ஒவ்வொரு குடும்பங்களும் விளங்குவார்களாக.

சங். 127.ல் இவ்விதமாக நாம் வாசிக்கிறோம். "கர்த்தர் வீட்டைக் கட்டாராகில் அதைக் கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா: கர்த்தர் நகரத்தைக் காவாராகில் காவலாளர் விழித்திருக்கிறது விருதா. நீங்கள் அதிகாலையில் எழுந்து, நேரப்பட வேலையில் தரித்து, வருத்தத்தின் அப்பத்தைச் சாப்பிடுகிறதும விருதா: அவரே தமக்குப் பிரியமானவனுக்கு நித்திரை அளிக்கிறார். இதோ, பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம், கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும் பலன். வாலவயதின் குமாரர் பலவான் கையிலுள்ள அம்புகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள். அவைகளால் தன் அம்பறாத்தூணியை நிரப்பின புருஷன் பாக்கியவான்; அவர்கள் நாணமடையாமல் ஒலிமுக வாசலில் சத்துருக்களோடே பேசுவார்கள்" என்று எழுதப்பட்டுள்ளது. கர்த்தர் வீட்டைக் கட்டாராகில் அதைக் கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா; கர்த்தர் நகரத்தைக் காவாராகில் காவலாளர் விழித்திருக்கிறது விருதா என்கிற வேத வாக்கியங்களை "கர்த்தர் குடும்பத்தைக் கட்டாராகில் அதைக் கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா; கர்த்தர் குடும்பத்தைக் காவாராகில் காவலாளர் விழித்திருக்கிறது விருதா" என்று வாசித்தால் புது விதமாக அர்த்தம் விளங்கும் உண்மையும் அது தான். வீட்டைக் கட்டுகிறது என்றால் பில்டிங்காக சுவர் எழுப்புகிறதல்ல. குடும்பத்தைக் கட்டுவதாகும். ஏனென்றால் பின் உள்ள வேத வாக்கியங்களில் பிள்ளைகளைப் பற்றியும் குடும்ப

திறைவைப் பற்றியும் வாசிக்கிறோம். அவ்வபடி யினால் கர்த்தர் உங்கள் குடும்பத்தைக் கட்டும் படியாகவும், குடும்பத்தை பாதுகாக்கும்படியா கவும், குடும்பத்தை ஆசீர்வதிக்கும்படியாகவும் ஜெபம் பண்ணவும், கர்த்தருடைய வழிகளை கேட்டறிந்து அதன்படி நடக்கவும் பிரயாசப்பட வேண்டும். தொடர்ந்து சங். 128-ல் குடும்ப ஆசீர்வாதம் எழுதப்பட்டிருக்கிறது. ''இதோ, கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் இவ்வித மாய் ஆசீர்வதிக்கப்படுவான்'' என்பதாம்.

''புருஷன் தன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்யக்கடவன்; அப்படியே மனைவியும் தன் புருஷனுக்குச் செய்யக்கடவள்'' (I கொரி. 7 : 3).

---

ஜ. வி. ரேசஷ்

## கர்த்தருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்கள்

கிருபை நகரிலுள்ள திருச்சபையில் ஞாயிறு பரிசுத்த ஆராதனை மிகவும் ஆசீர்வாதமாக நடந்து முடிந்தது. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் இல்லங்களுக்குத் திரும்பிக் கொண்டிருந் தார்கள். அவ்வாறே சந்தோஷபுரத்திலிருந்து வந்திருந்த விசுவாசிகளும் தங்கள் ஊருக்குச் செல்வதற்காக சபை அருகிலுள்ள பஸ் ஸ்டாப் பில் காத்திருந்தார்கள். சந்தோஷபுரம் என் பது கிருபை நகரின் அருகிலுள்ள ஒரு சிற்றூ ராகும். என்றாலும், சாலை வசதிகள சரியாக இல்லாதபடியால் பஸ் போக்குவரத்து மிகவும் குறைவு. மேலும் சாலையிலுள்ள பாலம் தாழ் வாக அமைந்துள்ளதால் மழை காலத்தில் சந் தோஷபுரம் ஏறத்தாழ ஒரு தீவு போன்று காட்சியளிக்கும். அந்நாட்களில் அங்குள்ள தேவ ஜனங்கள் திருச்சபைக்குக் கடந்துவந்து தேவனைத் தொழுது கொள்வதில் மிகவும் கஷ் டப்பட்டார்கள். அந்நிலை மாறுவதற்காக சபை யோர் எல்லோரும் ஊக்கமாக ஜெபித்தார்கள். அரசு மேல் அதிகாரிகளுக்கும் முறைப்படி விப ரங்கள் தெரியப்படுத்தப்பட்டன. அத்துடன் சபையிலுள்ள ''சகோதரர்கள் ஐக்கியக் குழு வினர்'' திட்டமிட்டு, தீர்மானித்து தாங்களே சாலைகளை சீரமைப்பதற்குத் தொடங்கினார்கள்.

தேவ கிருபையினாலும், பரிசுத்தவான் களின் ஜெபத்தினாலும், சபையார்களின் உற்சா கத்தினாலும், உதவியினாலும், சில தினங்களு குள்ளாகவே சாலையானது சீர்படுத்தப்பட்டு விட்டது. அதனால் பஸ்கள் மிகுந்த எண்ணிக் கையில் ஊருக்கு வந்து செல்லலாயிற்று. சபை யினரு முயற்சியைக் கண்ணுற்ற சந்தோஷபுரம் மக்கள் எல்லோருமே மெய்யாக சந்தோஷப்பட் டார்கள். ஒரு நல்ல நாளில் அவ்வூர் பேரவைக் கூடி, கிருபை நகரின் போதகரை அழைத்துக் கனம் பண்ணி, தங்களுக்கு இறைவனைப் பற்றி போதிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண் டார்கள். திரளான மக்கள் இறை செய்தியைக் கேட்பதற்காக ஆவலுடன் குழுமியிருந்தார் கள்.

போதகரின் ''அன்புச் செய்தியானது அன்று அநேக மக்களுடைய உள்ளங்களைத் தொட்டது. போதகர் பின்வருமாறு பிரசங் கித்தார் : தேவ ஜனங்களே, இந்த ஊரிலிருந்து கிருபை நகரை இணைக்கக் கூடிய அந்த சிறிய சாலையானது சீரமைக்கப்படாதிருந்த காரணத் தால் அன்றாடத் தேவைகள் கிடைக்காமல் நீங்கள் எவ்வளவோ சொல்லி முடியாத துன் பத்தை அனுபவித்தீர்கள் என்பதை நாம் அறி வோம். பாருங்கள்! இடைத் தூரமோ இரண்டு கிலோமீட்டர்தான். ஆனாலும் பாதையானது செவ்வைப்படுத்தப்பட வேண்டும். இல்லாவிட் டால் சாலை இருப்பதால் நமக்கு எந்தப் பயனும் இல்லை.

அதுபோலவே, நம்முடைய இருதயம் இறைவனை நோக்கி வாஞ்சையாக இருந்தாலும் அது தூய்மைப்படுத்தப்படாவிட்டால், செம்

மைப்படுத்தப்படாவிட்டால், இறைவனிடம் தொடர்பு கொள்ள, போக்குவரத்தாக இருக்க இயலாது. பயணத்தின்போது சாலையில் தடையாகக் கிடக்கக் கூடிய கற்களை அகற்றுவது போல, நமது ஜீவியத்தில் காணப்படும் மீறுதல்கள் மன்னிக்கப்பட வேண்டும். பாவங்கள் கழுவப்பட வேண்டும், அக்கிரமங்கள் அகற்றப்பட வேண்டும். அப்பொழுதுதான் இறையன்பை ருசித்து, ஆனந்தம் கொண்டு, அகமகிழ்ந்து களிகூற முடியும். மாத்திரமல்ல, தேவனுடைய நித்திய ராஜ்யத்திற்குள் பிரவேசிக்க முடியும்.

கிறிஸ்துவானவர் வேத வாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு வேத வாக்கியங்களின்படி மூன்றும் நாளில் உயிர்த்தெழுந்தார் (I கொரி. 15 : 3, 4) என்பதே சுவிசேஷமாகும். எனவே, நம்முடைய பாவங்கள் கழுவப்படுவதற்கு இறைவன் இயேசுவிடம் கடந்து வரவேண்டும் (I யோ. 1.7) என்று வேதம் நமக்கு அறிவுறுத்துகிறது.

ஆதலால், கர்த்தருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்கள், அவருக்கு பாதைகளைச் செவ்வை பண்ணுங்கள் (மத். 3:3). அப்பொழுது, இரட்சிக்கப்படுவீர்கள். ஏனெனில், தன் வழியைச் செவ்வைப்படுத்துகிறவனுக்குத் தேவனுடைய இரட்சிப்பை வெளிப்படுத்துவேன் என்று கர்த்தர் சொல்கிறார் (சங். 50:23). கர்த்தர் உங்களை ஆசிர்வதிப்பாராக.

''இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: எலியா முந்தி வந்து எல்லாவற்றையும் சீர்படுத்துவது மெய்தான்''

(மத். 17 : 11)

---

# துரோகியும் ஏழையுமான மனிதன்

ஒரு அதிபதியின் வீட்டில் வேலைக்காரன் ஒருவன் மிகவும் உண்மையாய் வேலை செய்து வந்தவன். அவனது உண்மையை எஜமான் மெச்சிக் கொண்டான். அவனை நம்பி பல பொறுப்புகளை ஒப்படைத்தான். ஒருநாள் அதிபதி வேலைக்காரனை அழைத்து 50,000/- ரூபாயைக் கொடுத்து, 50 கிலோமீட்டர் தொலைவில் உள்ள ஒரு பட்டணத்திற்கு போய் ஒரு அறை எடுத்து இரண்டுநாள் தங்கி வீட்டுக்கு பல பொருட்களை வாங்கி வா என்று அனுப்பினான்.

ஒரே சமயத்தில் இவ்வளவு தொகையைப் பார்த்ததும், அவனுக்கு சபலம் தட்டிற்று. ஆனாலும் அடக்கிக் கொண்டான். சொன்னபடி அறை எடுத்து தங்கினான். அங்கே இவனை பணக்காரன் என்று எண்ணி பெருமதிப்பு கொடுத்தனர். இவ்வளவு அடிமையாயிருந்தவனுக்கு மற்றவர்களால் கனம் உண்டான உடன் மயங்கிப் போனான். ஹோட்டலில் போய் சாப்பிட்டான். தன்னை வசதியுள்ளவன் என்று எண்ணிக் கொள்ள வேண்டும் என்று உயர்ரக வஸ்திரங்களை வாங்கி அணிந்து கொண்டான். நடந்து போவதற்கு பதில் டாக்ஸியில் போனான். மது உண்டு மயங்கினான். எப்படியோ பணம் செலவாயிற்று. எஜமானிடம் போகப் பயந்து அங்கேயே தங்கிவிட்டான். பணமும் செலவழிந்து விட்டது. வேலை தேடி பார்த்தான் கிடைக்கவில்லை. பசியாயிற்று. பிச்சைக் கேட்டுப் பார்த்தான் கிடைக்கவில்லை. கடையில் எச்சில் இலையில் உள்ளதை சாப்பிட வேண்டியதாயிற்று. தனது எஜமானனுக்கு துரோகம் செய்து இப்படி முடனாய்ப் போனான் அந்த வேலைக்காரன்.

மனித வர்க்கம் பலுகி பெருக வேண்டுமென்று தேவன் சித்தம் கொண்டார். கணவனும் மனைவியும் சேர்ந்து பரிசுத்த சந்ததியை (தேவ பக்தியுள்ள) பிறப்பிக்க விரும்பினார். வார்த்தையினால் வானத்தையும், பூமியையும் அதிலுள்ள யாவற்றையும் உண்டாக்க வல்லவர் ஒரே வார்த்தையால் கடற்கரை மணலத்தனை மனிதர்களை உண்டாக்க முடியும். ஆனால் அவர் அப்படிச் செய்ய விரும்பாமல்

ஆணையும் பெண்ணையும் உண்டாக்கி அவர்களை கணவனும் மனைவியுமாய் திருமணத்தால் இணைந்து தேவ பக்தியுள்ள சந்ததியைப் பிறப்பிக்க திருவுளம் கொண்டார்.

ஆகையால் ஆணும் பெண்ணும் இணைவதற்கான இயக்கத்தை அவர்களில் வைத்து அந்த செய்கையிலே இன்பத்தையும் வைத்தார். மனித வர்க்கமோ, இயக்கத்தையும் இன்பத்தையுமே கவனித்து இன்பத்தை அனுபவிக்க விரும்புகின்றன. இறைவன் எதற்காக இதிலே இன்பம் வைத்துள்ளார் என்பதை உணர முடியாமல் மனம் மயங்கிப் போனான்.

இந்த இன்பத்தை அடைய மனிதன் முறைப்படி திருமணம் செய்து கணவன் மனைவியோடே மனைவி கணவனோடே சேர்ந்து இன்பத்தை அடையலாம். ஆனால் மனிதனோ தேவ திட்டத்தை உடைத்துப் போடும் வகையில் சுய புணர்ச்சி செய்து இன்பத்தை அடைய முயல்கிறான். மிருகத்தோடே புணர்ந்து அருவருப்பானதைச் செய்கிறான். வேசியோடு சேர்ந்து விபசாரம் பண்ணுகிறான், பிறன் மனைவியோடே சேர்ந்து தேவ பிரமாணத்தை மீறி போகிறான். முடிவு நரம்பு தளர்ச்சி, வியாதி, சண்டை சச்சரவு, ஜெயில், அவமானம், கொலை, நீங்காரோகம், இறுதியில் நித்திய நரகம். மனிதன் தேவ துரோகம் செய்து மூடனைப் போல நஷ்டமடைகிறான்.

பணம் எல்லாவற்றிற்கும் உதவும் (பிர. 10 : 19). இவ்வுலகில் ஜீவிக்க பணம் தேவை. அன்றன்று ஆகாரத்திற்கு பணம் தேவை, உடைக்குப் பணம் தேவை, உறைவிடத்திற்குப் பணம் தேவை, எல்லாவற்றிற்கும் பணம் தேவை உண்மைதான். ஆனால் மனிதர்களில் பலர் பணம் மட்டுமே தேவை என்று எண்ணி நியாயமாய் உழைத்து பணம் சம்பாத்தியம் பண்ணும் வழியை விட்டு விலகி அடுத்தவன் பணத்தை திருடி திடீர் பணக்காரராகிறார்கள். நம்பிக்கைத் துரோகம் பண்ணி பொருளீட்டுகின்றனர். கள்ளத் தராசு பிடித்து கலப்படம் செய்து, லஞ்சம் வாங்கி, லட்சம் பேரிடம் பிச்சை எடுத்து லாட்டரியில் லட்சாதிபதியாகி, பொய்யை முதலீடாக்கி சூதாடி இன்னும் பற்பல விதத்தில் பெரும் பணக்காரர்களாகி புல்லின் பூவைப்போல் செழிப்பாய் தெரிகின்றனர். வெயில் ஏறும்போது புல்லின் 'பூ' எப்படி வாடி வதங்கி காற்றில் போய் விடுகிறதோ அப்படியே ஐசுவரியமும் போய்விடும் என்பதை அறியாதிருக்கிறான்.

குப்பையிலிருக்கிறவன் ராஜாவாக முடியும். இராஜாவாக இருக்கிறவன் ஆண்டியாக முடியும் என்று சரித்திரம் காட்டியிடுவதை உணராதிருக்கிறான் மூட மனிதன். இந்த பண ஆசை கொண்டு பொருளீட்டி என்ன மேன்மை? அநேக வேதனை, பயம், தூக்கமில்லா இரவு, திராவியாதி, ஒன்றுக்கும் உதவா ஊதாரி பிள்ளைகள், ஏழைகளிடம் சாபம், தேவ கோபம் முடிவில் சுண்டுவிரல் தோய்த்த தண்ணீருமில்லா தாங்கொண்ணா நரகத் தீ.

நமது எஜமானுக்காய் பொருள் வாங்க அதிகப் பணத்துடன் பொருள் வாங்கப்போனால் வியாபாரி நம்மைக் கவப்படுத்தத்தான் செய்வான். அவனுக்கு லாபம் வருகிறதே. இதிலே மயங்கி எஜமான் பணத்தை நம் பணமாகவே எண்ணி தகாத விதமாய் செலவிட்டால் எஜமான் நம்மீது வழக்குப் போட்டு நமக்கு சத்துருவாய் காட்சியளிப்பாரே.

கனமும் மகிமையும் கர்த்தருக்கே உரியதாயிருக்க சிலர் மனிதப் புகழ்ச்சியில் மயங்கிப் போகிறார்கள். மகிமையைத் தனதாக்கி தேவ பகைஞர்களாகிறார்கள். தேவன் பணம் கொடுத்தால் அதில் பெருமை, தேவன் அழகு கொடுத்தால் அதில் பெருமை. தேவன் பராக்கிரமம் கொடுத்தால் அதில் பெருமை. தேவன் ஞானம் கொடுத்தால் அதில் பெருமை, என்னால் உண்டாயிற்று, நான் செய்தேன் என்பதில் பெருமை நீ எதில் பெருமை கொள்ளுகிறாயோ அதிலே உனக்கு சிறுமை உண்டாகும். உனக்கு ஐயோ! ஏனெனில் தேவன் உனக்கு எதிர் நிற்கிறாரே.

இச்சையை அடக்கு, பேரின்பமடைவாய். பொருளை நீ தேடாதே, அது உன்னைத் தேடும். கர்த்தர் முன் தாழ்மைப்படு, அவர் உன்னை உயர்த்துவார். தேவ துரோகம் செய்யாதே, மூடனாய்ப் போகாதே. மிருகமாய் மாறாதே, மேன்மையான மனிதனாய் இரு.

# காரணத்தைக் கண்டுபிடி

நாம் தேவனுடைய பிள்ளைகளாக மாறிய பிறகும் நம்முடைய வாழ்க்கையில் பல நெருக்கங்கள், கலக்கங்கள், வியாதிகள், போராட்டங்கள், பிரச்சினைகள், பெலவீனங்கள், கடன்கள், வறுமைகள், தரித்திரங்கள் இப்படி பல தொல்லைகள் வருகிறதைக் காண்கிறோம். ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு விதமாக இவை வருவதைக் காண்கிறோம். இதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். காரணமில்லாமல் ஒன்றும் நம்மில் வராது. இதற்கு ஏதோ ஒரு காரணமிருக்கும். தீ இல்லாமல் புகை எழும்பாது என்று சொல்லும் பழமொழியின் பிரகாரம் காரணமில்லாமல் ஒன்றும் நடக்காது. ஆகையால், தேவனுடைய பிள்ளையே, நம்மில் நடக்கிற நிமைகளுக்குக் காரணம் உண்டு. காரணத்தைக் கண்டுபிடி. ஏதோ தற்செயலாய் வந்தது என்று எண்ணாதே.

காரணத்தைக் கண்டுபிடிக்காமல் கழுதையைப் போட்டு அடிக்காதே. எண் 22:22 முதல் வாசித்தால்: பிலேயாம் தேவ அனுமதியில்லாமல் பிரயாணப்பட்டதினால் தேவனுடைய கர்த்தர் அவனுக்கு எதிராக வந்து நின்றார். தேவன் எதிராக வந்து நின்றதைக் கண்ட கழுதை அவனை சுவர் ஓரமாகக் கொண்டுபோய் நெருக்கிற்று. அவன் உடனே காரணத்தைக் கண்டுபிடிக்கவில்லை. இவ்வளவு காலமாக நம் சொல்லைக் கேட்டு நம்மை சுமந்து சென்ற கழுதை இன்று இப்படி செய்கிறதே இதற்குக் காரணம் என்ன என்று எண்ணாமல் கழுதையைப் போட்டு அடித்ததாகப் பார்க்கிறோம். இதுபோலவே நம்முடைய வாழ்க்கையில் அவ்வப்போது சில போராட்டங்கள் வருவதை நாம் அறிகிறோம். அதினால் ஆத்திரமடைகிறோம். தேவ சமூகம் செல்லும் காரியத்தில் குறைவு இருக்கிறதா என்பதை அறிய வேண்டும். உடனே உணர்ந்து ஏதோ நாம தேவனுக்குப் பிரியமில்லாத காரியம் எதையோ செய்திருக்கிறோம். வழியைவிட்டு வேறு வழியாக வந்துவிட்டோம் என்று நம்மை நாம் தற்பரிசோதனை செய்து பார்த்து நம்மை சரிப்படுத்திக் கொள்ள வேண்டும். காரணம் கண்டுபிடிக்கப்பட வேண்டும்.

நாங்களும் போல கப்பல் கடல் கொந்தளிப்புக்குள்ளானது. யோனா 1:4 முதல் கவனித்தால்: கப்பலில பிரயாணம் பண்ணினவர்கள பயந்து, கப்பலை லேசாக்கினார்கள். அவனவன் தேவனை நோக்கி கூப்பிட்டான். ஆனாலும் கொந்தளிப்பு குறையவில்லை. வரவர கடல் கொந்தளித்துக் கொண்டிருந்தது. பின் அவர்களுக்கு ஒரு யோசனை வந்தது. இது எதினால் வந்தது, இதற்குக் காரணம் என்ன, இதற்குக் காரணமான மனிதன் இந்தக் கப்பலில் இருக்கிறானா என்று பார்க்க சீட்டு போட்டார்கள். சீட்டு யோனாவின் பெயரில் விழுந்தது. உடனே அவனை விசாரித்து அவனுடைய அனுமதியின்படி யோனாவை கடலில் தூக்கி எறிந்தார்கள். கடல் கொந்தளிப்பு குறைந்துவிட்டது. அமைதியாக பிரயாணம் செய்தார்கள என்று பார்க்கிறோம். நாம் தேவனுடைய பிள்ளையாக மாறினாலும் தேவனுக்குப் பிரியமில்லாத ஒரு சுபாவம் நம்மில் உருவானால் நமக்கு அமைதியிராது. சமாதானம் இராது; அதினால் பல தொல்லைகள் நமக்கு வரும். கஷ்டங்கள உண்டாகும். நஷ்டங்கள் உண்டாகும் பிள்ளைகள் கீழ்ப்படிய மாட்டார்கள், மனைவி எதிர்த்துப் பேசுகிறவளாக காணப்படுவாள். இதற்காக அவர்களில் ஆத்திரமடையாமல் உன்னை பரிசோதனை செய். நீ எதிலே தவறி இருக்கிறாய் என்று கண்டுபிடித்து சரிபண்ண வேண்டும். அப்பொழுதே அமைதியுண்டாகும். அமைதியான கிறிஸ்தவ வாழ்க்கை செய்யலாம். யாருக்கு இந்த போராட்டங்கள் வருகிறது என்றால் தேவன் நேசிக்கிறவர்களுக்கே. அவர்கள் தவறு செய்யும் போதே சிட்சை (சோதனை) வருகிறது. ஆகையால், தேவன் நேசிக்கிற பிள்ளைகளை இப்படி சிட்சித்து திருத்துகிறார். எனவே தேவசிட்சையை அற்பமாக எண்ணாதே. தேவன் சிட்சிக்கும்போது சோர்ந்து போகாதே (எபி 12:5-6) சிட்சையை பகைக்காதே (சங். 50:17).

வேதத்தின் பிரகாரம் நாம் பார்க்கும போது ஒரு [illegible] தவறு நம்மில் வந்தாலும் [illegible] விடு என்று பார்க்கிறோம். II சாமு. 6:16ல் ஒரு சம்பவத்தைப பார்க்கிறோம். தாவீது ராஜா கர்த்தருக்கு முன்பாக

குதித்து நடனமாடி வருகிறதை அவருடைய மனைவி மீகாள் ஜன்னல் வழியாக பார்த்து தன் இருதயத்தில் தன் கணவனை அவமதித்தாள் என்று பார்க்கிறோம். அவள் வாயினால் சொன்னதாக அங்கு சொல்லப்படவில்லை. இருதயத்தில் அவமதித்தாள். இருதயத்தில்தான் இப்படி ஒரு சிந்தை வந்தது. இவர் ஒரு ராஜாவாக இருக்கிறாரே, ஆனாலும் இப்படி ஆடிப்பாடி வருகிறாரே, இது நல்லதாக இருக்கிறதா, வெட்கமில்லை என்று தன் இருதயத்தில் எண்ணினாள், அவமதித்தாள். அதை தாவீது ராஜா காணவில்லை, அறியவில்லை. தேவனாகிய கர்த்தர் காண்கிறார் (II சாமு 6:21) அதினால் அவளுக்கு என்ன நேரிட்டது (II சாமு. 6:23). அவள் மரணநாள் மட்டும் பிள்ளையில்லாமல் இருந்தாள் என்று வாசிக்கிறோம். மனுஷன் முகத்தைப் பார்ப்பான், கர்த்தரோ இருதயத்தைப் பார்க்கிறார் (I சாமு. 16:7). ஆகையால், இருதயத்தில் எண்ணுகிறதையும் தேவன் பார்த்து அதற்கும் தண்டனை கொடுக்கிறார். ஒரு சின்ன குறைகூட தேவன் விடுகிறதில்லை. ஆதிசாத்தானும்; நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன், உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்தில் சொன்னாயே. ஆனாலும் நீ அகாதமான பாதாளத்திலே தள்ளுண்டு போனாய் (ஏசா. 14:14-15) என்று எழுதப்பட்டிருக்கிறது. உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்று இருதயத்தில் சொன்னான், விழுந்து போய்விட்டான். மீகாளும் இருதயத்தில்தான் அவமதித்தாள், தண்டனை அடைந்தாள். மரண நாள்மட்டும் மலடியாயிருந்தாள் என்று வேதம் சொல்லுகிறது. இவ்விதமாக தேவன் மனுஷனை பார்க்கிறார். யோபு இவ்விதமாக சொல்கிறார். இப்பொழுது என் நடைகளை எண்ணுகிறீர், என் பாவத்தின் மேலல்லவோ கவனமாயிருக்கிறீர் என்கிறார் (யோபு. 14:14-16). மனுஷனுடைய நடைகளை எண்ணுகிறார், ஒவ்வொரு நடையையும் எண்ணுகிறார். எப்படி நடக்கிறான் என்று பார்க்கிறார் என்று வேதம் சொல்லுகிறது. சின்ன காரியங்கள் ஒவ்வொன்றையும் தேவன் கவனிக்கிறார். பூரண பரிசுத்தம் உண்டாக வேண்டும் என்று தேவன் இப்படி செய்கிறார். ஆகையால் நம்மை பார்த்து காரணங்களை கண்டுபிடித்து தேவனுக்கு ஏற்றவாறு நடப்போம். நம்மில் வரும் காரியங்களுக்கு காரணமுண்டு, ஆகையால் காரணத்தைக் கண்டுபிடி.

தசமபாக காணிக்கை சரியாக செலுத்துகிறோமா, பொருத்தனை பண்ணின காணிக்கையை செலுத்தாமல் மறந்து விட்டோமா, பழைய பாவங்களை சரியாக தோண்டி அறிக்கை செய்திருக்கிறோமா, பழைய கடன்களை கொடுத்து தீர்த்திருக்கிறோமா, களவாக எடுத்த பொருள் நம் வீட்டில் இன்னும் இருக்கிறதா, இன்னும் கொடுத்து தீர்க்கவில்லையா, முன் சண்டை போட்டவர்களிடம் இன்னும் ஒப்புரவாகவில்லையா, பழைய மாம்ச சிந்தைக்கு இடங் கொடுக்கிறோமா, தலைமைக்கு சரியாக கீழ்ப்படிகிறோமா, சில காட்சி தரிசனங்கள் கிடைத்தவுடன் இருதயத்தில் பெருமை உண்டாகிறதா, ஆத்துமாவுக்கு விரோதமாக போர் செய்கிற மாம்ச இச்சைகளை விட்டு இன்னும் விலகவில்லையா, இன்னும் நம்மில் என்ன இருக்கிறது என்று நாம் கண்டுபிடித்து அதை சரி பண்ணும்போது தேவ சமாதானம் நம் இருதயத்தை ஆட்கொள்ளும் என்று அறிகிறோம். எல்லா தொல்லைகளும் நம்மைவிட்டு அகன்று போம் என்பதை அறிகிறோம். ஆகையால் கார காரணமில்லாமல் நம்மில் ஒன்றும் நடக்காது. எனவே காரணத்தைக் கண்டுபிடித்து சரி பண்ணுவோம். ''அவர் மனப்பூர்வமாய் மனுப்புத்திரரை சிறுமையாக்கிச் சஞ்சலப்படுத்துகிறதில்லை'' (புல. 3:33). காரணம் இருக்கும், காரணத்தைக் கண்டுபிடி. தேவன் உன்னை ஆசீர்வதிப்பார்.

## சாட்சி

''கர்த்தர் எனக்கு நன்மை செய்தபடியினால் அவரைப் பாடுவேன்'' (சங் 13:16).

கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! நான் கன்னியாகுமரி மாவட்டத்தில் பைங்குளம் என்னும் கிராமத்தைச் சார்ந்தவனாகும். என்னுடைய பெயர் தேவதாஸ். நான் C.S.I. குடும்பத்தில் பிறந்து C.S.I. கிறிஸ்தவ பெற்றோர்களால் வளர்க்கப்

'தேவன் ஒருவரே...'
THERE IS ONE GOD...
Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

பட்டேன். 5 வருடம் கோயில்பிள்ளையாகவும் வேலை செய்தேன். ஆனாலும், தேவபயமற்றவனாகவும் வாழ்ந்தேன். சில வாலிப நண்பர்களுடன் சேர்ந்து நாடகம் படித்து நடிப்பதும், சீட்டு விளையாடுவதும், சாராயம், கள் போன்ற போதைப் பொருள்களை குடித்து வந்தேன். அதன் பிறகு C.S.I. முறைப்படி திருமணமும் ஆனது. மறு வருடம் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதன் பிறகு 12 வருடம் குழந்தைகள் இல்லாமல் இருந்தது. என் உறவினர்களும் ஊர் மக்களும் ஆண்பிள்ளை இல்லாதவன் என்று கேவலமாகப் பேசினார்கள். இந்த பேச்சு என் ஆத்துமாவுக்கு துக்கமாக காணப்பட்டது. இப்படியிருக்க, 1977ல் நாங்கள் அம்பி முக்காடு C.S.I. சபையில் ஜெபக்குழு நடத்தி வந்தோம். வீடு வீடாக சென்று ஜெபிப்பதும் கன்வென்ஷன்கள் நடத்துவதும் பாடல் குழுவில் சேர்ந்து பாடுவதுமாக என் வாழ்க்கை இருந்தது. எனினும் ஒரு ஆண் குழந்தை இல்லையே என்ற துக்கமும் பாரமும் என்னை ஆட்கொண்டிருந்தது.

இந்நிலையில் கர்த்தருடைய சபையாகிய 'புதிய எருசலேம் சபை'யை 1980-ம் ஆண்டு ஜூலை மாதம் அறிந்து கொண்டேன். அதன் பிறகு தேவனை முழு இருதயத்தோடும் விசுவாசித்து பாவமன்னிப்புக்கென்று 1981ல் புதிய எருசலேம் சபையில் துரைசாமிபுரத்தில் வைத்து ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டேன். சபையிலிருந்து வெளியாகும் "புதிய எருசலேம் செய்தி" என்னும் பத்திரிகையும் வாசிப்பதுண்டு. ஒருநாள் எனக்கு ஒரு ஆண் குழந்தை இல்லையேயென்று துக்கப்பட்டுக் கொண்டிருக்கும்போது திடீரென்று என் மனதில் ஒரு உணர்வு உண்டாகி, கர்த்தராகிய ஆண்டவரே, எனக்கு நீர் ஒரு ஆண் குழந்தையை தருவீரானால் அவனை உம்முடைய ஊழியத்திற்கென்று ஒப்புக் கொடுத்து அதைக் குறித்து பத்திரிகையில் சாட்சியும் எழுதுவேன் என்றுபொருத்தனை பண்ணினேன்.

கர்த்தர் என் விருப்பத்தை நிறைவேற்றினார். குறித்த காலத்தில் என் மனைவி கர்ப்பவதியானாள். 12 ஆண்டுகள் இடைவெளி ஏற்பட்டதால் மருத்துவச்சியும், ஊராரும், மருத்துவர்களும் பேறுகாலத்தைக் குறித்து பயமுறுத்தினார்கள். ஆனால் அதற்கேற்ற பணவசதி இல்லாதபடியினால் நான் கர்த்தரை விசுவாசித்து தினமும் இரண்டு வேளையும் இதைக் குறித்து ஜெபித்து வந்தேன். கர்த்தர் என் ஜெபத்தைக் கேட்டார், அல்லேலூயா! 1988-ம் ஆண்டு ஆகஸ்டு 14-ம் தேதி ஞாயிறு காலை 10.45க்கு தேவன் அற்புதமான பேறுகாலத்தை கட்டளையிட்டு, ஒரு ஆண் குழந்தையைத் தந்தார். அருமை ஆண்டவர் செய்த காரியத்தை சாட்சியாக எழுதி அறிவிக்கிறேன்.

Bro. S. DEVADOSS,
New Jerusalem Church, Kappukad Branch.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

*18 (செவ்வாய்) பெப்ருவரி 1992*
*18 (புதன்) மார்ச் 1992*
*15 (புதன்) ஏப்ரல் 1992*

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
ஆண்டு சந்தா Rs. 15-00
வெளிநாடு Rs. 100-00

அனுப்ப வேண்டிய முகவரி :

**Chief Pastor N. LAZAR**
**"New Jerusalem Church"**
**Church Lane, Tilak Nagar,**
**Durga Road, Bhandup,**
**Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15/- (பதினைந்து)சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at: PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph: 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 99 - March '92



"புதிய எருசலேம் சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்குஞ் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

— மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

இது கடைசிக் காலமாயிருக்கிறது. தேவன் பின் மாரியை ஊற்றும் காலமாக இருக்கிறது. முன்மாரி பெந்தெகொஸ்தே நாளிலிருந்து பொழிய ஆரம்பித்தது. பின்பு, பின்மாரி இப்பொழுது பொழிகிறது. முன்மாரியின் போது இருந்த சம்பவமும் நிறைவும் இப்பொழுதும் இருக்கும். கிறிஸ்தவ ஜீவியம் என்பது பரிசுத்த ஆவியானவருடைய வல்லமையில் உண்டாகும் வாழ்க்கையாகும். பரிசுத்த ஆவியானவருடைய பெலனின்றி, சகாயமின்றி, உதவியின்றி, ஆறுதலின்றி அவருடைய நடத்துதலின்றி ஒருவன் ஒரு உத்தம கிறிஸ்தவனாய், வெற்றியுள்ள கிறிஸ்தவனாய் உலகில் வாழ்ந்து ஜெயிக்கமுடியாது. பரிசுத்த ஆவியானவரே இப்பொழுது ஒரு விசுவாசியினுடைய ஆளுநராக இருக்கிறார். பரிசுத்த ஆவியானவராகிய தேவன் புதிய எற்பாட்டில் கிறிஸ்துவுக்குப்பின் பொறுப்பெடுத்துள்ளார். ஒவ்வொரு கிறிஸ்தவர்களும் அந்நிய பாஷை அடையாளத்தோடும் வல்லமையோடும் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்று தங்களை பரிசுத்தப்படுத்திக் கொண்டு, தேவ வல்லமையினால் நிரம்பி உலகத்தில் வெற்றி வாழ்க்கை வாழவும் தேவ சித்தத்தையறியவும், செயல் படவும், திருச்சபையாய் ஒருங்கிணைந்து நின்று சத்துருவை முறியடிக்கவும் ஆயத்தப் படுவோமாக! கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். வெள்ளம் போல் சத்துருவானவன் தேசத்தை மூடுகிற இந்த நாட்களிலே தூய ஆவியானவர் கொடியேற்ற நாம் ஆயத்தப் படுவோமாக!

கர்த்தருடைய கிருபை உங்களனைவரோடுங்கூட இருப்பதாக! ஆமென்!!

கிறிஸ்துவுக்குள்,

*Chief Pastor* **N. Lazar**

(தொடர்ச்சி)

# கிருபை வரங்கள்

## கிருபை வரங்கள் என்றால் என்ன?

1) வரங்கள் ஆவியானவருடைய அநுக்கிரகம் என்று எழுதப்பட்டுள்ளது (I கொரி. 12:7). ஆவியின் அநுக்கிரகம் (Manifestation of the Spirit) இதுபரிசுத்த ஆவியின் வெளிப்படுத்தல். பரிசுத்த ஆவியின் கிரியைகளின் வெவ்வேறு வரங்கள் சுடர் விடுதலே வெளியரங்கமாக்கிக் காண்பிக்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக வரங்கள் ஒருவனையோ ஒரு சங்கத்தையோ வெளிப்படுத்துவது அல்ல, அது பரிசுத்த ஆவியின் வெளிப்படுத்தலே. பரிசுத்த ஆவியானவர் தம்மை வெளிப்படுத்துகிறார் என்று அர்த்தம். ஆவியினுடைய அநுக்கிரகம் அவனவனுடைய பிரயோஜனத்திற்கு அல்ல, பொது பிரயோஜனத்திற்கென்றே அளிக்கப்பட்டிருக்கிறது(I பேது.4:11.)I கொரி. 12:4,5,6 ஆகிய வசனங்களில் திரித்துவத்தின் கிரியைகள் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது.

1) வரங்களைக் கொடுப்பது ஆவியானவர்.

2) அதிகாரங்களை, ஊழியத்தைக் கொடுப்பது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து.

3) எல்லாவற்றையும் ஆளுகை செய்கிறவர், எல்லாவற்றையும் நடப்பிக்கிறவர் பிதாவாகிய தெய்வம் என்று மிகவும் தெளிவாக எழுதப்பட்டுள்ளது. இங்கேயும் திரித்துவத்தின் வெவ்வேறு விதமான செயல்பாடுகளை பார்க்கிறோம். வரங்கள் பரிசுத்த ஆவியானவரால்கொடுக்கப்படுகின்றன.(I கொரி-12:11). I கொரி. 12:7 ஐயும் 11 ஐயும் சேர்த்துப் பார்ப்பதின் மூலமாக வரங்கள் பரிசுத்த ஆவியானவருடைய வெளிப்படுத்தல் என்று அறிந்து கொள்ளலாம்.

2) வரங்களைக் கொடுப்பது ஆவியானவரே. இவைகளையெல்லாம் அந்த ஒரே ஆவியானவர் நடப்பித்து தமது சித்தத்தின்படி அவனவனுக்குப் பகிர்ந்து கொடுக்கிறார். பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைக் கொடுப்பவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து. ஆனால், ஆவியின் வரங்களை பகிர்ந்து கொடுப்பதோ பரிசுத்த ஆவியானவராகும். இங்கு ஆவியானவர் பிரதான இடம் வகிக்கிறார். ஆவியானவர் விருப்பத்தின் படியே வரங்களை ஒவ்வொருவருக்கும் பகிர்ந்து கொடுக்கிறார். வாக்குத்தத்தங்களை உரிமை பாராட்டலாம். அவைகளுக்காக ஜெபிக்கலாம். ஆனால், வரங்கள் வாக்குத்தத்தங்கள் அல்ல, வரங்களை உரிமைபாராட்டவோ அல்லது இந்த வரம் தான் வேண்டுமென்று கேட்கவோ யாருக்கும் அதிகாரமில்லை. வரங்களை நாடுகிறதற்கு மட்டுமே தேவ வசனம் அனுமதிக்கிறது (I கொரி. 14:1,12). வரங்கள் கொடுக்கப்படுகின்றன. இது வாங்குவது அல்ல, கொடுக்கப்படுகிறது. சம்பாதிப்பதும் அல்ல இது ஈவாகும். தகுதியின் அடிப்படையில் இது கொடுக்கப்படுகிறது அல்ல. அவசியத்தின் அடிப்படையில் இது கொடுக்கப்படுகிறது. ஒரு சபையில் உள்ளவர்களுக்கு ஆவியானவர் வரங்களை பகிர்ந்து கொடுக்கின்றார். யாருக்கு எதைக் கொடுக்க வேண்டுமென்று ஆவியானவருக்குத் தெரியும். அதைப்பற்றிக் கேள்வி கேட்க யாருக்கும் உரிமையில்லை. வரங்களை நாடுகிறவர்களுக்கும், யாருக்கு எந்த வரத்தை எப்பொழுது கொடுக்க வேண்டுமென ஆவியானவருக்குத் தெரியும். ஒரு குறிப்பிட்ட சூழ்நிலைக்கு எவ்வரம் தேவை என்பதை அவர் அறிவார். ஆகவே ஆவியானவர் தமது விருப்பத்தின் பிரகாரம் பகிர்ந்து கொடுப்பதே வரங்களாகும்.

3) வரங்கள் பொது நன்மைக்காக அருளப்படுகின்றன : ஆவியினுடைய அநுக்கிரகம் பொதுப் பிரயோஜனத்திற்கென்று அளிக்கப்படுகின்றது. (ஆங்கில வேதாகமத்தில் வாசித்துப் பார்க்கவும்). ஆவியானவர் பகிர்ந்து கொடுக்கும் வரங்கள் ஒருவனுடைய தனி உபயோகத்துக்காக அல்ல அதாவது, வரங்கள் சபையின் தேவ ஊழியத்தின் பொதுப் பிரயோஜனத்திற்காகவும் வாக்குத்தத்தங்கள் சொந்த உபயோகத்துக்காகவும், ஆவிக்குரிய வளர்ச்சிக்கும், மனமாறுதலுக்கும், பலத்திற்குமாகும். வரங்களோ

சபை ஊழியத்தின் பக்தி விருத்திக்கும், வளர்ச்சிக்குமாக அருளப்படுகின்றன. கிருபை வரங்களை யாராவது தனிப் பிரயோஜனத்திற்காக பயன்படுத்த முயற்சித்தால் அவர்கள் கிருபை வரங்களை தவறுதலாக உபயோகிக்கின்றனர் என்பதேயாகும். அப்படியானால் ஆவியானவர் அவ்வரங்களைத் திரும்ப எடுக்கவும் செய்வார்.

4) வரங்களில் வித்தியாசங்கள் உண்டு: ஆவியானவர் ஒருவரே, ஊழியங்களிலேயும் வித்தியாசமுண்டு; கர்த்தர் ஒருவரே, கிரியைகளிலேயும் வித்தியாசமுண்டு எல்லாருக்குள்ளும் எல்லாவற்றையும் நடப்பிக்கிற தேவன் ஒருவரே, (I கொரி. 12:4–6). ஆவியானவர் பகிர்ந்துகொடுக்கிறஒன்பதுவரங்கள்(I கொரி. 12:8–10). இவையெல்லாம் கொடுப்பது ஆவியானவர் எனக்கூறி அப்பகுதியை முடிக்கின்றார். சபையில் வெவ்வேறு வரங்கள் உள்ளன. அவைகளில் அவசியமும் வித்தியாசமுள்ளவைகள், ஆவியானவர் எல்லோரிடமும் ஒரே விருப்பமுடையவர். ஆகவே எல்லோருடைய தேவைகளுக்குகந்தவாறு எல்லா வரங்களையும் கொடுக்கிறார் எல்லாவரங்களையும் பகுத்துக் கொடுக்கிறார்.

5) வரங்கள் சரீரத்தின் அவயவங்களோடு ஒப்பிடப்படுகின்றன. சரீரம் ஒன்று, அதற்கு அவயவங்கள் அநேகம். ஒரு சரீரத்தின் அவயவங்கள் அநேகமாயிருந்தும் சரீரம் ஒன்றாகவே இருக்கிறது. அந்தப்பிரகாரம் கிறிஸ்துவும் இருக்கிறார். சரீரமும் ஒரே அவயவமாயிராமல் அநேக அவயவங்களாயுமிருக்கிறது. நீங்கள் கிறிஸ்துவின் சரீரமாயும், தனித் தனி அவயவங்களாயுமிருக்கிறீர்கள். (I கொரி. 12:12,14,27). சரீரம் ஒன்றுதான், அவயவங்களோ வெவ்வேறாகும். ஒரே விதமான அவயவங்கள் சேர்ந்ததல்ல சரீரம் பல அவயவங்கள் சேர்ந்தது தான் சரீரம். சபை கிறிஸ்துவின் சரீரமாகும். சில கைகள் மாத்திரம் ஒன்று சேர்வதினால் அது சரீரமாகாது. இரண்டு கைகளே ஒரு சரீரத்திற்குத் தேவை. சில கால்களோ, அல்லது கண்களோ அல்லது காதுகளோ சேர்ந்ததினால் சரீரமாகாது. ஒவ்வொன்றிற்கும் இரண்டிரண்டு இருந்தால் அதுவே போதுமானது. சில நாவுகள் ஒன்று சேர்வதினால் அது சரீரமாகாது. ஒரு சரீரத்திற்கு ஒரு நாவு போதும். தேவன் தமது சித்தத்தின்படி அவயவங்கள் ஒவ்வொன்றையும் சரீரத்திலே வைத்தார். (I கொரி. 12:18) ஒவ்வொரு அவயவமும் எந்த இடத்திலிருக்கவேண்டுமென்று தீர்மானிப்பது அவயவங்களல்ல, ஆனால் தேவனே பரிபூரண ஞானமுடையவராய் அவர் மாத்திரம் தீர்மானிக்கிறார். அவயவங்கள் தேவன் வைத்திருக்கிற ஸ்தானத்தில் இருக்கும் போது அவைகள் சரியாய்க் கிரியை செய்யும். இவ்வாறாக வரங்கள் எல்லாம் சரீரத்தின் ஒவ்வொரு அவயவம் போன்றாகும். அவயவங்கள் வெவ்வேறெனினும் சரீரம் ஒன்றே வரங்கள் வெவ்வேறெனினும் ஆவியானவர் ஒருவரே. அவயவங்களின் குறிக்கோள் ஒன்றே. எல்லாவரங்களின் நோக்கமும் ஒன்றே. வரங்கள் எல்லாம் ஒரே ஆவியானவரையே வெளிப்படுத்துகின்றன. இங்கே நாம் தெரிந்து கொள்ள வேண்டிய ஒன்றுண்டு. ஒரேவிதமான அவயவங்கள் சேர்ந்ததல்ல ஒரு உடல். வெவ்வேறு அவயவங்களைக் கொண்டது சரீரம். சபையில் எல்லா அங்கத்தினருக்கும் ஒரே வரத்தை ஆவியானவர் கொடுக்க மாட்டார். சபையிலுள்ள எல்லா அங்கத்தினருக்கும் ஒரே வரம் கிடைக்குமெனில் ஒரே விதமான அவயவத்தால் நிறைந்த சரீரத்தைப்போன்றே அந்த சபை இருக்கும். ஆகவே சபையில் ஒவ்வொருவருக்கும் அவனவனுக்குவெவ்வேறானதை பகிர்ந்து கொடுக்கிறார் என்பதை அறிய வேண்டும். மனதில் பதித்து கொள்ளவும் வேண்டும். ஒரு சபையில் எல்லா வரங்களையும் அருள ஆவியானவர் ஆயத்தமாயிருக்கிறார் என்பதையும் அறிந்திருக்க வேண்டும். அதே சமயத்தில் அது ஒவ்வொருவருக்கும் வித்தியாசமானதாக இருக்கும்.

6) எல்லா வரங்களும் முக்கியமானவைகள். சரீரத்திற்கு எல்லா அவயவங்களும் முக்கியமாய் இருப்பதைப் போன்று எல்லா வரங்களும் சபைக்கு முக்கியம். இந்த அவயவம் இல்லாமல் இருக்க முடியும் என ஒரு அவயவம் நினைத்தால் அது கூடாத காரியம்.

போல ஒரு வரத்தை மனப்பூர்வமாக புறக்கணித்து விட்டு மற்றொன்றை விரும்பும் போது இயலாதது ஆகும். ஒவ்வொருவரமும் அவைகளின் ஸ்தானத்திலே முக்கியமானவை. எவ்வரமும் இன்னொன்றுக்கு அனவையல்ல. சரீரத்தின் முழு அவயவமும் பலனமடைந்தாலும் அல்லது உபயோகபபடுத்த முடியாமல் இருக்குமாயின் சரீரம் பலவீனமாயிருக்கும். அதைப்போன்றே வரமில்லாத சபை பெலவீனமாயிருக்கும். ஆகவே ஒவ்வொரு வரமும் முக்கியம். பெரிய வரம் சிறிய வரம் என்று வேறுபாடு கிடையாது. எல்லாம் முக்கியம்; எல்லாம் அவசியம்.

7) எல்லா வரங்களும் சபைக்கு அவசியம் :

ஒரு சரீரத்திற்கு எல்லா அவயவங்களும் அவசியமாய் இருப்பதைப் போன்று கிறிஸ்துவின் சரீரமான சபைக்கு எல்லா வரங்களும் அவசியம். வட்டாரத்திலுள்ள ஒவ்வொரு சபைக்கும் எல்லாவரங்களும் அவசியமே. ஒரு சில வரங்களினிமித்தம் சபை திருப்தியடையக் கூடாது. அப்படியிருக்குமெனில், ஒரு சில அவயவங்களைக் கொண்டு திருப்தியடைகிற சரீரத்திற்கு ஒப்பாயிருக்கும். அச் சபையானது ஒரு சில காரியங்களை தவிர செய்ய வேண்டிய எல்லாவற்றையும் செவ்வையான முறையில் செய்ய முடியாது. கண்ணானது கால்களை நோக்கி நீ எனக்கு அவசியமில்லையென்றும் காலானது கண்களை நோக்கி உன்னுடைய உதவி எனக்குத் தேவையில்லையென்றும் கூறினால் இரண்டுமே நாசமடையும். ஒரு அவயவம் நிலை நிற்க மற்றொன்றின் உதவி மிக முக்கியம். கால்களால் நடக்க முடியும். ஆனால் நடைபாதையிலுள்ள அசுத்தத்தை மிதிக்காமலிருக்க, கற்களில் மோதாமலிருக்க, குழியில் விழாமலிருக்க பாதுகாக்க கண்கள் தேவையாயிருக்கின்றன. கண்களுக்கு பார்க்கும் சக்தியுண்டு. அதே சமயத்தில் எல்லாவற்றையும் பார்க்க கால்களின் உதவி அதற்குத் தேவை. இவ்வாறு ஒவ்வொரு அவயவத்தின் நிலையான தன்மையானது மற்றொரு அவயவத்தை பொறுத்துள்ளது. இதைப் போன்றே வரங்களின் உபயோகம் மற்ற வரங்களை பொறுத்திருக்கிறது. எல்லா வரங்களும் சபையில் காணப்படுமாயின் சபை வளர்ச்சியடைய வேண்டிய பிரகாரம் வளரும். நிலை நிற்கவும்முடியும்.

8) வரங்களில் எல்லோருக்கும் பங்குண்டு : சரீரத்தில் எல்லா அவயவங்களும் முக்கியமானவை. சபையின் எல்லா அங்கத்தினர்களும் முக்கியமானவர்களே, சரீரத்தில் எல்லா அவயவங்களுக்கும் ஒவ்வொரு வேலை உண்டு. ஒவ்வொரு அங்கத்தினருக்கும் தனித்தனி வேலை உண்டு. சரீரத்தில் எல்லா அவயவங்களும் அதனதன் கடமையைச் செய்தால் மட்டும் சரீரம் நிலையாக நிற்கும். சபையின்எல்லா அங்கத்தினரும் தங்கள் கடமைகளைச் செய்தால் தான் சபையும் நிலையாக நிற்கும். சரீரத்தின் ஒவ்வொரு அவயவமும் மற்றொன்றை அற்பமாக எண்ணக் கூடாது, இதைப் போன்றே சபையில் எந்த அங்கத்தினரும் பிற அங்கத்தினரை அற்பமாக நினைக்கக் கூடாது. சரீரத்தின் வளர்ச்சியில் எல்லா அங்கத்தினருக்கும் பங்குண்டு. ஆகவே, சபைக் காரியங்களில் சபையின் முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும், உறுதி நிலைக்கும் ஆவியானவர் கொடுக்கிற வரங்களில் எல்லோருக்கும் பங்குண்டு, எல்லாரும் பங்குதாரர் ஆகவேண்டும், சபையில் உள்ள ஒரு சிறு விசுவாசிக்கும் கிருபை வரங்களில் பங்குண்டு. அறியாமையினாலோ அல்லது வேறு காரியங்களினாலோ பலரும் அதற்காக வாஞ்சையாயிருப்பதில்லை. நீங்கள் ஒரு விசுவாசி என்றால் உங்களுக்கு இதில் பங்குண்டு. ஒவ்வொருவனுக்கும் (I கொரி. 12:7) என்பதில் நீங்களும் உட்படுகிறீர்கள்.

9) சபை பரிபூரண நிலை அடையும் வரை வரங்கள் அவசியமே. சபை அபிவிருத்தியடைய, முன்னேற, பக்திவிருத்தியடைய வரங்கள் அருளப்பட்டிருக்கிறது. கர்த்தர் மறுபடியும் வந்து சபையைத் தன்னோடு சேர்க்கும் வரை சபை பரிபூரணமடையாது. அவ்வேளை வரை சபையின் பக்திவிருத்திக்கும், அபிவிருத்திக்கும் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் அவசியமாய் இருக்கிறது ஆகவே, எல்லா வரங்களும் இன்றியமையாததாகவுள்ளது. சபை பூரணமடைந்த பின் அல்லது கர்த்தர் சபையைத் தன்பக்கம்

சேர்த்துக் கொண்ட பின் வரங்கள் சபைக்கு அவசியமில்லை. அச்சமயம் வரங்களும் இருக்காது. (I கொரி. 13:8-10). ஆகவே, சபை பரிபூரணமடையும்வரை எல்லா வரங்களும் சபைக்கு அவசியமாயுள்ளது என்பதை விரும்பி நாடுங்கள். (தொடரும்)

"இவைகளையெல்லாம் அந்த ஒரே ஆவியானவர் நடப்பித்து, தமது சித்தத்தின்படியே அவனவனுக்குப் பகிர்ந்து கொடுக்கிறார்" (I கொரி. 12 : 11.)

# மனிதன்

மனிதன் இறைவனால் சிருஷ்டிக்கப்பட்ட ஒரு படைப்பு. மனிதனுடைய படைப்பின் விவரம் கிறிஸ்தவ வேதாகமத்தில் முதல் இரண்டு அதிகாரங்களில் மிகத் தெளிவாக எழுதப்பட்டுள்ளது. மனிதன் ஆவி, ஆத்துமா, சரீரமாகிய மூன்று தன்மையுடையவனாக இருக்கிறான். மனிதனுடைய சரீரம் பூமியின் மண்ணினால் உருவாக்கப்பட்டது. அதாமா என்றால் "மண்" என்று அர்த்தம். அந்த சொல்லிலிருந்து மனிதனுக்கு ஆதாம் என்று பெயரிடப்பட்டது. ஆதாம் என்றால் உலகத்தில் உண்டாயிருக்கிற எல்லா மனிதனுக்கும் அது பொருந்தும். அந்த மனித சரீரத்திற்குள், தேவன், தம்முடைய சுவாசத்தை ஊதினார். அப்பொழுது மனிதன் ஜீவனும், ஆத்துமாவும் உடையவனாக ஜீவியானான் (ஆதி.2:7) மனிதனுடைய ஆத்துமாவைப்பற்றி சரியான அறிவு மனிதனுக்குத் தேவை.

**ஆத்துமா :**

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தகரணங்களை உடையதாகி சரீரத்தை ஆண்டு நடத்துகிற அரூபமும், அழியாமையுமுள்ள வஸ்துவுக்கு ஆத்துமா என்று பெயர். ஆத்துமாவுக்கு மேற் சொல்லிய குணங்களாகிய வேண்டுதல், வேண்டாமை இரண்டும் உண்டு. அதனால் மனிதன், சுயாதீனன் [Moral agent] எனப்படுகிறான். ஜீவராசிகளுக்கு இந்த ஆத்துமா கிடையாது. உயிருள்ள மற்றவைகளெல்லாம் தத்தம் தமக்கேற்ற அறிவுடையவைகளாய் இருந்தும் மனிதர்களைப் போல பகுத்தறியும், வளர்ச்சியடையும், கற்றுக்கொள்ளும், சிந்திக்கும், சிரிக்கும் தன்மையுடைய ஆத்துமா அவைகளுக்குக் கிடையாது. மற்றப் பிராணி, பறவைகள், பட்சிகள் மிருகங்கள் தம் தம் இனத்துக்குரிய குழுவுத் தன்மையுடையனவாய் மாத்திரம் இருக்கின்றன.

ஆத்துமா அழியாத வஸ்து என்பது விசேஷித்த கொள்கையாகையால் அதை நன்றாய் அறிந்து உறுதியாய் நம்பவேண்டும். ஏனெனில் இந்த விஷயத்தில் நம்பிக்கை உண்டாயிருப்பதினால், மற்றஜீவ ஜந்துக்களைப்பார்க்கிலும் மனுஷருக்கு உண்டாயிருக்கிற மேன்மையும், வேதத்தில் செய்யவேண்டுமென்றுகூறிய காரியங்களின்படி நடப்பதில் உறுதியும், மனிதர்களுக்குள்ளே சமாதானமும், வியாதியிலும், மரணத்திலும் வேண்டிய ஆறுதலும், நித்திய ஜீவன் உண்டென்கிற மகிமையுள்ள நம்பிக்கையும் உண்டாகும். ஆத்துமாவைக் குறித்து பூர்விக பற்பல மதங்கள் பலவிதமாய் நினைக்கின்றன. புத்தியினாலும் வேதத்தினாலும் ஆத்துமா நித்தியம் எனபதற்கு நியாயங்களை எடுத்துக் காண்பிக்கிறோம்.

1) ஆத்துமா நித்திய வஸ்து என்று எல்லாவித மனுஷர்களாலும் எவ்விதத்திலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட காரியமாய் இருக்கிறது. சில ஞானிகள் ஆத்துமா தேவனுடைய அம்சம் என்று சொல்லுகிறார்கள். சிலர் ஆத்துமாவானது உலகத்திலிருக்கிற ஆவியோடொத்த ஆவியென்று நினைத்து தண்ணீரானது சமுத்திரத்தில் போய்ச் சேர்கிறது போல அது உலக ஆவியோடு சேர்ந்து போகிறது என்று

சொல்லுகிறார்கள். இன்னும் சிலர் ஆத்துமாவானது தானிருந்த சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தில் பிரவேசிக்குமென்று சொல்லுகிறார்கள். வேறு சிலர் ஆத்துமாவானது, பஞ்ச பூதங்களின் கூட்டாமை, கூட்டம் என்று சொல்லுகிறார்கள். இன்னும் சிலர், சரீரத்தில் தோன்றிய வாயுவினது விகாரமே ஆத்துமா என்று நினைக்கிறார்கள்.

**2) ஆத்துமாவானது நித்திய வஸ்து என்பதற்கு, சில திருஷ்டாந்தங்களாவன :-**

1) உவமானம்: உலகத்திலுள்ள வஸ்துக்கள் சுத்த சூன்யமாய் அழிந்து போகாமல் வேறொரு பதார்த்தமாய் மாறுவதுமுண்டு. மண் பளிங்காகும். பஞ்சலோகங்கள் உருக்கி வார்க்கப்படும். புழுக்கள், பறக்கிற பூச்சிகள் ஆகும். முட்டைகள் குஞ்சுகளாகும். இப்படியிருக்கிறபடியால், ஆத்துமாவானதுசரீரத்தை விட்டுப் பிரிந்து மற்றொரு நிலையில் நிற்கக் கூடியது என்பதை அறிந்து கொள்ளவும். ஜீவகாலத்தில் சரீரத்தில் சம்பவிக்கும் வியாதி முதலியவைகள் ஆத்துமாவைப் பற்றுகிறதில்லை. ஆனால் ஆத்துமாவும் சரீரமும் ஏகமாய் இணைந்திருக்கிறபடியினால் சரீரத்தில் வியாதி உண்டாகும்போது ஆத்துமாவும் வியாகுலமடைகிறது. அவ்வளவுதான். இந்த சரீரம் உண்டி முதலியவற்றால் பலமடைந்து, வியாதி முதலியவற்றால் இளைத்து, சுகம் முதலியவற்றால் செழித்திருப்பதும் உண்டு. கண் சில காலம் பார்வை இல்லாமலிருந்து மறுபடியும் பார்வையைப் பெறும். இப்படிப்பட்ட மாறுதல் சரீரத்திற்கு உண்டாயிருந்தும் இவைகள் ஆத்துமாவுக்கு உண்டாவதில்லை. சரீரத்தில் ஒரு அவயவம் கையாவது, காலாவது அறுத்துப் போடப்பட்டால் ஆத்துமாவின் வல்லமை அதினால் குறைந்து போவதில்லை. ஆத்துமாவின் கையும், காலும் அறுக்கப்படவில்லை. சிலர், மரணாவஸ்தையில் நிறைந்த சக்தியுள்ள ஆத்துமாவையுடையவர்களாயிருந்தும் அதுக்கு ஆதாரமுள்ள சரீரத்தின் பெலவீனத்தால் மயக்கமுள்ளவர்களாயிருக்கிறார்கள். அது எப்படியெனில் வீணையை வாசிக்கிறவன் தான் வல்லவனாயிருந்தாலும் வீணையினது தோஷத்தால் அவன் திறமை காணப்படமாட்டாது. அநேகர் மரணாவஸ்தையில் மயக்கமின்றி தெளிவோடு இருக்கிறார்கள். மரணத்தின் பெருங்குறியாகிய நித்திரையிலும் ஆத்துமாவானது கிரியை செய்கிறது. அல்லது அது செயல்படக் கூடியதாக இருக்கிறது.

2) சரீர தர்மத்துக்கும், ஆத்தும தர்மத்துக்கும் வித்தியாசமுண்டு. சரீரத்திற்கு பூரித்தல், அசையாமை, பிரிவு, பழுவு, நிறம் முதலியவையுண்டு. ஆத்துமாவுக்கு எண்ணம், அறிவு, ஆசை முதலிய குணங்களுண்டு. ஆத்துமாவுக்கும் சரீரத்துக்கும் சம்பந்தம் உண்டாயிருந்தாலும் அவைகள் வெவ்வேறான பொருள்களேயாகும். சரீரத்தை நடத்துகிற பொருளுக்கு ஆவி என்றும் மனம் என்றும், ஆத்துமா என்றும் பெயர். அது அரூபியாயிருக்கும் தன்மையால் ஆவி என்றும், பல குணங்களையுடையதாயிருக்கும் தன்மையால் மனம் என்றும், அழியாத்தன்மையையுடையதாயிருப்பதால் ஆத்துமா என்றும் பேர் பெறுகிறது. ஆத்துமாவுக்கடுத்த குணங்களினால், மெய்மையினால் அது அழியாத வஸ்து என்று அறிந்து கொள்ளலாம். ஆத்துமாவுக்கு ஆலோசிக்கவும், தீர்மானிக்கவும் ஞாபகத்தில் வைக்கவும், ஒரு நிமிஷத்தில் கடவுளின் பாதபடியில் சேரவும் (அண்ட சராசரங்களையெல்லாம் கடந்து) அன்பின் வல்லமையினாலாவது, பக்தி வைராக்கியத்தினாலாவது மெய் மறந்து சாவுக்கு அஞ்சாமல் நிற்கவும் அதற்கு வல்லமையுண்டு. இப்படிப்பட்ட வல்லமையுள்ளதாகிய ஆத்துமா அழிவுக்குரியதென்று யார் சொல்ல முடியும்? எப்படிச் சொல்லலாம்?

3) ஆத்துமாவானது விவேகத்தில் நாள்தோறும் வளர்கிறது. குருவியானது எப்போதும் தன் கூட்டை ஒரே மாதிரியாகத்தான் கட்டுகிறது. தேனீ தன் கூட்டை ஒரே மாதிரியாகத்தான் அமைக்கின்றது. இப்படி உயிருள்ள அஃறிணைப் பொருட்கள் ஒரு நிலையுள்ள அறிவை மாத்திரம் உடையதாயிருக்கின்றன. ஆத்துமாவோ நாடோறும் கசடறக் கற்கும். இந்த உலகத்தின் காரியங்களை எல்லாமறிந்து பரலோகத்தில் தன் ஆசையைச் செலுத்தி அந்த உலகத்தின் கண்ணே நாட்டமாயிருக்க இந்த ஆத்துமாவால் முடியும். இத்தன்மையுள்ள ஆத்துமாவானது அழியும் என்று சொல்லக்கூடுமா?

4) மனுஷர் யாவரும் அழியாத ஆத்துமா உடையவர்களாயிருப்போர் என்றும், மரித்த பின்பு உயிரோடிருப்பரென்றும் தீர்மானிக்கிறார்கள். மனுஷர் பூலோகத்தில் புகழையும், கீர்த்தியையும் விரும்புகிறது ஏன்? மட்டில்லாத இந்த பேரின்ப ஆசையை வீணாய்க் கடவுள் நமக்குள் வைத்திருப்பாரா? சில மனிதர்களுடைய பாவ புண்ணியத்திற்குத் தக்கபடி அவன் வெவ்வேறு பிறவி எடுக்கிறான், எடுத்து, அவன் பாவத்திற்கான கர்மத்தை நீக்கி அவன் முக்தியடைய ஒவ்வொரு பிறவியிலும் பிரயாசப்பட்டு கடைசியில் மனித பிறவியில் முக்தியடைய முடியும் என்று நம்புகிறார்கள். இது மூடப்பழக்கமாகும். கர்ண பாரம்பரியமேயன்றி, உண்மை கிடையாது நீ முந்தின பிறவியில் என்னவாயிருந்தாய், என்ன பாவம் செய்ததினிமித்தம் இந்த பிறவி எடுத்தாய் என்று உனக்குத் தெரியாதவரை முந்தின பிறவியில் செய்த கர்மத்தை உன்னால் தொலைக்கமுடியாது. மேலும் இந்தக்கர்மத்தில் நீ செய்கிற பாவமும் போன கர்மத்தில் உள்ள பாவமும் சேர்ந்து சஞ்சித கர்மமாய் மலை போல் குவிந்து விடும். மேலும், நீ இப்பொழுது செய்து கொண்டிருக்கிற பாவத்தினிமித்தம், கர்மத்தினிமித்தம் அடுத்த பிறவியில் என்ன ஆவாய் என்று உனக்குத் தெரியுமா? தெரியாது. ஆனபடியினால், ஒரே தரம் தான் மனிதனுக்கு பிறவி கொடுக்கப்படுகிறது. அதற்குப் பின்பு அவன் நியாயந்தீர்க்கப்பட்டு தனக்குரிய இடத்திற்குப்போவான்.

5) மனுஷர், தாங்கள் செய்கிற கிரியைகளுக்குத் தக்க பலனை அடைவோமென்கிற கருத்து எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது. நாம் நன்மை, தீமை செய்ய வல்லமையுடையவர்களாயிருக்கிறதுமன்றி நாம் செய்கிற நன்மையினாலே சுகமும், தீமையினாலே துக்கமும் அனுபவிக்கிறவர்களாயிருக்கிறோம் பாவம் செய்தால் வெட்கமும், துன்பமும் உண்டாகிறது. நன்மை செய்தால் அதற்கேற்ற பலனை அனுபவிப்போம் என்கிற நம்பிக்கை நம்மில் அளவற்ற பாக்கியத்தை உண்டாக்குகிறது. ஆயினும், பெரும்பாலும் நன்மை தீமைக்கடுத்த பலன்களை இம்மையில் மனுஷர்கள் அனுபவிக்கக் காணோம். நீதிமான் துன்பத்தை அனுபவிக்கிறான். அநீதிமான் இன்பத்தை அனுபவிக்கிறான். ஆகவே, நீதியுள்ள கடவுள் இம்மையில் பாவ புண்ணியத்திற்கேற்ற பலா பலன்கள் கொடாதிருந்தாலும் மறுமையில் எல்லாருக்கும் நன்மை தீமைக்கடுத்த பலனைக் கொடுப்பார்என்பதற்கு சந்தேகமில்லை. இம்மையிலே பாவம், அக்கிரமம் செய்து, பொய் சொல்லி, லஞ்சம் கொடுத்து, வாங்கி, நிம்மதியாக இருக்கும்படி தப்பித்துக் கொள்கிறவர்களை தேவன் அவ்விதமாக விட்டு விடுவாரா? தேவபக்தியுள்ள நீதியுள்ள எல்லாரும் ஒப்புக் கொள்ளத்தக்கதாக நிச்சயமான தண்டனையுண்டு. ஆனபடியினால் மறுமையில் தொடர்ந்துவாழுகிறான் என்பதும், தண்டனை அடையப்போகிறான்என்பதும் திட்டமாக உணர்த்தப்படுகிறது. இதுவும் ஆத்துமா அழியாதவஸ்துஎன்று நம்புகிறதற்கு ஒரு விசேஷித்த நியாயமாம். வேதாகமத்தில் ஆத்துமா அழியாத வஸ்து என்று தெளிவாகச் சொல்லப்படுகிறது. (ஆதி. 5:24; யாத். 3:6; II இரா. 2:11; சங். 16:10,11; 47:15; 73:26; மத். 16:27; 22;31 25:31; யோ. 5:28; II கொரி. 5:1–8). ஆவியும் ஆத்துமாவும் கொஞ்சம் வித்தியாசமுள்ளது. ஆவியைக் குறித்தும், சரீரத்தைக் குறித்தும், இனிமேல் சொல்லுவோம்.

(தொடரும்)

"...அவைகளைப் பார்க்கிலும் நீங்கள் விசேஷித்தவர்கள் அல்லவா?" மத். 6:26

## கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்!

நம்முடைய அருமையான மூத்த சகோதரனும், பெங்களூர் சபையின் உதவி ஊழியருமாகிய திரு Eld. Bro Capt D A மணிராஜ் அவர்கள் 13. 2. 1992 வியாழக்கிழமை காலை கர்த்தருக்குள் நித்திரையடைந்தார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம். அன்னாருடைய பிரிவினால் துக்கத்திலிருக்கிற குடும்பத்துக்கும், சபைக்கும் ஆறுதல் சொல்லுகிறோம். Eld. Bro. மணிராஜ் அவர்கள் பெங்களூரில் புதிய எருசலேம் சபை எழும்ப ஆரம்பக்கல்லாக இருந்தார். அவருடைய நற்கிரியைகள் தேவனுடைய சந்நிதானத்தில் நினைவுகூரப்படுவதாக!

(தொடர்ச்சி)

# வேத பாடம்

## லேவி. 26-ம் அதிகாரம்

லேவி. 26:1,2 : லேவியராகமம் 26-ம் அதிகாரம் கானானுக்குள் சென்ற பின்பு அவர்கள் கீழ்ப்படிவதினால் உண்டாகிற ஆசீர்வாதமும் கீழ்ப்படியாததினால் வருகிற துன்பமும் காண்பிக்கப்படுகிறது. விக்கிரக ஆராதனை முற்றிலுமாக மறுக்கப்படுகிறது. எந்த விதமான விக்கிரகத்தையோ சொருபத்தையோ தேசத்தில் நிறுத்தக் கூடாது. அவைகளை நமஸ்கரிக்கக் கூடாது. ஓய்வு நாளை பரிசுத்தமாய் ஆசரிக்க வேண்டும். தேவனுடைய பரிசுத்த ஸ்தலத்தைக் குறித்து பயபக்தியாய் இருக்க வேண்டும் என்பதாம்.

லேவி. 26:3-13, 21 நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆசீர்வாதத்திற்கு இந்த நிபந்தனைகள் கைக்கொள்ளப்படவேண்டும். (உபா 28: 1-14; 30:1.)

### 24 நிபந்தனையோடு கூடிய ஆசீர்வாதங்கள் :

1) நான் உனக்கு பூரணமான மழையைக் கட்டளையிடுவேன். வச.4.
2) தேசம் பூரணமான விளைச்சலைக் கொடுக்கும்.
3) மரங்கள் பூரணமான கனிவர்க்கங்களைக் கொடுக்கும்.
4) திராட்சை பயிர் மிகுதியாக விளைச்சலைக் கொடுக்கும்.
5) திராட்சைப் பழங்கள் பூரணமான இரசத்தைக் கொடுக்கும்.
6) உன்னுடைய ஆகாரம் பூரணமாய் உனக்குக் கொடுக்கப்படும்.
7) நீ பாதுகாப்பாய் சமாதானமாய் இருப்பாய்.
8) நான் உனக்கு சமாதானத்தைக் கட்டளையிடுவேன்.
9) நீ பயத்திற்கு நீங்கலாய் இருப்பாய்.
10) மிருகங்களின் பயத்திற்கும் நீங்கி இருப்பாய்.
11) உங்களுடைய தேசம் அழிவுறாமல் செழிப்படையும்.
12) நீ உன்னுடைய எதிரிகளை துரத்துவாய் வச.7.
13) அவர்கள் உன்னுடைய பட்டயத்தால் விழுவார்கள் வச. 7,8.
14) உங்களில் ஐந்து பேர் நூறு பேரையும், நூறு பேர் ஆயிரம் பேரையும் துரத்துவீர்கள்.
15) நான் உங்கள் மேல் கண்ணோக்கமாயிருந்து, உங்களை மதிப்பாக்குவேன்.
16) நான் உங்களைப் பெருகப்பண்ணுவேன்.
17) உங்களை அதிகமதிகமாகப் பெருகப்பண்ணுவேன்.
18) என்னுடைய உடன்படிக்கையை உன் மத்தியிலே ஸ்தாபிப்பேன்.
19) நீ பழைய தானியத்தைச் சாப்பிட்டு, புதிய தானியத்துக்கு இடமுண்டாக்குவாய். இதற்காக பழைய தானியத்தை விலக்குவாய்.
20) என்னுடைய வாசஸ்தலத்தை உன் மத்தியிலே ஸ்தாபிப்பேன்.
21) நான் உன்னோடிருப்பேன்.
22) நான் உன்மத்தியிலே உலாவுவேன்.
23) நான் உன்னுடைய தேவன்.
24) நீங்கள் என்னுடைய ஜனங்களாயிருப்பீர்கள் என்பதாம்.

வச 13. தேவன் இஸ்ரவேலுக்குச் செய்தது: 1) அவர்களை அடிமைத்தனத்திலிருந்து அவர்களை எகிப்திலிருந்து விடுதலையாக்கிக் கொண்டுவந்தார்.
2) அவர்களுடைய அடிமைத்தனத்தை முறியடித்தார்.
3) அவர்களை நிமிர்ந்து நடக்கப்பண்ணினர்.

லேவி. 26 : 14-15 இஸ்ரவேலருடைய பாவங்களுக்கு விரோதமான எச்சரிப்பு.

லேவி. 26 : 16-39 : தேவனுடைய கற்பனைகளுக்குக் கீழ்ப்படியாததினிமித்தம் வரக்கூடிய சாபங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவைகளிலே காணப்படுகிற சாபங்கள் ஏற்கனவே இஸ்ரவேலர்களுக்கு சம்பவித்ததைப் பார்க்கிறோம்.

லேவி. 26 : 40-46 : தங்களுடைய அக்கிரமங்களினிமித்தம் தேவன் தங்களை தண்டித்தார். அவர் நியாயமாய், நீதியாய்த் தங்களைத் தண்டித்தார் என்று தங்களுடைய பாவங்களை அறிக்கையிட்டு தேவநீதிக்குக் கீழ்ப்படிந்து தங்களுடைய இருதயத்தைத் தாழ்த்தி, தங்களுக்குக் கிடைத்த, அக்கிரமத்துக்குக் கிடைத்த தண்டனை நியாயமென்று ஒத்துக்கொண்டால், தேவன் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களுக்குச் செய்த உடன்படிக்கையை நினைவுகூர்ந்து தேசத்தையும் ஆசீர்வதிப்பார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே, தங்கள் தவறுக்கு வந்த தண்டனை சரி என்று ஒத்துக்கொண்டு மனந்திரும்பினல் இந்த ஆசீர்வாதங்கள் வந்து லபிக்கும் என்று சொல்லி மிகவும் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. கர்த்தர் முற்பிதாக்களினிமித்தம், அவர்களோடு பண்ணின உடன்படிக்கையினிமித்தம் இஸ்ரவேலை கைவிடமாட்டார் என்று தெளிவாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது. சீனாய் மலையில் இஸ்ரவேல் ஜனங்களுக்கு மோசே மூலமாக கொடுக்கப்பட்ட கட்டளைகளும் நியாயங்களும் இவைகளே. கர்த்தர் சீனாய் மலையில் மோசேக்கு கட்டளையிட்டவைகள் இவைகள் என்று 25ம் அதிகாரம் முதல் வசனத்திலே குறிப்பிடப்பட்டுள்ளது. இஸ்ரவேல் ஜனங்களுக்குக் கொடுக்கப்படட்ட கட்டளைகளில் சில அவர்களுடைய இனத்திற்கும் அவர்களுடைய நாட்டிற்கும் உரியது. மற்ற எல்லா நீதி நியாயங்கள், உலகத்திலுள்ள மற்ற எல்லா ஜனங்களுக்குமாய் கொடுக்கப்பட்டவைகளாகும்.

## லேவி. 27-ம் அதிகாரம் பொருத்தனை பிரதிஷ்டை, பரிசுத்த பொருட்களைப் பற்றிய சட்டங்கள்.

லேவி. 27 : 1-8 பொருத்தனை செய்த அல்லது தன்னை பிரதிஷ்டை செய்த மனித ஆத்துமாக்கள். 20 வயது முதல் 60 வயது வரைக்குட்பட்ட ஆண்பிள்ளையை பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலாக 50 வெள்ளி சேக்கலாகும். பெண்பிள்ளையோ 30 வெள்ளி சேக்கலாக மதிப்பாயாக. 5 வயது முதல் 20 வயதுக்குட்பட்ட ஆண்பிள்ளை இருபது சேக்கலாகும். பெண்பிள்ளை பத்து சேக்கலாகும். ஒரு மாதம் முதல் ஐந்து வயதுக்குட்பட்ட ஆண்பிள்ளையை ஐந்து சேக்கலாகவும் பெண்பிள்ளையை மூன்று வெள்ளிச் சேக்கலாகவும், அறுபது வயது தொடங்கி அதற்கு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளையை பதினைந்து சேக்கலாகவும், பெண்பிள்ளையை பத்து சேக்கலாகவும் மதிக்கக்கடவாய்.

பொருத்தனை செய்தவர்கள் அல்லது தங்களை பிரதிஷ்டை செய்தவர்கள்: இந்தவரி அவர்கள் செலுத்திவிட்டு விடுதலையாகலாம். நியமிக்கப்பட்ட வரி செலுத்தத் திராணி

யில்லாத ஏழைகளாயிருந்தால் அதற்குத்தக்கபடி ஆசாரியன் மதிப்பிடக்கடவன். ஆசாரியன் மதிக்கிற பிரகாரம் அவர்கள் அந்தப்பணத்தைச் செலுத்தும்போது அவர்கள் சுத்தமாக்கப்படுவார்கள்.

லேவி. 27 : 9-13 : கர்த்தருக்குப் பொருத்தனை செய்யப்பட்ட மிருக ஜீவன்கள் ஆடோ, மாடோ எதுவாயிருந்தாலும் அதை அவன் அப்படியே செலுத்தி கர்த்தருக்கு அதைச் செலுத்திவிட வேண்டும். அதை மீட்டுக்கொள்ள ஒருவன் விரும்பினால் அதனுடைய மதிப்போடுகூட ஐந்தில் ஒருபங்கை கூட்டிக் கொடுத்துவிட்டு அதை மீட்டுக்கொள்ளலாம். தான் பொருத்தனை செய்ததை மாற்றக் கூடாது. பொருத்தனை செய்யப்பட்டது பரிசுத்தமில்லாத மிருகமாயிருந்தால் ஆசாரியன் அந்த மிருகத்துக்கு மதிக்கிற பணத்தைக் கர்த்தருக்குச் செலுத்திவிட்டு அந்த மிருகத்தைக் கொண்டு போகலாம்.

லேவி. 27 : 14-15. ஒருவன் தன் வீட்டை கர்த்தருக்குப் பரிசுத்தம் என்று நேர்ந்து கொண்டால் ஆசாரியன் அதை எவ்வளவு மதிக்கிறானோ அதோடுகூட ஐந்தில் ஒரு பங்கைக் கூட்டிக் கொடுத்து அந்த வீட்டை அவன் மீட்டுக்கொள்ளலாம் அல்லது கர்த்தருக்கென்று அவன் அதை விட்டுவிடலாம்.

லேவி. 27 : 16-25 ஒருவன் தன் காணியை, வயலை கர்த்தருக்கென்று நியமித்துக் கொண்டால் அல்லது யூபிலி வருஷம் வரைக்கும் கர்த்தருக்குப் பரிசுத்தம் என்றுநேர்ந்து கொண்டால் ஆசாரியன் மதிக்கிறபடி அதற்கான திரவியத்தைக் கொடுத்துவிட்டு வயலை மீட்டுக்கொள்ள வேண்டுமென்றால் மீட்டுக் கொள்ளலாம். ஆனால் கர்த்தருக்கு நியமித்த பின்பு அதை விட்டுவிட்டால் யூபிலி வருஷத்தில் மீட்கப்படுவது சாபத்தீடான வயலாக கர்த்தருக்கென்று நியமிக்கபட்டதாய் இருக்கக் கடவது. அது ஆசாரியனுக்குக் காணி பூமியாகும். ஒருவன் தனக்கு காணியாட்சி வயலாயிராமல், தான் விலைக்கு வாங்கின வயலை கர்த்தருக்குப் பரிசுத்தம் என்று நேர்ந்து கொண்டால் அது யூபிலி வருஷம் மட்டும் உன் மதிப்பின்படி பெறும் விலை இன்னதென்று ஆசாரியன் அவனுக்குக் கணக்குப் பார்த்து அந்த மதிப்பை, கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும்படியாக, அவன் அந்நாளிலே கொடுக்கக் கடவன். யார் கையிலே அந்த வயலைக் கொண்டானோ அந்தக் காணியாட்சிக்காரன் வசமாய் அது யூபிலி வருஷத்தில் திரும்பச் சேரும்.

தலையீற்றானவைகள் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கிறபடியினால் அது பரிசுத்தம் என்று கர்த்தருக்குப் பொருத்தனை செய்யக்கூடாது. அது கர்த்தருடையது. மீட்டுக் கொள்ள மனதாயிருந்தால், அதனுடைய மதிப்போடு ஐந்தில் ஒரு பங்கைக்கூட்டிக் கொடுத்து மீட்டுக் கொலள்ளாம்.

## லேவி. 27 : 30-33 தசம பாகத்திற்குரிய கட்டளைகள்.

தேசத்தின் நிலத்தின் வித்தில் விருட்சத்தின் கனிகளிலே தசம பாகமெல்லாம் கர்த்தருடையது. அவைகள் கர்த்தருக்குப் பரிசுத்தமானது. ஒருவன் தன் தசம பாகத்திலே எதையாவது மீட்டுக்கொள்ள வேண்டுமென்றால், அதோடுகூட ஐந்தில் ஒரு பங்கைக் கூட்டி அதனுடைய மதிப்புக்குத் தக்கபடி கூட்டிக் கொடுத்துவிட்டு அதை மீட்டுக் கொள்ளலாம். ஆனால் கோலின் கீழ் உட்பட்ட ஆடுமாடுகளோ, மிருக ஜீவன்களோ பத்தில் ஒன்று கர்த்தருக்குரியது. அதில் இளப்பமானதோ நல்லதோ பார்க்க வேண்டாம். அதை மாற்றவும் வேண்டாம். மாற்றினால் அதுவும் அதற்குப் பதிலாக கொடுக்கப்பட்டதாகிய இரண்டும் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும். அது மீட்கப்படக் கூடாது. அது கர்த்தருக்கே உரியது என்பதாம்.

லேவி. 27:34 இந்தக் கட்டளைகள் சீனாய் மலையில் வைத்து மோசேக்குக் கொடுக்கப்பட்டது இஸ்ரவேல் புத்திரருக்காக. தேவஜனங்கள் எல்லாருக்கும் இந்தக் கட்டளைகள் பொருந்தும். ஜீவப்பிரமாணங்களில் தசமபாகமும் ஒன்று. தசமபாகம் ஒழுங்காக செலுத்தாதவர்களுடைய ஆவிக்குரிய ஜீவியம் நிலைநிற்காது. விழுகிறதும், எழுகிறதுமாக இருக்கும். அவர்களுக்கு ஒரு நிலைவரமான ஆவிக்குரிய வாழ்க்கை லபிக்காது. கர்த்தருக்குச் செலுத்துவதை உற்சாக மனதோடு கர்த்தருடையது என்று சொல்லி கர்த்தருடையதை செலுத்திவிட வேண்டும். அதைக் குறித்து திரணமாய் எண்ணவோ கணக்கில் எடுக்கவோ கூடாது. கர்த்தருக்குப் பரிசுத்தமானவைகளெல் லாம் கர்த்தருக்கே உரியவைகளாகும். செலுத்தத் தாமதித்தால், அதை எடுத்து செலவழித்து விட்டால் ஐந்தில் ஒரு பங்கை கூட்டிக் கொடுக்க கட்டளை இடப் பட்டுள்ளது.

லேவியராகமம் ஆசாரியர்களுடைய கையேடாகும். லேவியராகமம் என்று பெயர் சூட்டியிருந்த பொழுதிலும் லேவியர்களை குறித்தல்ல ஆசாரியர்களை குறித்தே அதிம மாக வாசிக்கிறோம். எபிரேய வேதாகமத்தை கிரேக்கில் மொழிபெயர்த்தவர்கள் இதற்கு லேவியராகமம் என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். ஆனால் எபிரெய வேதாகமத்திலோ ஆசாரியர்கள் புஸ்தகம் என்றே இருக்கிறது. [தொடரும்]

---

"அப்பொழுது யூதர் எல்லாரும் தானியம் திராட்சரசம் எண்ணெய் என்பவைகளில் தசமபாகத்தைப் பொக்கிஷ அறைகளில் கொண்டுவந்தார்கள். நெகே. 13:12.

---

# இந்து மதம்

*(தொடர்ச்சி)*

### 3. ஆறு சமயங்கள்

சைவம், வைஷ்ணவம், சைனம், பௌத் தம், சாருவாகம், உலகாயுதம் என்பவை களே. இவற்றுள் தன்புத்தியைத் தெய்வ மென்று வணங்குகிற சாருவாக சமயமும் ஒன்றுமில்லையென்று சாதிக்கிற நாஸ்திக மதமாகிய உலகாயுத சமயமும் இத்தேசத் தில் விசேஷமாய் இல்லாதபடியால் மற்ற நான்கு விசேஷித்த சமயங்களைச் சொல்லு கிறோம்.

1. சைவம்: சிவனை வணங்கல். சைவம் 16. அவையாவன: ஊர்த்த சைவம், அனாதி சைவம், ஆதி சைவம், மகா சைவம், பேதசைவம், அபேத சைவம், அந்தர சைவம், குண சைவம், நிற்குண சைவம், அத்துவா சைவம், யோக சைவம், ஞான சைவம், அனுச்சை சைவம், கிரியா சைவம், நாலுபாதர் சைவம், சுத்த சைவம்.

ஆறு உட்சமயங்கள்: வைரவம், வாமம் (சக்தி பூசை), காளாமுகம், மாவிரதம், பாசு பதம், சைவம்,

சிவதத்துவம் ஐந்து. அவை யாவன: சுத்த வித்தை, இச்சாசுரம், சாதரக்கியம், சக்தி, சிவம். அவை யாவன: ஞானமேறிக் கிரியை குறைந்தது சுத்த வித்தை. ஞானம் குன்றிக் கிரியை உயர்ந்தது இத்தீச்சுவரம், ஞானக்கிரியையொத்தது சதாக்கியம். கிரியை நாடல் சக்தி. ஞானன் மன்றன் சிவம், சைவத்துக்கு புறச் சமயங்கள். உல காயுதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பஞ்சா ரத்திரம், பட்டாச்சாரியம் போன்றவைகளாகும். சிவ பூசை இயல்பு நான்கு. அவையாவன:

சரிதை, கிரியை, யோகம், ஞானம் என்பவைகளே.

சரிதையாவது :

1) விளக்கிட தீர்த்தம், வெந்நீர் உத்திராட்சம் புத்திரன் பார்ப்பான் புராணன் கீர்த்தனே அருட்சனே எட்சரம்.
அறங்கள் பலவே.

1) திருவிளக்கு
2) புண்ணியஸ்தலம்
3) தீர்த்தம்
4) விபூதி
5) உத்திராட்சம்
6) நற்புத்திரன்
7) பிராமணன், பிராமணியம்
8) பிராமண விசுவாசம்
9) நாம அர்ச்சனே
10) சிவார்ச்சனே
11) பஞ்சாட்சரம்
12) அறம் முப்பத்திரண்டு

திருக்கோவிலுக்கலகிட்டு மெல்லிட்டு தீப மிட்டு பருட்கோடு நந்தவனம் வைத்து பூக் கொய்து பரடியத்தால் விருப்போடு சுற்றி எவ்வேதம் பணிக வியன்சரிதைகிருபார்க்கு நற்சுவ லோகமென்ருகமென்னிடுமே.

2) கிரியைவாவது: யாகம் பலியே யாத்திரை காவடி அரிகண்டம் விரதம் அங்க பிரதட்சணம் தீவிளையாடல் செடிக்குத் தியாடல், சிரமொட்டை, முத்திரை, தண்டனே பலவே.

1) யாகம்
2) பலி
3) தீர்த்தயாத்திரை
4) காவடி
5) அரிகண்டம்
6) விரதங்காத்தல்
7) அங்கப்பிரதட்சண்யம் வரல்
8) தீக்குத்தியாடல்
9) செடிக்குத்தியாடல்
10) சிரைமொட்டையிடல்
11) முத்திரை தானமிடல்

இவ்வித பலவித அக்கினேகளே அபைவித்த கிரியையாகும்.

மிக நீரிட்டு பஞ்ச சுத்திவாரம்
விசேடாக்கிய மக பூசையாசன மஞ்சனம் ஆவாகர மர்ச்சனே தகவோமம் சோடசம் பஞ்சாவர்ணம் சன்டாதியுடன் சுக பூசை செய் கிரியைக்கு சாமிபமும் துன்னிடுமே.

3) யோகமாவது :

சந்நியாசம் வேடம் சடை நிர்வாணம் மௌனம் சாகரம் பூவனம் செய்தல் யோக சமாதி உபவாசம் கற்பம் வனவாசம் புற்றளம் வழங்கல் பலவே.

1) விரதத்துவம்
2) தவவேடம்
3) சடாமுடி
4) நிர்வாணம்
5) மௌனம்
6) துயிலெழுதல் [விழித்தல்]
7) பூவலன் செய்தல்
8) யோக நிட்டை
9) உண வொழிதல்
10) கற்பமுறை
11) வனவாசம் பண்ணல்
12) பலவித சரீரத் தண்டனேகள்

குணம் புலன் மூன்றைந்தடக்கி
இருவழி கூடடைத்து வணங்குகழிலே வெளியேற்றி
மன்னிய காண்டலத்தி விணங்கும் சிலம்பொலி
கேட் டுட்டவ ரெழில் விட்டுவன் போல்
நனேந்த சிவனுருவாகுவர் யோகமடைந் தவரே

[அங்கயோகம் 66-ம் ஏட்டில் காண்க.]

4) ஞானமாவது :

சன்மார்க்கமுற்ற நல் வேதாகமங்களும்
சார்ந்துமயல் பன்மார்க்க முற்ற சமயம்
விட்ட பதிவாசம் பசு தன் மார்க்க முக்தியில்
தத்துவ நீக்கி தனேயறிந்த நன்மார்க்கந்
தான் சிவனேடன் கழன்றுதல் ஞானமன்றே.

ஞானம் :

சன்மார்க்க சத்தியம் நிறைந்த வேதாகமத்தைக் கற்றுணர்ந்து, தன்னே புணர்ந்து பக்தியற்ற பல மார்க்கங்களேயும்

அதன் தத்துவங்களையும் பாவங்களையும் விட்டு விலகி நன்மார்க்கத்தில் நிலைப்பதே ஞானம்.

ஞானம், அது இரு வகைப்படும்.

1] அத்வைதம்
2] துவைதம்

அத்வைதம் : சமஸ்தமும் பிரம்மமேயன்றி வேறில்லை என்பது. விசிஷ்டாத்வைதமென்று பெயர். இது ஒன்றுமிருக்கிறது வேறுமிருக்கிறது. இந்துக்களுக்குள்ளே ஞானிகள் சிலர் இருந்தார்கள். அவர்கள் மெய்ஞானத்தை முற்றும் உணர்ந்தறியாதவர்களாயிருந்தும், அவர்களுக்குள்ளே ஞான முதலாகிய மற்ற மதத்தினருடைய கோட்பாடுகளை விரோதித்து பல விதமாய் மெய்யும் பொய்யுமாய் பாடியிருக்கிறார்கள். இவ்விதமாக மெய்யும் பொய்யும் கலந்தும் பாடியவர்கள் யாரென்றால் பட்டணத்துப் பிள்ளை, கொங்கணர், குதம்பைச் சித்தர், சிவவாக்கியர், திருவள்ளுவர், மாணிக்க வாசகர், சங்கராச்சியார் முதலியவர்களே. இவர்களுடைய கொள்கை இன்னதென்றறிய அச்சில் பதிப்பித்திருக்கின்ற அகஸ்தியர் ஞானம் முப்பதையும், பட்டணத்துப் பிள்ளைப் பாடல்களையும் காண்க. மற்ற ஞானிகள் சொன்னதாவது.

விக்கிரகங்களைக் குறித்து :

எத்தனை தான் கல்லுகளை பூசிந்தாலும்
ஈனர்களே உங்களுக்கு மோட்சம் உண்டோ
சுத்தமுடன் தலை முழுகித் தவஞ் செய்தாலும்
சொல்லரிய பேரின்பம் தோன்றுமோதான்
பித்தர்களே கல்லுகளை விலைக்கு வாங்கி
பிராணன் என்ற சீலையிலே முடித்துக் கொண்டு
செத்த பின்பு கைலாயம் சேருவோமென்றால்
சேருவதில்லை எரிநரகம் சேருவீர்தானே.
அண்டரண்டம் கடந்து நின்ற சோதிதானே
அவனிதனிலுடைத்த கல்லில மருவோராதான்
என்றிசையும் மெய்வியுருமான ஜோதி
இனமாம் கல்லுகளிலிருப்பாரோ தான்
தொண்டர்களேளிங்களுக்கேனிந்த வார்த்தை
சொன்னவர்க்கும் கேட்டவர்க்கும் சொர்க்கமில்லை
மண்டலத்தில் சற்குருவை வணங்கி நின்றால்
மாருத பெருவாழ்வில் வாழலாமே.
மண்ணிலே பிறந்த கல்லை வகை வகைத் தெரிந்தெடுத்தே
என்னிலாலிங்கமாக வியலுடன் கோயில் கட்டி
பண்ணிய வைத்துப் பின்னும் பல பல
பூசை செய்தால் விண்ணிலே சேர்வதில்லை
வீணிலே நரகில் விழ்வார்
ஓசை பெற்றக் கல்லை நீர்
உடைத்துருக்கச் செய்கிறீர்
வாசலில் பதித்த கல்லை மழுங்கவும் மிதிக்கிறீர்
பூசை பெற்ற கல்லிலே
பூவும் நீரும் சாற்றுகிறீர்
ஈசனுக்குகந்த கல்லிரண்டுமே
கல்லு மண்ணல்லவே.
உளியிட்ட கல்லும் ஊதியிட்ட செங்காலும்
புளியுற்ற செம்பும் புகழையடைவது எக்காலம்

சற்குருவைக் குறித்து :

சற்குருவை வணங்காமல் தள்ளிவைத்து
தன்னையறியா குருக்களையே சார்ந்து கொண்டு
பொய்க்குழியா நரகத்தில் விழ்ந்துபோகும்
குருடருக்கு பொருளுரைத்தார் புக முண்டாமோ
கற்குருவாம் கல்லுகளைத் தொழுது நின்று
கை கட்டி வாய்புதைத்து நின்று கொண்டு
பூசை செய்து நிற்போர் மெய்க்குருவை
சார்ந்து கொண்ட வகையறியா புல்லருக்கு வன்மையுண்டோ
சற்குருவையறியாமல் நுலகிலே தான்
சண்டாளர் கல்லுகளைத் தெய்வமென்று
பொய்க்குருக்கள் சொன்ன புத்திதன்னைக் கேட்டு
பூசை செய்து கல்லுகளை போற்றிசைவார்

சொற்குருக்கள் தங்களுடைய செய்தி
கேட்டார்
சொர்க்கமுண்டோ நரகமல்லால் சொல்லும்
போது
சற்குருவையறிந்தவருக்குடனே மோட்சம்
சாருவதென்றே முன்னோர்கள் சாற்றினரே.

காரியக்குருவின் குணம் :

குருக்கள்மார் என்றுரைப்பார் பொரு
ளுங்கானர்
குவலயத்தில் உபதேசம் கூறி நிற்பார்
மருக்களாய்சீஷனுக்கு பொருளைச்சொல்வார்
மாசற்ற சோதியுடைய வடிவைத் தோற்றார்
பாருக்களாம் ஒத ஒரு சறறமில்லை
பொய்களே மிகப் பேசி பொருள் பறிப்பார்
அருட்களாய் யாகமத்தி நடையுகானர்
அறிவில்லா குருக்களென்றே யறியலாமே.

தன்னைத் தானறியாத மூடரெல்லாம்
தானுலகில் குருக்களென்று பேரும்
சொல்வார்
பின்னைத்தான் பிறவாத நெறியுங் காணர்
முன்னைத்தான் பொய்யோர்கள் சொன்ன
நூலின்
முறைமைகளை யறியார்கள் மூடரெல்லாம்
முன்னத்தான் சீஷருக்கு முக்திக் காட்டி
ஈடேற்றி கொடுப்பதுவோ மேல்விலாரே.

தன்னைத்தானறிதல்:

தன்னையுமறிந்து பாரார் தலைவனைக்
காண்பதெங்கே
மன்னிய உலகத்தோர்கள் மகிமையை
என்ன சொல்வேன்
சென்னிய நாதன் பாதம் திறமுடன்
வணங்கிப்போற்றி
தன்னையேக் காட்டி பின்னும் தலைவனை
யறிவிப்பாரே.

வேதத்தைக் குறித்து :
கல்வியே பெருமையாக கதலிய
திரிவோபில்லர்
சொல்லிய ஞானநூலின் நுட்சமத்தை
அறியமாட்டார்
வல்லவர் நாவுகளென்று வாதுகள் மிகவும்
பேசி
எல்லையில்லாதக் கன்னார் தேடியே
முழுகுவாரே
உலகிலே பிறந்த முன்னோர் ஓதிய கலைக
ளெல்லாம்
நிலையதாம் சோதி தன்னை நிசமதாய்
சொன்னதில்லை
பல பல பேதமாக பாங்காக கூறு செய்து
அலகைப்போல் பொய்யைப் பேசி
எர்நரகில் அழுந்திப்போனர்.
சக்திய ஞானநூலின் சாடையை யறியா
மூடர்
வித்தைகள் மிகவும் கற்ற வினராய்
இறந்து போனர்
அத்தனை பெருமையாக அவனியிலறியச்
சொல்லி
முக்தியை அறிவாறில்லை மூடருக்கு
மோட்சமுண்டோ?

மறுபிறப்பைக்குறித்து :

கறந்த பால் முலை புகா
கடைந்த வெண்ணை மோர்புகா
உடைந்த சங்கினோசையும்
உயிர்களும் உடல் புகா
வடிந்த வேரடியினில் உதிர்ந்த பூ
மரம் புகா திறந்து போன
மானிடர் இனி பிறப்பது இல்லையே
இல்லை இல்லை இல்லையே

மனம் ஒன்றுதலைக் குறித்து :

மனமொன்றி நின்ற விடம் சரிதையாகும்
மண்ணியதோர் சுத்தியிலேமாய வேண்டாம்
மனமொன்றி நின்றவிடம் கிரியையாகும்
மண்ணு சிவ பூசையிலே மயங்க வேண்டாம்
மனமொன்றி நின்றவிடம் யோகமாகும்
மன்னியதோருடல் தன்னை மாய்க்க
வேண்டாம்
மனமொன்றி நின்ற விடம் ஞானமாகும்
மனமொன்றி நிலைபரத்தை மன்னலாமே.

பதவி நான்கு :

சாலோகம், சாமியுகம், சாருகம் சாயுச்சியம், இவற்றுள், கடவுள் உலகத்தில் வாழ்தலே சாலோகம்; கடவுள்

சமீபத்து வாழ்தலே சாமீபம்; கடவுளுரு போன்று வாழ்தலே சாருகம் கடவுளோ டொன்றி வாழ்தலே சாயுச்சியம் சைவத்தை சேர்ந்தவர்களுக்கு சாம்பலும் உருத்திராட் சமும் அடையாளம். சைவர்கள் தெற்கே அதிகம்.

வைஷ்ணவர்கள் :

விஷ்ணுவை வணங்குவார்கள். இதற்கு உட்சமயம் ஆறு, யாதவம், மாயாவதம் (சங்கராச்சாரியார்), இரணிய கருப்பம், இராமானுஜம் பாஸ்கரம், தத்துவாதம் [ மாதவாச்சாரியார் ], வைஷ்ணவாகமம் இரண்டு. பஞ்சராத்திரம். வைகாநசம், வைராகிகள் வைஷ்ணவர்களைச் சேர்ந்தவர் கள். நாமமும், துளசிமாலையும் வைஷ்ண வர்களுக்கு அடையாளம். வைஷ்ணவர்கள் வடக்கே அதிகம். சைதனியம் கிருஷ்ணனை வணங்கி பல சடங்குகளைத்தள்ளுதல்.

ஜைனம் :

ஆர்க்கதம் அருகனை வணங்கல் இந்த மார்க்கத்தைக் குறித்துப் படித்தறிந்தவரா கிய ஒரு சைன சாஸ்திரியாரால் இது எழுதப் பட்டது. சைன சமய சித்தாந்தம். சைன சமயத்தார் ஆதிகாலத்திலே இந்த உலகத் தில் சைன சமயமொன்றே அனாதியாய் இருந்த சமயம் என்றும் மற்ற சமயங்க ளெல்லாம் இதிலிருந்தே உண்டான தென்றும், இந்த சமயத்திலேதான் நன்றாய்க் கற்றுணர்ந்த கல்விமான்கள் காலத்தோ ஷத்தினாலே அநேக சமயங்களை உண்டு பண்ணினார்கள் என்றும், மோட்ச சுகம் இந்த சமயத்திலல்லாமல் மற்றயாதொரு சமயத்திலும் கிடையாதென்றும், உண்மை யான சமயம் இது ஒன்றே என்றும் மற்ற சமயங்கள் எல்லாம் பொய்யை மெய் யென்று நம்பின சமயங்கள் என்றும் உண்மையாய் நம்பியிருக்கிறார்கள்.

(தொடரும்)

---

"...பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிறகடலிலே பங்கடைவார்கள்.."

வெளி. 21:8.

---

# குடும்பம் (தொடர்ச்சி)

## குழந்தை வளர்ப்பு

திருமணத்தின் நோக்கங்களில் ஒன்று தேவபக்தியுள்ள பிள்ளைகளைப் பெற்று வளர்த்திடுதலாகும். விவாகமானவர்கள் தேவனுடைய ஆசீர்வாதம் தங்களில் உண்டாக ஜெபிக்க வேண்டும். குழந்தை பிறப்பிக்கிறதான செயல் பாவமல்ல. ஆதாம் ஏவாள் பாவத்தில் விழுமுன் ஏதேனில் தேவனால் ஏற்பாடு செய்ததாகும் அது. அவர்கள் இருவரும் ஒரே மாமிசமா யிருப்பார்கள். (ஆதி. 2:24). முதல் குழந்தை பிறப்பதை வாஞ்சையோடு எதிர்பார்க்க வேண்டும். கணவன் மனைவி அன்பிற்கு பிறந்த குழந்தை, அந்த அன்பர்களை இணைக்கும் அழகிய சக்தியுள்ள சங்கிலியா கும். புதிதாக விவாகம் செய்தவர்களுடைய பாசம் ஒருவேளை அதன் ஆரம்பத்தில் இருக்குமானால் அல்லது பூர்த்தியாகும் நிலை யில் இருக்குமானால் குழந்தை பிறப்பு கணவனையும் மனைவியையும் அதிக நெருக்க மாகக் கூட்டிச் சேர்க்கும். தாங்களாக இல்லாவிட்டாலும் தங்களால் உண்டான ஒரு ஜீவனை முதல்முதலாவது நேசிக்கிற தற்குக் கற்றுக்கொள்ள ஆரம்பிக்கிறார்கள். விவாகத்துக்கு முன், தங்களால் உண்டாகப் போகும் குடும்பத்தைப்பற்றி தங்களுக்குள் பேசியிருப்பார்களானால் அது அவர்க ளுக்கு சௌகரியத்தையும் சந்தோஷத்தை யும் கொடுக்கும். அவர்கள் இருவரும்

பிள்ளைகளைப் பெற்றெடுக்க வாஞ்சிக்கிறார்கள் என நம்புவோமாக. இவர்களுடைய குடும்பங்களில் ஏதாவது ஒரு குடும்ப வியாதி இருக்குமானால் விவாகத்துக்கு முன் இருவரும் தங்களை வைத்தியரால் நன்றாய்ச் சோதித்துக் கொள்ளவேண்டும். சுகமுள்ள பிள்ளைகளைப் பெற இது அச்சாரமாகும். அதோடு பின்னால் உண்டாகக் கூடிய அதிக மனச்சங்கடத்தினின்று இது இவர்களைப் பாதுகாக்கும். ஏனெனில் தகப்பனோ தாயோ பலவீனமாய் அல்லது வியாதியுள்ளவர்களாயிருந்தால் குழந்தையும் அவ்விதமான ஆரம்பம் உடையதாகும். அப்படி இருப்பது பிள்ளையுண்டாவதையும் தாமதப்படுத்தும். குழந்தையையடைய வாஞ்சிக்கும் சில மனைவி கணவர் பிள்ளையுண்டாவது தாமதப்படும்போது ஏமாந்து போகிறார்கள். அவர்கள் தேர்ந்த வைத்தியருடைய ஆலோசனையைத் தேடுவது நல்லது. ஏனெனில், அடிக்கடி எளிதில் சரிபடுத்தக் கூடிய சிறிய தடையால் கர்ப்பம் தரியாது இருக்கலாம். மாதா மாதம் வரும் பெண்களுக்குரிய வழிபாடு நிற்பதாலோ அல்லது காலையில் உண்டாகும் ஒரு விபரீதமான சுகவீனத்தாலோ தான் கர்ப்பந்தரிக்கிறதை மனைவி உணர்ந்து கொள்ளமுடியும். ஒரு வைத்தியரைப் பார்த்து குழந்தை பெறுவதாகிய மகிமையான வேலைக்கேற்ற தகுதி தனக்கு உண்டோ என்று அறிந்து கொள்ள வேண்டும். உற்பத்தியாயிருக்கும் குழந்தை சுகமும் பலமுள்ள தேகத்தில் வளர்கிறது என்பதை நிச்சயப் படுத்திக்கொள்வதற்கு எடுத்துக் கொள்ளும் சகல கஷ்டமான காரியங்களையும் செய்தே தீரவேண்டும். இரத்தநாடி பார்க்க வேண்டும். பற்களை பரிசோதிக்க வேண்டும். தகுதியான ஆகாரம் அருந்த வேண்டும். ஒழுங்கான தேகாப்பியாசமும் தேவை. எல்லாவற்றிற்கும் மேலாக ஆரம்பத்திலேயே கணவனும் மனைவியும் தங்கள் அன்பின் கனியாகிய குழந்தையை, அதைத்தந்த தேவனுக்கு ஒப்புவிக்க வேண்டும். குழந்தை பிறக்கிற வரையில் வைத்திய சாலைக்கோ, தாய்மாரை கவனிக்கிற ஸ்தலத்துக்கோ தொடர்ச்சியாய் ஒழுங்காய்ப் போக வேண்டும். வைத்தியரிடம் ஒழுங்காயும், தவறாமலும் போய் அவ்வப்போது தாய் உண்டான தகாத நிலையை சரிப்படுத்திக் கொள்ளாததால் எத்தனையோ சிசுக்களை தாய்மார் இழந்திருக்கிறார்கள். குழந்தை பெறுவது இயற்கையான தொழிலாதலால் பயப்படக்கூடியதல்ல. இளைய மனைவி, முதிர்ந்த மனைவிகள் கஷ்டமான பிரசவங்களைப் பற்றிச் சொல்லுகிற கட்டுக் கதைகளுக்குச் செவிகொடுக்கக் கூடாது. இதைப்பற்றி பலவிதமாய் வீண் வார்த்தையாட மறுக்க வேண்டும். சுகத்தோடு இருந்துகொண்டு சாதாரண சுறுசுறுப்புள்ள ஜீவியம் செய்கிறவளாய் இருக்கவேண்டும். பிறகு தேகமும் மனமும் களைப்பற்ற நிலையிலிருக்கத் தன்னையும் தன் அருமையான பாரத்தையும் கடவுளிடம் ஒப்படைக்க வேண்டும். அசௌகரியமாக இருக்க எதிர்பார்த்து தன் சரீரத்தில் சகலவித வேறுபாடுகளும் உண்டாகிறதென்று பயப்படுவாளானால், சுகவீனப்பட்டு, தன் கணவனை அப்புறப் படுத்துவாள். ஆனால், சுகதேகியான பெண், இந்த சமயத்தில் தன் பூரண சுகமான நிலையில் இருப்பாள். கஷ்டமுள்ள சில வாரங்களுக்குப் பிறகு அவள் மலர்ந்து அதிக அழகுள்ளவளாய் வளர்வாள்.

கடைசியாக, தனக்குக் கொடுக்கப்பட்ட மகிமையான வேலையை செய்துமுடிக்கிறாள். இதற்கென்றே ஆச்சரியமானதும் அநேக அவயவங்கள் நிறைந்ததுமான அவளுடைய சரீரம் அமைக்கப்பட்டது.

தேவ சித்தையும் அன்பையும் முதலில் வைத்து ஜீவிப்பவர்கள் தங்களுக்கு பிறக்கும் முதற்குழந்தையை தங்கள் விவாக ஜீவியத்தில் தேவனுடைய ஆசீர்வாதம் இருக்கிறது என்பதற்கு அறிகுறியாகும். அது அன்பில் உற்பத்தியாகி தேவனால் விசுவாசமுள்ள வாலிபத்தாயின் தேகத்தில் சுமக்கப்படுகிறது. என்ன நடக்குமோ என்ற பயமும் அசௌகரியங்களும் வியாதியுமுள்ள நீண்ட ஒன்பது மாத காலத்தில் அவர்களிலுள்ள அன்பு ஒருவரையொருவர் தாங்க உதவிபுரிகிறது. அந்த மாதங்களில்

அன்புக் குழந்தை உருவாக்குவதால் அதை விரும்பி எதிர்பார்த்த உலகத்துக்குள் அக்காலத்தின் அந்தத்தின் நம்பிக்கையும் சந்தோஷமுமான தன்மையோடு குழந்தை பிரவேசிக்கிறது. சில தம்பதியர்கள் ஆரம்பத்திலேயே குழந்தை பெறுவதை விரும்பாதபடி. ஜீவன் உற்பத்தியான பின்பு அதை அழிக்க பிரயாசப்படுவார்கள். அவ்விதமாய்ச் செய்வது அவர்களுக்கு தேவ ஆசீர்வாதத்தை ஆரம்பத்திலேயே மறுக்கிற தவறாக அது முடியும். அது பாவமாகும். பின்பு அவர்களுக்கு குழந்தை பிறப்பதில் சங்கடம் உண்டாகும். ஆனபடியினால். ஜீவன் உண்டான பின்பு அதை அழிக்க பிரயாசப்படக் கூடாது. இக்காலத்தில் தாயின் தேகம் கூடுமானவரை நன்றாகப் போஷிக்கப்பட்டு சௌகரியமாக இருக்க வேண்டுமென்று வற்புறுத்தப் படுகிறது. அதே சமயத்தில், தாயின் மனம் அதைக் காட்டிலும் அதிக விசேஷமானது என்பதை மறந்துபோகக் கூடாது. தேவனிடத்தில் வைக்கும் நம்பிக்கையோடு ஒரு புது ஜீவனைப் பெறுவதாகிய அற்புதத்தை தாய் எதிர்பார்க்க வேண்டும். அதிக கவனத்தோடு தெரிந்தெடுத்துக் கொடுக்கும் ஆகாரத்தைக் காட்டிலும் அவள் தேவனிடத்திலும் அவளுடைய சொந்த சரீரத்திலும் நடந்து கொண்டிருக்கிற ஆச்சரிய வளர்ச்சியிலும் அவளுக்கு இருக்க வேண்டிய நம்பிக்கை மகா முக்கியமானது. தேவன்மேலுள்ள

---


## FORM IV

(See Rule 8)

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | : Bombay |
| 2. | Periodicity of its publication | : Monthly |
| 3. | Printer's Name | : Chief Pastor N. LAZAR |
| | (Whether citizen of India? | : YES. |
| | (if foreigner, state the country of origin) | |
| | Address | : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 4 | Publisher's Name | : Chief Pastor N. LAZAR |
| | (Whether citizen of India?) | : YES |
| | (if foreigner, state the country of origin) | |
| | Address | : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 5. | Editor's Name | : Chief Pastor N. LAZAR |
| | (Whether citizen of India? | : YES |
| | (if foreigner state the country of origin) | |
| | Address | : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | : New Jerusalem Church Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |

I, Chief Pastor N. LAZAR hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Sd.[ ]
Chief Pastor N. Lazar.
Signature of Publisher

Dated : 29-2-92

நம்பிக்கை தனக்குள் உண்டாகிக்கொண்டு வரும் குழந்தைக்கு அவள் கொடுக்கும் முதல் ஈவு. இக்காலத்தில் மெய்யாகவே அவள் தன் புருஷனை நேசிக்காவிட்டாலும் அவனைப் பற்றிய பயமுடையவளாயிருந்தாலும் இந்த நம்பிக்கை இருந்தே தீர வேண்டும். ஏழைக் குடும்பங்களில் பிறக்கும் நூற்றுக்கணக்கான குழந்தைகள் இதற்கு ஒரு உபகாரத்தைக் காணலாம். ஆனால், தங்கள் கணவரை நம்பி அவர்களின் அன்பை அனுபவிக்கிற மனைவிகள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.

கணவன் : இப்பொழுதுதான் அவனுடைய விருப்பங்களுக்கும் சௌகரியங்களுக்கும் முரண்பாடு காணப்படுகிறது. தன் மனைவிக்காக சில காரியங்களை விட்டு விட ஆசிக்கிறான். ஏனெனில் அவள் அவனில் ஒரு பாகம். அதோடு மூன்றாவது ஆளுக்காக தன் விருப்பங்களையும், சௌகரியங்களையும் விட்டுவிட வேண்டும். அவன் மனைவி சில வேளைகளில் வியாதிப்படலாம், எரிச்சலடையலாம், கஷ்டப்படுத்தலாம், மாதங்கள் கழிய பின்னடையலாம். உபயோகமில்லாமற்போகலாம். முன்போல் தன்னோடு வெளியே போக இஷ்டப்படாமலிருக்கலாம். அதோடு தன் சொந்த சௌகரியங்களில், சொந்த காரியங்களில் வருங்காலங்களில் கஷ்டங்கள் ஏற்படலாம். இரண்டு பேருக்கும் மாத்திரம் சரியாயிருந்த சம்பளம் மூன்று பேருக்கோ, நான்குபேர்களுக்கோ எட்டுமா? பிள்ளைகளின் படிப்பு பற்றிதேவை ஏற்படும்போது என்ன செய்வது? எதிலேயும் அன்றன்று தேவ தீர்மானத்தில் வைக்கும் நம்பிக்கை மற்று எதுவும் செய்யாத விதத்தில் அமைதியையுண்டாக்கி ஆதரிக்கும். தான் எதிர்பார்க்கிற திடமும் பத்திரமாய் இருக்கிறோம் என்ற உணர்ச்சி மனைவிமாருக்கு அவசியம்.

(தொடரும்)

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

உயிர்த்தெழுந்த கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலின் வல்லமையினல் கிறிஸ்தவம் தெய்வீகமதமென்றும், மார்க்கமென்றும், இதை நாம் கண்டு கொண்டோம். உயிர்த்தெழுந்த கர்த்தர் தம்முடைய உயிர்த்தெழுதலின் வல்லமையினல் மனிதனை பாவத்திலிருந்து உயிர்ப்பிக்கிறர். வல்லமையுள்ள வாழ்க்கை அருளுகிறர். ஆத்மிக, சரீர ஆசீர்வாதங்களையும், நன்மைகளையும் தெய்வீக வல்லமையினல் வரங்களையும், உயிருள்ள அனுபவங்களையும் அருளுகிறர். உயிர்த்தெழுந்த கர்த்தரால் வல்லமை பெற்று கிறிஸ்தவமானது உலகத்தில் வெற்றி நடையிடுகிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதல் மனிதனுக்கு உயிர்த்தெழுதல் உண்டு என்பதை நிரூபிக்கிறது. ஆனல் அந்த உயிர்த்தெழுதல் இரண்டு விதமாக இருக்கும். நீதிமான்கள் கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து, கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள், உயிரோடெழும்பி மகிமையான சரீரம் பெற்று, தெய்வ உலகத்தில் நித்தியமாய் மகிழ்ச்சியுடன் வாழ்வார்கள். துன்மார்க்கர்களும், பாவிகளும் உயிரோடெழுப்பப்பட்டு தங்களுடைய பாவம், விக்கிரகாராதனை, துனிகரத்திற்கான தண்டனை பெற்று நித்திய நரகத்தில் அழுந்தி நித்தியமாக அலறிக் கொண்டிருப்பார்கள். இயேசு கிறிஸ்து உயிரோடெழுந்தது மனிதனுக்கு உயிர்த்தெழுதல் உண்டு என்பதை நிரூபிக்கிறது. ஆனபடியினல், நாம் மகிழுகிறேம். சந்தோஷப்படுகிறேம். நம்பிக்கையோடு, நமது வாழ்க்கையை வெற்றியோடு, தெய்வ சித்தத்தின்படி ஜீவித்து, ஊழியம் செய்து முடிப்போமாக. "என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான்; மரியாமலும் இருப்பான்" (மறுரூபமாவன்) என்று இயேசு கிறிஸ்து சொல்லுகிறர். இந்தத் தகுதியை நாமெல்லாரும் பெற்றுக் கொள்வோமாக!

கிறிஸ்துவினுடைய ஆசீர்வாதம் உங்களெல்லார் மேலும்
உண்டாயிருப்பதாக!! ஆமென்!!!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

(தொடர்ச்சி)

# கிருபை வரங்கள்

கிருபை வரங்களின் வெளியரங்கமான காரியங்களை ஆராய்ந்தோம். இறைவனால் அருளப்பட்ட இதன் பிரயோஜனங்களையும் பகுப்புகளையும் பார்ப்போமாக. I கொரி. 12:8-10 ல் கூறப்பட்டுள்ள வரங்களின் பட்டியல் :

1. ஞானத்தைப் போதிக்கும் வசனம்
2. அறிவை உணர்த்தும் வசனம்
3. விசுவாசம்
4. குணமாக்கும் வரங்கள்
5. அற்புதங்களைச் செய்யும் சக்தி
6. தீர்க்கதரிசனம்
7. ஆவிகளைப் பகுத்தறிதல்
8. பற்பல பாஷைகள்
9. பாஷைகளை வியாக்கியானம் பண்ணுதல் என்பனவாம்.

மனிதன் ஆவி, ஆத்துமா, சரீரம் என்ற முப்பிரிவாக இருக்கிறது போல, இந்த வரங்களும் மூன்று துறைகளுக்குமாக வெளிப்படுத்தல் கொடுக்கின்றன.

1. ஆவிக்குரிய மண்டலம் :

தீர்க்கதரிசனம், பற்பல பாஷைகள், பாஷைகளை வியாக்கியானம் பண்ணுதல். இம் மூன்றும் இந்தத்துறையைச் சேரும்.

2. மனதிலே மண்டலம் அல்லது ஆத்துமாவுக்கடுத்தது :

வரங்கள், வெளிப்படுத்தின வரங்கள் என்று சொல்லப்படும் ஞானத்தைப் போதிக்கும் வசனம், ஆவிகளை பகுத்தறிதல், அறிவை உணர்த்தும் வசனம் ஆகியவை இதில் அடங்கும்.

3. வல்லமையின் வரம் :

சரீரத்துக்கடுத்தது : விசுவாசம், குணமாக்கும் வரங்கள், அற்புதங்களைச் செய்யும் சக்தி ஆகியவை இதில் அடங்கும்.

இவ்விதமாக வரங்களை மூன்று பிரிவாக பிரிக்கலாம். ஒவ்வொரு பிரிவுக்கும் மூன்று மூன்று வரங்களாக I கொரி. 12-ம் அதிகாரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

1. ஆவிக்குரிய மண்டலம்.

1. தீர்க்கதரிசனம் : இவைகளை "உற்சாகமூட்டும் வரங்கள்" என்று சொல்லுவார்கள். தீர்க்கதரிசனம் என்பது "ஒருவர் தனது தாய் மொழியில் வெளிப்படுத்தும் இயற்கைக்கு மேலான கருத்துரை". ஒருவரைப் பற்றியோ அல்லது ஒரு கூட்டத்தைப் பற்றியோ ஏதாவது பிரத்தியேகமான செய்தியை வெளிப்படுத்த தேவன் சித்தம் கொள்ளும் போது அதற்காக அவர் ஒருவரைத் தெரிந்தெடுப்பார். அவரை ஆவியானவர் ஏவ அந்த நபர் தன் நாவிலே ஆவியானவர் அருளுகிற வார்த்தைகளைப் பேசுவார். இதுதான் தீர்க்கதரிசனம். இது ஒருவர் தனது உள்ளத்திலிருக்கிற காரியங்களைக் கூறுவதல்ல, அது தீர்க்கதரிசனமுமல்ல; ஆவியானவர் அருளுவதை உரைப்பதே தீர்க்கதரிசனமாகும். அவர் பேசும் போது அது அவரது தாய்மொழியாகவோ அல்லது கற்றறிந்த மொழியாகவோ இருக்கலாம் எந்த ஆளுக்காக அல்லது கூட்டத்துக்காகப் பேசுகிறாரோ அம்மனிதனும், கூட்டமும் புரிந்து கொள்ளும் பாஷையிலே தான் செய்தி கொடுக்கப்படும். அது புத்திமதி, ஆறுதல், சீர்திருத்தல் இவைகளைப் பற்றியதாகவோ, அல்லது எதிர் காலத்தை பற்றியதாகவோ இருக்கலாம். வருங்காலத்தைப்பற்றிய காரியத்தை மட்டும் தீர்க்கதரிசனம் என சிலர் நினைக்கிறதுண்டு அது சரியல்ல. வருங்காலத்தைக் குறிக்கும் செய்திகளும் அதில் அடங்கியிருக்கலாம். தேவன் அருளும் செய்தியை தாய் மொழியில் அறிவிப்பதே தீர்க்கதரிசனம். தீர்க்க

தரிசனம் எவைகளுக்காகப் பயன்படுத்தப் படுகிறது என்பதை வசனத்தின் வெளிச்சத்தில் காண்போம்.

**1. வருங்கால சம்பவங்களை அறிவிக்க:**

அகபு என்பவர் அந்தியோகியா சென்று "உலகமெங்கும் கொடிய பஞ்சம் உண்டாகும்" என தீர்க்கதரிசனம் உரைத்தார். [அப். 11:28]. அது அவ்வாறே நிகழ்ந்தது. அதே அகபு, இன்னொரு சமயம் "பவுலை எருசலேமில் கைது செய்வார்கள்" என தீர்க்கதரிசனம் கூறினார் [அப். 21:11]. இவ்விதம் எதிர்காலத்தில் நடைபெறும் காரியங்களைக் குறித்து மக்கள் முன்னறிந்திருக்க தீர்க்கதரிசன வரத்தைத் தேவன் உபயோகிக்கிறார்.

**2. ஒரு ஊழியத்தை ஒப்படைக்க:**

தீமோத்தேயுவை தேவ ஊழியத்துக்காகப் பிரித்துவிடும்படி மூப்பர்கள் அவன் மேல் கைகளை வைத்து ஜெபிக்கையில், தேவன் அவனிடம் ஒப்படைக்கவிருக்கும் ஊழியத்தையும், பொறுப்பையும் குறித்து தீர்க்கதரிசனம் மூலம் அவன் அறிந்துக் கொள்ளச் செய்தார். அதனால் தான் "மூப்பரான சங்கத்தார் உன்மேல் கைகளை வைத்தபோது தீர்க்கதரிசனத்தினால் உனக்கு அருளப்பட்ட வரத்தைப்பற்றி" என்று I தீமோ. 4:14 ல் பவுல் தீமோத்தேயுவுக்கு அறிவுரை கூறுகிறார். இவ்வாறாக ஒரு ஊழியத்தை ஒப்படைக்க தேவன் தீர்க்கதரிசனத்தை உபயோகப்படுத்துகிறதுமுண்டு.

**3. புத்திமதிக்கும், ஆறுதலுக்கும் தீர்க்கதரிசனம் சொல்லுகிறதுமுண்டு:**

தீர்க்கதரிசனம் சொல்லுகிறவனோ மனுஷருக்குப் பக்திவிருத்தியும், புத்தியும், ஆறுதலும் உண்டாகத்தக்கதாகப் பேசுகிறான். இங்கு வருங்காலத்தைப்பற்றியோ, ஊழியத்தை ஒப்படைப்பதைப் பற்றியோ இல்லை, பக்திவிருத்திக்கும் ஆறுதலுக்கும் ஏற்றக் கூறப்படுகிற அறிவுரையாக இருக்கிறது. இதுவும் தீர்க்கதரிசனமே. இது புத்திமதிக்கும், ஆறுதலுக்கும் தேவன் தீர்க்கதரிசன வரத்தை உபயோகிக்கிறார் என்பதைக் காணலாம். அந்நியபாஷைப்பேசி, வியாக்கியானம் செய்வதை சிலர் தீர்க்கதரிசனம் என நினைத்துப் போதிப்பதுண்டு. அது இன்னொரு வரமாகும் தீர்க்கதரிசனத்தில் அந்நிய பாஷை ஒரு இடத்திலும் வெளிப்படவில்லை. பேசுகிறவர்களின் சொந்த மொழியேயல்லாமல் வேறெந்த மொழியும் அங்கே இடம் பெறாது தேவன் சிறப்பாகக் கொடுக்கிற அந்தச் செய்தியானது வருங்காலத்தைக் குறிக்குமானாலும், ஊழியத்தை ஒப்படைக்கிறதைக் குறித்ததானாலும், புத்திமதியானாலும், அது எவ்வகையானாலும் ஆவியானவரின் தூண்டுதலினால் உரைப்பதே தீர்க்கதரிசனம். பிரசங்கத்தின் போதும், அறிவுரையின் போதும் இவ்வனுபவம் அநேக தேவ ஊழியர்களுக்கு ஏற்படும். தீர்க்கதரிசனத்தைக் குறித்து சரியான விளக்கம் இல்லாமையினால் ஊழியராலும், மக்களாலும் அதைப் புரிந்து கொள்ள முடியாமல் போகிறதுண்டு. பேசுபவர் யோசித்திராத ஒரு விஷயம் அல்லது வாக்கியத்தை ஆவியானவரின் ஏவுதலினால் கூறுவதைத்தான் தீர்க்கதரிசனம் என அறிய வேண்டும். இவ்வித அனுபவம் நம்மிடத்தில் அதிகம் உண்டாகின்றன. ஆனால் அநேகர் இதைக்கவனிப்பதில்லை. இவ்வாறு ஒருவருக்காக ஜெபிக்கும் வேளையில் உண்டாகலாம். ஒருவரைப் பற்றிப பேசிக் கொண்டிருக்கும் சந்தர்ப்பத்திலும் இந்த அனுபவம் உண்டாகலாம்.

**2. பற்பல பாஷைகள் :**

பற்பல பாஷைகள் பேசுகிற ஒருவர் தான் கற்றிராத பாஷையில் இயற்கைக்கு மேலான நிலையில் வெளிப்படுத்தும் நிலை. சிலருக்கு அவர்கள் கற்றறியாத பாஷையில் பேசும் வார்த்தையை தேவன் அருள்கிறார். அல்லது சிலர் மூலம் தேவன் அந்நிய பாஷை மூலம் பேசுகின்றார். இங்கே "பற்பல பாஷைகள்" எனகிற பன்மை வார்த்தையைக் கவனிக்கிறோம் வேறாக

அருளப்படுவது அந்நியபாஷைகள் என்றிருக்கும் என்பதையும் மனதில் வைக்க வேண்டும்

## எதற்காக இவ்வரத்தைத் தேவன் கொடுக்கிறார்?

**1. அவிசுவாசிகளுக்கு அடையாளமாக:**

அப்படியிருக்க, அந்நிய பாஷைகள் இங்கும் பன்மையில் இருப்பதை கவனிக்கவும் விசுவாசிகளுக்கு அடையாளமாகவும் அவிசுவாசிகளுக்கு அடையாளமாகவும் தேவன் பற்பல பாஷைகளை உபயோகிக்கிறார். சில இடங்களில் நடக்கின்ற தேவக் கிரியைகளை இது தேவனுடையதுதானே என்று சந்தேகிக்கிறவர்களும், மனமறிய புறக்கணிப்பவர்களும், பரியாசம் பண்ணுகிறவர்களும் காணப்படுவார்கள். அச்சமயத்தில், அங்கே கூடியிருக்கிற தேவப் பிள்ளைகள் ஆவியில் நிரம்பி, அவர்கள் கற்றறியாத பற்பல பாஷைகளில் பேசக் கூடுமானால் தேவன் அங்கே உண்மையாகவே உண்டு என்பதையும், அது தேவ கிருபையின் அடையாளம் என்பதையும், அந்த புற ஜாதியார் அறிந்து தேவனை மகிமைப் பத்துவார்கள். உதாரணமாக பெந்தெகொஸ்தே நாளின் அனுபவத்தைக் கவனிக்கவும். மேல் அறையில் கூடியிருந்த சீஷர்கள் ஆவியில் நிரம்பி, ஆவியானவர் தங்களுக்குத் தந்தருளின வரத்தின்படி அந்நிய பாஷையில் பேச ஆரம்பித்தார்கள். மேல் அறை சம்பவத்தின் போது கூடியிருந்தவர்கள் வெவ்வேறு பாஷைகளுள்ளவர்களாகக் காணப்பட்டனர். இதைப் பார்க்கும்படி கூடியிருந்தவர்கள் வித்தியாசமான பாஷைகளைப் பேசுகிறவர்களானதால் எல்லாரும் பிரமித்து சந்தேகப்பட்டார்கள். ஏன்? நம்முடைய பாஷைகளில் இவர்கள் தேவனுடைய மகத்துவங்களைப் பேசக் கேட்கிறோமே என்று அவர்கள் பின் கூறினார்கள் [அப். 2:11]. அன்று பேசப்பட்ட அந்நிய பாஷைகள், அங்கு நடைபெற்ற தேவக் கிரியைகள் என்பதை அங்கே கூடியிருந்த அவிசுவாசிகளாயிருந்தவர்களுக்கு அடையாளமாயிருந்தது. கேட்கிற அவிசுவாசிகளுக்கு கலக்கமும், சஞ்சலமும் ஏற்படலாம். ஆகவே விசுவாசிகள் பேசுகிற அந்நிய பாஷைகளைக் கேட்கிறவர்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்றும் நினைக்கவேண்டியதில்லை. உதாரணமாக, தானி. 5-ம் அதிகாரத்தில் பெல்ஷாத்சார் அரசன், தேவன் அங்கே எழுதிய அந்நிய பாஷையைக் கண்டான். அரசனைப் பொறுத்தமட்டில் அது அந்நிய பாஷையாயிருந்தது. தானியேல் அதைவாசித்து வியாக்கியானம் பண்ணும் வரை அதன் பொருள் ராஜாவுக்குப் புலப்படவில்லை. ஆனால் அவ்வார்த்தைகளைக் கண்டவுடனே அரசனுக்குக் கலக்கமும், சஞ்சலமும் உண்டானது. "அப்பொழுது ராஜாவின் முகம் வேறுப்பட்டது; அவனுடைய நினைவுகள் அவனைக் கலங்கப்பண்ணினது; அவனுடைய இடுப்புக் கட்டுகள் தளர்ந்தது, அவனுடைய முழங்கால்கள் ஒன்றொடொன்று மோதிக் கொண்டது" [தானி. 5:6]. அந்த அந்நிய பாஷை அவிசுவாசியான அரசனுக்கு அடையாளமாக இருந்தது. இவ்விதமாக அவிசுவாசிகளுக்கு தேவக் கிரியையின் அடையாளமாக தேவன் பற்பல பாஷைகளின் அனுபவத்தை உபயோகிக்கிறார்.

**2. சபையின் பக்திவிருத்திக்காக தேவன் இந்த வரத்தை பயன்படுத்துகிறார்:**

அந்நிய பாஷை, இங்கே ஒருமையில் கூறப்பட்டிருப்பதைக் கவனிக்கவும். பேசுகிறவன் தனக்கே பக்தி விருத்தியுண்டாகப் பேசுகிறான் என பவுல் கூறுகின்றார். அந்நிய பாஷையிலுள்ள வரத்தின் கிரியை அல்லது அது ஆவியினால் நிரப்பப்படுகிறதை வெளிப்படுத்துவதேயாகும். அது சுய பக்தி விருத்திக்குரியதே. வரங்கள் ஒரு போதும் சுய பக்தி விருத்திக்காகக் கொடுக்கப்பட வில்லையென்று மேலே குறிப்பிட்டுள்ளோம். ஆனால் அதே நேரத்தில் 5-ம் வசனத்தில் "அந்நிய பாஷைகளில் பேசுகிறவன் சபைக்கு பக்தி விருத்தியுண்டாகும்படிக்கு" என்று பவுல் கூறுவதைக் காண்கிறோம். சபையின் பக்திவிருத்திக்காக இவைகளுள் தேவன் இதை உபயோகிக்கிறார்.

என்பதே இதன் கருத்தாகும். இங்கே கவனிக்க வேண்டிய ஒரு காரியம் அந்நிய பாஷைகளில் உள்ள உரையில் வியாக்கியானம் ஏற்பட்டால் மட்டுமே அது சபைக்கு உபயோகமாய் இருக்கும் என்பதாம். அந்நிய பாஷைகளில் பேசுகிறவன் சபைக்குப் பக்திவிருத்தியுண்டாக வியாக்கியானிக்க வில்லையென்றால் வேறு நன்மை இல்லை என பவுல் கூறுகிறார் [I கொரி. 14:5]. அப்படியெனில், அந்நிய பாஷைகள் எதற்கு எனக்கேட்டால் அந்நிய பாஷைகள் இல்லையெனில் வியாக்கியானம் உண்டாகாதே. வியாக்கியானம் வேண்டுமெனில் அந்நிய பாஷைகள் அவசியம். ஆகவே, சபையின் பக்திவிருத்திக்கு இவ்வரமும் இன்றியமையாததாகும். (குறிப்பு: I கொரி.-14:13 ல் "அந்தப்படி அந்நிய பாஷையில் பேசுகிறவன் வியாக்கியான வரத்திற்காக ஜெபிக்ககடவன்" என்று கூறப்பட்டிருப்பதைக் காணலாம்) இது சபையார் ஜெபிக்கும் படியாக அல்ல, அந்நிய பாஷை பேசிக் கொண்டிருக்கிறவன் அதன் அர்த்தத்தை சொல்லத்தக்கதாக வியாக்கியான வரம் தனக்கோ அல்லது பிறருக்கோ உண்டாகும்படி அவர்கள் தேவனிடம் ஜெபிக்கவேண்டும் என்றே கூறப்பட்டுள்ளது.

### 3. ஆவிக்குரிய தியானத்திற்காக :

ஆவியினால் ஜெபிக்கிற, பாடுகிற அனுபவம் பரிசுத்த ஆவிபெற்ற மக்களில் உண்டாகும். ஆவியின் நிறைவு உடைய விசுவாசிகள் ஒன்றாகக்கூடி தேவனைத் துதிக்கும் போது, சில வேளைகளில் அவர்களுடைய பாடல்களையும், ஜெபங்களையும் ஆவியானவர் அங்கீகரித்து, அவர்கள் அந்நிய பாஷையில் பாடவும், ஜெபிக்கவும் அருள் செய்யலாம். இதை ஆவிக்குரிய தியானம் என்று கூறவேண்டும். அங்கு கூடியிருக்கிறவர்கள் ஆவிக்குரிய வளர்ச்சி, தியானம் இவைகளில் முன்னேற உதவும். இவ்வாறு இவ்வரம் உபயோகிக்கப்படுகிறது. இங்கே நாம் செய்ய வேண்டிய காரியம் ஒன்று உண்டு. விசுவாசிகள் மட்டில் தியானம் பண்ணும்போது, ஆராதனை செய்யும்போது மட்டுமே இவ்வரம் உபயோகமுள்ளதாக இருக்கும். பொதுவான கூட்டங்களில் அல்லது அவிசுவாசிகளும் கலந்திருக்கும் பொழுது இதை உபயோகிக்கக் கூடாது. உங்கள் எல்லாரிலும் நான் அதிகமாய் பாஷைகளைப் பேசுகிறேன். இதற்காய் நான் தேவனை ஸ்தோத்தரிக்கிறேன் என்று பவுல் கூறியுள்ளார். இங்கேவிசுவாசிகளும் இந்த சாட்சி கூறினால் என்ன? அது மிகவும் அருமையாய் இருக்கும்.

### 4. பாஷைகளின் வியாக்கியானம் :

பாஷைகளின் வியாக்கியானம்: இயற்கைக்கு அப்பாற்பட்ட தெய்வீக ஞானம். அந்நிய பாஷைக்குண்டான செய்தி தாய்மொழியில் கூறப்படுகிறது. அந்நிய பாஷையைத் தொடர்ந்து வருகிற ஒரு வரந்தான் வியாக்கியானம். அந்நிய பாஷை இருக்கும் போது இதற்கு இடம் உண்டு. இல்லையெனில், வியாக்கியானம் இல்லை. வியாக்கியானம் வேண்டுமெனில் முதலில் அந்நிய பாஷை தேவை. வியாக்கியானம் செய்து அந்நிய பாஷை உண்டாக இவ்வரமும் முக்கியமானதே. உண்மையில் அந்நிய பாஷை உண்டாகிற இடங்களிலெல்லாம் வியாக்கியானம் அவசியமாக இருக்கிறது.

(தொடரும்)

---

"அவனவன் பெற்ற வரத்தின்படியே நீங்கள் தேவனுடைய பற்பல கிருபையுள்ள ஈவுகளை பகிர்ந்து கொடுக்கும் நல்ல உக்கிராணக்காரர் போல.." I பேது. 4:10.

---

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. சிம்சோன் | S.s. நான்னு சாந்தி | சேலம் | 17. 3. 92. |
| Bro. ஜான் ரவிக்குமார். | Sis. கலையரசி பியூலா | வள்ளியூர் | 24. 3. 92. |

# மனிதன்

(தொடர்ச்சி)

மனித சரீரம் :

மனித சரீரமானது இறைவனால் உருவாக்கப்பட்டது தேவன் பூமியின் மண்ணை எடுத்து, அந்த மண்ணினால் மனிதனுடைய சரீரத்தை உருவாக்கினார். மனிதனுடைய ஆவி சிருஷ்டிக்கப்பட்டது. மனிதனுடைய சரீரமோ உருவாக்கப்பட்டது மனிதனுடைய சரீரம் அதிசய விதமாய் உருவாக்கப்பட்டிருக்கிறது. நான் பிரமிக்கத்தக்க அதிசயமாய் உண்டாக்கப்பட்டபடியால் உம்மைத் துதிப்பேன் (சங். 139:14).

மிருகங்கள், பறவைகள், பிராணிகள், பட்சிகள் இவைகளும் மண்ணினால் உருவாக்கப்பட்டன. ஆனாலும் உலகத்திலுள்ள வேறு எந்த பிராணி அல்லது மாமிசத்திற்கும், மனுஷ மாமிசத்திற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. மனிதனுடைய சரீரம் வித்தியாசமானது. மனிதனுடைய மாம்சம் அலாதியானது (1 கொரி. 15:39)

''எல்லா மாம்சமும் ஒரே விதமான மாம்சமல்ல; மனிதனுடைய மாம்சம் வேறே. மிருகங்களுடைய மாம்சம் வேறே. மச்சங்களுடைய மாம்சம் வேறே. பறவைகளுடைய மாம்சம் வேறே. மனிதனுடைய சரீரத்தை ''மாம்சம்'' என்று சொல்லும் போது இவன் தேவனுக்கு வேறுபட்டவன் என்பதை திட்டமாக அறிகிறோம். தேவனுக்கு ஒரு மாம்ச சரீரம் இல்லை. இவனை மாம்சம் என்று அழைக்கிறதனால் இவன் இறப்பு தன்மையுடையவன் என்பதையும் இது நிரூபிக்கிறது. இவனை மாம்சம் என்று அழைக்கிறதனால் இவன் சுவாசித்துப் பிழைக்க வேண்டியவன் என்பதையும் சுட்டிக் காட்டுகிறது.

மனிதனுடைய சரீரம் இறைவனால் மிக அதிசயவிதமாய் உருவாக்கப்பட்டிருக்கிறது. மனிதனுடைய சரீரத்திலே பலவிதமான இரசாயன சேர்க்கைகள் (Chemicals) காணப்படுகின்றன. இரும்பு, சர்க்கரை, உப்பு, கார்பன், அயோடின், பாஸ்பரம், சுண்ணாம்பு, கால்ஸியம் இன்னும் பலவிதமான இரசாயன சேர்க்கைகள் மனிதனுடைய சரீரத்தில் காணப்படுகின்றன. மனிதனுடைய சரீரத்தில் 263 எலும்புகளும், 600 தசைகளும் (Muscles) 970 மைல் நீளமான இரத்த நாளங்களும், சுவைக்காக ஒரு அங்குலத்திற்கு 400 குப்பிகளும் நாக்கில் காணப்படுகின்றன. 20,000 முடிகள் சத்தத்தைக் கேட்கும்படி அவனுடைய காதுகளிலே அமைக்கப்பட்டிருக்கின்றன. எல்லா சத்தத்தையும் கேட்கும்படியான அமைப்புகள் அவன் காதுகளிலே அமைக்கப்பட்டிருக்கின்றன 20 கிலோ எடையுள்ள அழுத்தம், செல்லும்படியாக அவனுடைய தாடை எலும்புகளில் அடக்கப்பட்டிருக்கிறது. ஒரு கோடி நரம்புகளும் அதனுடைய கிளைகளும் காணப்படுகின்றன. மனிதனுடைய சருமத்தின் ஒவ்வொரு சதுர அங்குலத்திலும் 3,500 வேர்வைத்துவாரங்கள் காணப்படுகின்றன. சரீரத்தினுடைய தோலின் பரப்பளவு அவைகளில் காணப்படுகிறவைகளை விரித்துவைத்தால் 40 மைல் நீளமாகும் 2 கோடி உணவு உறிஞ்சிகள் அவனுடைய வாயிலிருந்து குடல் வரை காணப்படுகின்றன. 60 கோடி காற்று செல்கள் (air cells) அவனுடைய நுரையீரல்களில் அமைந்திருக்கின்றன. 2,400 காலன் காற்றை தினந்தோறும் அவன் உட்கொள்கிறான். டெலிபோன் அமைப்பானது அவனுடைய மூளையில் அமைந்திருக்கிறது. எல்லாவிதமான சத்தங்களைக் கேட்கிறதற்கும் சுவைகளை உணர்வதற்கும், பார்ப்பதற்கும் தொடு உணர்வுக்கும் நுகர் உணர்வுக்குமாக அவனுடைய மூளைக்கும், சரீரத்திற்கும் இடையே டெலிபோன் அமைப்பானது செயல்படுகிறது.

மனிதனுடைய இருதயம் ஒரு மணிநேரத்துக்கு 4 200 முறை துடிக்கிறது.

அவனுடைய இருதயமானது தினமும் 12 டன் இரத்தத்தை இறைக்கிறது.

மனித உடலமைப்பு :

சரீரத்தை தலை, நடுஉடல், கைகால்கள் என்று மூன்று முக்கியமான பிரிவுகளாக பிரிக்கலாம். நடுஉடலில், தேகத்தின் முக்கியமான உறுப்புகளில் பல இருக்கின்றன. இதில் உதரவிதானம் என்கிற மெல்லிய சுவர்போன்றதான சவ்வு இருக்கிறது. அது நடுஉடலை, மேல், கீழ் பாகமாக பிரிக்கிறது. மேற்பகுதிக்கு மார்பு என்றும், கீழ்ப்பகுதிக்கு வயிறு என்றும் பெயர். மார்ப்புக்கூட்டிலே இதயமும், நுரையீரல்களும் இருக்கின்றன. அதன் பின்பக்கத்தில் மூச்சுக்குழலும், நுரைப்பையும், குமாயும் இருக்கின்றன. வயிற்றில் கல்லீரலும், இரைப்பையும், மண்ணீரலும், கணையமும், சிறுகுடலும், பெருங்குடலும் இடம்பெற்றுள்ளன. சிறு நீரகங்கள் இரைப்பைக்கு பின்புறம் அமைந்துள்ளன. உடம்பின் ஒவ்வொரு உறுப்புக்கும் தனித்தனி வேலை உண்டு. பல உறுப்புகள் சேர்ந்து கூட்டாக உழைக்கின்றன.

1. உணவு மண்டலம் :

உணவை ஜீரணம் பண்ண வாய், பல், உணவுக் குழல், இரைபபை, சிறுகுடல், பெருங்குடல், கணையம், இவையெல்லாம் ஒன்று சேர்ந்து உழைக்கின்றன. இவைகளுக்கு ஜீரண உறுப்புகள் என்று பெயர்,

2. மூச்சு மண்டலம் :

மூக்கு, முன் தொண்டை, மூச்சுக்குழல், நுரையீரல்கள் போன்ற இவைகள் சுத்தமான காற்றை உட்கொள்ளவும், கரியமில வாயுவை வெளியேற்றவும் சேர்ந்து உழைக்கின்றன. இதனால் இவைகளுக்கு மூச்சு உறுப்புகள் என்று பெயர்.

3. இரத்த மண்டலம் :

இதயமும், இரத்த நாளங்களும், இரத்தத்தை தேகம் முழுவதும் பரவச் செய்ய சேர்ந்து உழைக்கின்றன. எனவே இவைகள் இரத்த ஓட்ட உறுப்புகள் என்றழைக்கப்படுகின்றன.

4. கழிவு மண்டலம் :

சிறுநீரகங்களும், சருமமும், நுரையீரல்களும், கல்லீரலும், பெருங்குடலும் உடலிலுள்ள கழிவுப் பொருட்களை வெளியேற்றுகின்றன. எனவே, இவைகள் கழிவு உறுப்புகள் எனப்படுகின்றன.

5. மூளையும், தண்டுவடமும், பெரு நரம்புகளும், சிறு நரம்புகளும் பிற உறுப்புகளை ஆளவும், அடக்கவும், ஒத்துழைக்கின்றன.

6. சட்டம் :

இவற்றைத் தவிர சட்டம் போல் இருந்து உடம்புக்கு வடிவம் [Structure] தருகின்ற எலும்புகளும், உடம்பின் எல்லாப் பாகங்களையும் இயக்குகின்ற தசைகளும் இருக்கின்றன.

உயிரைக்காட்டிலும் ஆவியைக் காட்டிலும் சரீரத்தை இயக்குகிற அந்த ரங்க சக்தி ஒன்று இறைவனால் அருளப்பட்டிருக்கிறது. இது சரீரத்தை இயக்குகிறது. இந்த சரீரத்தைப் பற்றி பலர் பலவிதமாக அபிப்பிராயங்கள் சொன்ன போதிலும், இறைவேதத்தில் எழுதியிருக்கிற தெய்விக இரகசியங்களும், உண்மைகளும் சரியாய் இருக்கின்றன. மனிதனுடைய சரீரத்தை மனிதன் சரியான, சமசீரான உணவு கொடுத்து, அதற்குப் பயிற்சி கொடுத்து அதனுடைய எல்லாப் பாகங்களும் இயங்கவேண்டிய ஊட்டம் கிடைக்கச் செய்து பாதுகாத்து வந்தால், அது பூரண ஆரோக்கியத்தோடு கூட இருக்கும். அவ்விதமான சரீரம் கவர்ச்சியுடையதாக, வல்லமையுடையதாகக் காணப்படும்.

மனிதனுடைய சரீரத்துக்குள் பலவிதமான சுரப்பிகள் இருக்கின்றன. இவைகள் வெட்டி, சோதித்துக் கண்டுபிடிக்கமுடியாதவை. அங்காங்கிருந்து இந்த சுரப்பிகள்

விசேஷித்த இரசாயன கலவையை வெளியிடுகின்றன. இவைகள் சரீரத்தின் முக்கியமான வேலைகளை கவனிக்க உதவியாக இருக்கும். தலையின் முக்கிய பாகத்திலே பிட்யூட்டரி (Pituitary gland) என்றும், அதன் கீழே பினியல் சுரப்பி (Pineal gland) என்றும் இரண்டு சிறிய சுரப்பிகள் உண்டு. இந்த பிட்யூட்டரி சுரப்பியானது ஒரு பட்டாணி அளவே இருந்தபோதும் இது ராஜ கோளமாகும். இது தான் மூளையையும், முழுச்சரீரத்தையும் ஆளுகை செய்கிறது. பினியல் சுரப்பியானது பிரதம மந்திரி போல இருந்து பிட்யூட்டரி சுரப்பிக்கு உதவி செய்கிறது. கழுத்தின் பகுதியில் தைராய்டு (Thyroid) என்ற சுரப்பி இருக்கிறது. இந்தச் சுரப்பியானது சரீரத்தின் ஆரோக்கியத்தை ஆளும் வல்லமையுடையதாகும். இதிலிருந்து தைராக்ஸின் (Thyroxine) எனப்பட்ட இரசம் சுரக்கிறது. இடுப்புப்பகுதிக்கு மேலே சிறுநீரகத்தின் முன்பகுதியில் அட்ரீனல் (Adrenal) என்ற கோளம் இருக்கிறது. இதிலிருந்து புறப்படுகிற அட்ரீனலின் (Adrenaline) என்ற இரசமானது இருதயத்தை நடத்தக் கூடியதாகும். மனிதனுடைய சரீரத்தில், கணையம் (Pancreas) என்ற சுரப்பியிலிருந்து சுரக்கிற இன்சுலின் (Insulin) தான் ஆகாரத்திலுள்ள சர்க்கரையை குளுக்கோஸாக (Glucose) மாற்றி அதை இரத்தத்தோடு கலக்கச்செய்து மனிதனுக்கு எரிசக்தியைக் கொடுக்க உதவி செய்கிறது. இவ்விதமாக கல்லீரலும் ஒரு பெரிய சுரப்பியே. இரப்பையும் ஒரு சுரப்பியே. இவ்விதமாக, மனிதன் கண்டு பிடிக்க முடியாத இரகசிய சுரப்பிகள் மனிதனுடைய சரீரத்தில் இருக்கின்றன. இவைகளில் ஏதாவது ஒன்று பழுது பட்டாலோ அல்லது இவைகள் சரியாய் இயங்கவில்லையென்றாலோ அல்லது இவைகள் மிகைப் பட இயங்கினாலோ மனிதனுக்குச் சரீரப் பிரகாரமாகவும், குணாதிசயபிரகாரமாகவும் பாதிப்புகள் உண்டாகும். எனவே, மனிதனுடைய சரீரம் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக சிருஷ்டித்த மகத்துவமான இறைவனுடைய அதிசய சிருஷ்டிப்பாகும், இயந்திரமாகும். இதைப் போலொத்த ஒரு இயந்திரத்தை மனிதன் ஒருபோதும் உண்டாக்க முடியாது. அவர் கோணலாக்கினதை நேராக்கத்தக்கவன் யார்? (பிர.7:13). இந்த மகத்துவமான சரீரத்திற்குள்ளே தான் ஆவியும், ஆத்துமாவும் வாழ்கின்றது. அவனுடைய ஆவி அவனை விட்டு பிரியுமானால் சரீரம் ஒன்றுக்கும் உதவாது, அழுகி நாறிப்போம். அப்பொழுது அதற்குச் சவம் (பிரேதம்) என்று பெயர்.

(தொடரும்)

---

"அவனை தேவதூதரிலும் சற்றுச் சிறியவனாக்கினீர்; மகிமையினாலும் கனத்தினாலும் அவனுக்கு முடிசூட்டி..." எபி. 2:7.

---

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

எண்ணாகமம் கிறிஸ்தவ வேதாகமத்தில் நான்காவது புத்தகமாகும். எண்ணாகமத்தில் எண்களை அதிகமாகப் பார்க்கலாம். இஸ்ரவேல் புத்திரரில் இருபது வயதுக்கு மேற்பட்ட யுத்தத்துக்குப் புறப்படத்தக்கதான ஆண்களின் எண்ணிக்கை எண்ணாகம புஸ்தகத்தில் எழுதப்பட்டுள்ளன. எண்ணாகமத்தில் இரண்டு தடவை இஸ்ரவேல் புத்திரர்களை எண்ணின சம்பவம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு தடவை எண்ணிக்கைக்கு இடையில் முப்பத்தெட்டு வருஷ சரித்திரம் அடக்கப்பட்டிருக்கிறது. எண்ணாகம புஸ்தகம் கிட்டத்தட்ட முப்பத்தெட்டு வருஷ சரித்திரத்தை தனக்குள் அடக்கியிருக்கிறது.

எண்ணாகமம் : எழுதியவர் மோசே, இஸ்ரவேலின் தலைவர்.
இடம் : எரிகோவின் அருகே யோர்தானுக்கு சமீபமான மோவாபின் சமனான வெளி [எண். 36:13].

காலம் : கி. மு. 1444–1405. கிட்டத்தட்ட முப்பத்தெட்டு வருஷ சரித்திரத்தைக் கொண்டுள்ளது. லேவியராகம புஸ்தகம் ஒரு மாதத்தை மாத்திரம் தனக்குள் அடக்கியுள்ளது. ஆனால், எண்ணாகமமோ முப்பத்தெட்டு வருஷத்தைத் தனக்குள் அடக்கி கொண்டுள்ளது.

முக்கியமான வசனங்கள் : எண். 14:22, 23; 20:12.

முக்கியமான அதிகாரம் : எண். 14.

எண்ணாகமத்தில் கிறிஸ்து : மரத்தில் தூக்கப்பட்ட கிறிஸ்து எண். 21:4–9; யோ.3:14.

ஞானக் கன்மலையின் தண்ணீர் : எண். 20. ம் அதிகாரம்; I கொரி. 10:4

மன்னா : எண். 11:6–9; யோ.6:31–33.

அடைக்கலப்பட்டணங்கள் : எண். 3

சிவப்புக் கடாரியின் சாம்பல் : எண். 19–ம் அதிகாரம்; எபி. 9:13.

புதிய ஏற்பாட்டில் எண்ணாகமம் : யோ. 3:14; அப். 7, 13–ம் அதிகாரங்கள். I கொரி.– 10:1–11; எபி. 3, 9, 4–ம் அதிகாரங்கள், யூதா வச. 11 ஆகிய இடங்களில் காணப்படுகிறது.

நோக்கம் : இரண்டு தடவை இஸ்ரவேல் புத்திரர்கள் எண்ணப்பட்டார்கள். முதல் தடவை எண்ணப்பட்டவர்களில் இரண்டு பேர்கள் தவிர மற்றவர்கள் எல்லாரும் அழிக்கப்பட்டார்கள். இரண்டாம் தடவை எண்ணப்பட்ட பொழுது [Census] புதிய தலைமுறையே காணப்பட்டது.

எண்ணாகமத்தில் 36 அதிகாரங்களும், 1,288 வசனங்களும், 32,902 வார்த்தைகளும், 59 கேள்விகளும், 42 வசனங்களில் தீர்க்கதரிசன நிறைவேறுதலும், 72 வெவ்வேறு தெய்வீக செய்திகளும் உள்ளது. 554 கட்டளைகள், 5 வாக்குத்தத்தங்கள், 79 முன்னறிவிப்புகள் இதில் அடங்கியிருக்கின்றன.

எண்கள் :

1. ஏகத்துவம் அபினமான தன்மையைக் குறிக்கும் [உபா. 6:4; எபே. 4:5].

2. மூன்று என்கிற எண். இது முழுமையைக் குறிக்கிறது. தாவீதுக்கு கர்த்தர் நிபந்தனை போட்டபோது மூன்று வருஷ பஞ்சமோ, மூன்றுமாத சங்காரமோ, மூன்று நாள் கொள்ளை நோயோ இதில் ஒன்றை தெரிந்து கொள் என்று சொன்னார் I நாளா .21:12. தமஸ்குவின் மூன்று பாதகங்களினிமித்தம் அதை நான் தண்டிக்க மாட்டேன் என்று ஆமோ. 1:3; 2:1. மூன்று மேய்ப்பர்களைக் குறித்து சக. 11:8 ல் வாசிக்கிறோம். மூன்று புருஷர்களைக் குறித்து தானி. 3·23 ல் வாசிக்கிறோம். மூன்று வேளை ஜெபம் தானி.6:13 ல்

வருகிறது. மூன்று நாள் இரவு பகல் இயேசுவானவர் கல்லறையில் தாம் அடக்கம் பண்ணப்பட்டிருப்போம் என்பதைத் தெரிவித்தார் [மத். 12:46]. திரியேகத்துவம் என்பது மூன்று ஒன்றாய் இருப்பது [I யோ. 5:7, 8].

**3. எண் 7.** கடவுளுக்குப் பிரியமாயிருப்பதையும், பரிசுத்தம் என்பதையும் குறிப்பிடும். கடவுள் தம்முடைய கிரியைகளை முடித்து ஏழாம் நாளில் ஓய்ந்திருந்தார். ஒரு வாரத்திற்கு ஏழுநாட்களுண்டு. ஏழாம் வருஷம் ஓய்வு வருஷம். ஏழுநாள் கர்த்தர் காத்திருந்து பின்பு ஜலப்பிரளயம் வரவிட்டார். ஏழு, ஏழு சுத்தமான மிருகங்கள், பறவைகள் பேழைக்குட்பட்டன. ஏழுவருஷம் யாக்கோபு ராகேலுக்காக ஊழியஞ் செய்தார். ஏழு நாள் புளிப்பில்லாத அப்பப்பண்டிகை கொண்டாட வேண்டும். ஏழு நாள் கூடாரப்பண்டிகை கொண்டாட வேண்டும். பொன் குத்து விளக்கில் ஏழு அகல்கள் காணப்படவேண்டும். எரிகோவை சுற்றி ஏழு நாள் வந்து ஆர்ப்பரிக்கவேண்டும். புதிய ஏற்பாட்டில் சபையைக் குறித்து ஏழு குத்துவிளக்குகள் என்றும், ஏழு ஆவிகள் என்றும், ஏழு முத்திரை என்றும், ஏழு எக்காளங்கள் என்றும், ஏழு இடிமுழக்கங்கள் என்றும், ஏழு கோபக் கலசங்கள் என்றும், ஏழு வாதைகள் என்றும், ஏழு தூதர்கள் என்றும், அந்தி கிறிஸ்துவுக்கு ஏழு தலைகள் உண்டென்றும், காணப்படுகிறது.

**4. எண் 40.** நாற்பது என்றால், அநேகம் என்று அர்த்தம். இஸ்ரவேலர்கள் நாற்பது வருஷம் வனாந்தரபிரயாணம் செய்தார்கள். 40 வருஷம் அவர்களுக்கு மன்னா பொழியப்பட்டது. 40 வருஷங்கள் மோசே வனாந்தரத்தில் இருந்தார். 40 வருஷங்கள் மோசே அரண்மனையில் வசித்தார். 40 வருஷங்கள் மீதியான் என்னும் அந்நிய தேசத்தில் வசித்தார். 40 நாட்கள் மோசே இரண்டு முறை உபவாசித்தார். 40 வருஷம் எகிப்து பாழாயிருக்கும் [எசே. 29:11]. 40 இராப்பகல் [40 நாட்கள்] எலியா பிரயாணம் பண்ணினார் [I இரா. 19:8]

எண்ணாகமத்தில் இஸ்ரவேலர்கள் பிரயாணம் பண்ணும் விதம், ஆசரிப்புக் கூடாரம் அமைத்தல், பாளயமிறங்கும் விதம், வனாந்தரப் பிரயாணத்தில் எவ்விதமாகப் புறப்பட்டுச் செல்ல வேண்டும் எவ்விதமாகப் பாளயம் இறங்கவேண்டும், லேவியர், ஆசாரியர்களுடைய வேலைகள் இன்னும் வனாந்தரத்தில் நடந்த முக்கியமான சம்பவங்கள், யுத்தங்கள், அதற்கான ஆயத்தங்கள், வாக்குத்தத்த தேசத்தில் வாழ்வதற்கான ஆயத்தங்கள் போன்றவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. எண்ணாகமப் புஸ்தகத்தை வாசிக்கும் பொழுது எண்களாக காணப்படுவதினால் வாசிக்கிறதற்கு மனமில்லாதிருந்தாலும் மிகவும் கருத்தாய் எண்ணாகமத்தை வாசித்து தியானிக்கவேண்டும். இஸ்ரவேலரின் வாழ்க்கையில் நிகழ்ந்த முக்கியமான சம்பவமும், தேவனுடைய நடபடிகளும் இதிலே குறிப்பிடப்பட்டுள்ளது.

[தொடரும்]

# உயிர்த்தெழுந்த இயேசு கிறிஸ்து

நாங்கள் அதற்கு சாட்சிகள் அப். 3:15.

கிறிஸ்தவம் கண் கண்ட சாட்சிகளால் ஆனது. அது உயிருள்ள, உயிரோடுள்ள சாட்சிகளால் ஆனது. செத்த மனிதர்களைக் குறித்து செத்த மனிதர்கள் சொன்னதை ஆதாரமாக கொண்டதல்ல கிறிஸ்தவம். மனிதர்கள் ஒரு நீதி போதனையைச் செய்யும்படி ஒரு நாடகம் நடிப்பார்கள். ஒரு கதை, நாடகம் எழுதுவார்கள். அது உண்மையில் அப்படி நடந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. அவர்கள் சொல்லுகிற ஒரு ஆள் இருந்திருக்க மாட்டார். அதுதான் கதை. அப்படிக் கொத்த தந்திரமானக் கட்டுக் கதைகளை நாங்கள் பின்பற்றினவர்களல்ல என்று பேதுருவும், ( 2 பேது. 1: 16-18) ஆரம்ப முதல் கண்ணாரக் கண்டவர்கள் சொன்னவைகளைக் கருத்தாய் ஆராய்ச்சிப் பண்ணி ஆரம்ப முதல் கிரமமாய் எழுதுகிறேன் என்று லூக்காவும் (லூக். 1: 1-4) எழுதுகிறதைக் காணலாம். இயேசு கிறிஸ்து மரித்தோரிலிருந்து உயிரோடெழுந்தார். மரணம் பாவத்தினிமித்தம் மனிதஜாதியைப் பிடித்திருக்கிற சாபமாகும். "செத்த சிங்கத்தைப் பார்க்கிலும் உயிருள்ள நாய் வாசி" (பிர.9:4). உயிரோடிருக்கிற அனைவரிடத்திலும் நம்பிக்கையுண்டு, உயிர் வெகு அருமையானது. உயிருள்ளவர்கள், உயிருள்ளவர்களே இறைவனை ஸ்துதிக்கமுடியும். மரித்தவர்கள் மவுனத்தில் இரங்குகிற அனைவரும் கர்த்தரைத் துதியார்கள் [சங். 115:17]. சில மதங்களில் மரியாமலிருக்க வரம் பெற்றதாக சிரஞ்சீவி என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள், அது பொய். அவர்கள் மரித்துப்போனார்கள். அவர்களுடைய சரீரம் அழிந்துபோய்விட்டது. அவர்கள் இல்லை. சிலர் படுக்கிருந்து, உண்ணு நோன்பிருந்து தற்கொலை செய்து கொள்கிறார்கள். அவ்விதமாய் செய்வதோ, சமாதியில் இருந்து இறந்து போவதோ தற்கொலையாகும். இப்படி மரித்தவர்கள் எல்லாம் நரகத்தில் தள்ளப்பட்டுள்ளார்கள். "கொலை செய்யாதிருப்பாயாக" என்று இறைவன் கட்டளையிட்டுள்ளார். தன்னுயிரைக் காலத்துக்கு முன் வலுக்கட்டாயமாய்ப் போக்குவதும் கொலையே (தற்கொலை), இவர்கள் உடனே பேய்க் கூட்டத்தில் சேர்க்கப்படுகிறார்கள். சில மக்கள், தெய்வம் என்று கும்பிடுகிறவைகளெல்லாம் இவ்வுலகில் பிறந்து, மரித்து, அழிந்துபோன மனிதர்களே. சிலர், துஷ்டனம் செய்ததினால் வெட்டிக் கொலை செய்யப்பட்டவர்கள். சிலர் ராஜாக்களாக இருந்து சிறிதோ, பெரிதோ காரியங்கள் செய்து இறந்துபோனவர்கள். அநேகர் மந்திரவாதிகள், அநேகர் சாபத்தினால் பிறந்து செத்தவர்கள், ஏனென்றால் அவர்கள் மரித்தார்கள், அவர்களுடைய சரீரங்கள் அழிந்துபோயின, அவர்கள் உயிரோடு இல்லை.

இயேசு கிறிஸ்துவோ அப்படிப்பட்டவரல்ல. தமக்கு நேரிடப் போகிறவைகளை அவர் முன் கூட்டியே அறிவித்தார். தன்னைப் பிடித்து சிலுவையில் அறைவார்கள், கொலை செய்வார்கள். ஆனாலும், நான் மூன்றாம் நாளில் உயிரோடெழுந்திருப்பேன் என்றார் (மத். 20:17-19;மத்.16:21). உலகில் வேறெவரும் அப்படிச் சொல்லவில்லை. அவர்கள் உயிரோடு எழும்பவும் இல்லை. வேறொரு பிறவியாகவும் இல்லை. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கி. பி. 33-ம் வருஷம் தன்னுடைய 33 1/2 வயதில் மரித்து அடக்கம் பண்ணப்பட்டார். மூன்றும் நாள் கல்லறையை விட்டு உயிரோடெழுந்தார். மரணத்தை ஜெயித்தெழுந்தார். அல்லேலூயா! உயிர்த்தெழுந்தார், அல்லேலூயா!! உயிருள்ள, உண்மையான தெய்வமும் இரட்சகரும் அவரே. அதற்கு நாங்கள் சாட்சிகள் (அப். 2:32). உயிர்த்

தெழுந்த கர்த்தர் கொடுத்த பிரத்தியட்ச மான தரிசனங்கள் அநேகம். அவைகளில் சில பின் வருமாறு:-

1. மகதலேனா மரியாளுக்கு (மாற்.16:9 யோ. 20:15,16).

2. கல்லறையை விட்டு சீஷர்களுக்கு செய்தி அறிவிக்க ஓடின ஸ்திரீகளுக்கு (மத்.28:9).

3. எம்மாவு ஊருக்குப் போன இரண்டு சீஷர்களுக்கு (லூக். 24:13 31).

4. அப். பேதுருவுக்கு (லூக்.24:34; I கொரி. 15:5)

5. பத்து அப்போஸ்தலர்களுக்கு (யோ. 20:19).

6. பதினொரு அப்போஸ்தலர்களுக்கு யோ. 20:26).

7. ஏழு அப்போஸ்தலர்களுக்கு (யோ. 21:1-22 ). இது இரண்டாவது ஞாயிற் றுக் கிழமைக்குப் பின் நடந்தது.

8. பதினொரு அப்போஸ்தலர்களுக்கு கலிலேயா மலையில் (மத். 28: 16).

9. பன்னிரண்டு அப்போஸ்தலர்க ளுக்கு [மத்தியா உட்பட]. [ Iகொரி. 15:5 அப். 1:26).

10. ஐநூறு சகோதரர்களுக்கு [ I கொ. 15:6].

11. கர்த்தருடைய சகோதரராகிய யாக்கோபுக்கு [ I கொரி. 15:7; கலா. 1: 19].

12. எல்லா அப்போஸ்தலர்களுக்கும் [ I கொரி. 15:7; மாற். 16:19,20; லூக். 24:50, 53; அப். 1:3-12,26].

13. வெகு காலங்களுக்குப் பின் அப். பவுலுக்கு [ I கொரி. 15:8].

இன்னும் அநேகருக்கும் தரிசனமானார். இப்பொழுதும் தெரிந்து கொள்ளப்பட்ட வர்களுக்கு தரிசனமாகிறார், தரிசனமாவார். கிறிஸ்தவத்தின் உயிர்நாடி இயேசு கிறிஸ் துவே. கிறிஸ்தவத்தை அழித்துப் போட எத்தனையோ ராஜாக்களும், ராஜ்யங்களும், பொல்லாத மனிதர்களும், கூட்டங்களும், அரசாங்கங்களும் எழும்பின. முயற்சித்தன, முயற்சிக்கலாம். ஆனால், முடியாமல் போயி ற்று கிறிஸ்தவத்தை ஒருவரும் ஒன்றும்செய்ய முடியாது. காரணம் உயிருள்ள கிறிஸ்து வின் உயிர்த்தெழுதலின் வல்லமையே அது. கிறிஸ்தவம் உலகத்தில் வேகமாய்ப் பரவுவதற்குக் காரணம் உயிரோடுள்ள தெய்வமே. அவர் உயிரோடிருக்கிறபடி யால் கிறிஸ்தவத்துக்கும் உயிருண்டு. அது வளரும். அது பெருகும், அது பூரண நிறைவடையும், அது உலகத்தை ஆளுகை செய்யும், அதில் சேர்ந்து அதைப்பற்றிக் கொள்ளுகிற யாவரும் பாக்கியவான்கள் [பாக்கியவதிகள்].

இயேசு கிறிஸ்து உயிரோடு இருக்கிறார். இதற்கு நாங்கள் சாட்சிகள். நாங்கள் இயேசு கிறிஸ்துவுக்கு சாட்சிகள் [அப்.1:8]. உயிர்த்தெழுந்த கர்த்தர் உன்னை சந்திக்க உயிர்த்தெழுந்த கர்த்தரின் வல்லமை உன்னைத் தொட நீயும் இயேசுவை வேண்டிக் கொள். அவருடைய வல்லமை யினால் பாவத்திலிருந்து விடுதலையாவாய். உன் நோய் குணமாகும். உனக்கு இருக் கிற துன்பம், துக்கம், நெருக்கடி இவை களிலிருந்து நீ விடுதலையாவாய். உன்னு டைய வாழ்க்கை உயிர்ப்பிக்கப்படும். உயிருள்ளவர் உனக்கு உதவி செய்வார். ஆமென்!

---

"...அவர் அநேகநாள் தரிசனமானார்; அவர்களே ஜனங்களுக்கு முன்பாக அவருக்கு சாட்சிகளாயிருக்கிறார்கள்."

அப். 13:31.

---

# குடும்பம் (தொடர்ச்சி)

## குழந்தை வளர்ப்பு

சிலப் பெண்கள் தங்கள் முதல் குழந்தையைப் பெறும் பொழுது தாய் வீட்டுக்குப் போகிறார்கள். குடும்ப வழக்கத்திலிருக்கிற ஒரு மாமூல் இது. பிள்ளை பிறக்கும் நேரம் வரும்பொது கணவன் விவாகத்தில் அடைந்துள்ள பூரண உத்திரவாதத்தையும் சந்தோஷத்தையும் நினைக்க வேண்டும். கலியாண சம்பந்தத்தில் ஆண் கொடுக்க வேண்டிய திட்டமான ஆலோசனைகளையெல்லாம் கொடுத்து பணத்தைத் தாராளமாய்ச் செலவளித்து மனைவியை வைத்திய சாலைக்கோ அல்லது வீட்டிற்கோ அனுப்புகிறதற்கு செய்ய வேண்டிய ஒழுங்குகளிலெல்லாம் மனைவிக்கு உதவிபுரிய வேண்டும். அவள் வைத்தியச்சாலைக்குப் போகிறதாயிருந்தால் அதில் அடங்கிய எல்லாக் கஷ்டங்களையும் தன்மேல் போட்டுக் கொள்ள வேண்டும். மனைவியின் தாயோ அல்லது நர்ஸோ தன் வீட்டில் வந்திருந்து உதவி செய்ய நேரிட்டால் தன் சொந்த வீட்டில் மரியாதை, அனுதாபமுள்ள உபசரிப்பு அவர்களுக்கு அளிக்கவேண்டும். தன் மனைவிக்கு உதவி செய்ய வந்திருக்கிறவர்களின் தேவையை முதலில் வைத்துக் கவனிக்க வேண்டும். மாறுதலை விரும்பாத கணவன் புதியவர்களைக் குறித்து மாறுதல் தேவையானதால் புதிய சந்தர்ப்பத்துக்குத் தக்கதாக தன்னை சரிப்படுத்திக் கொண்டு தகப்பனைப் போல் நடந்து கொள்ள வேண்டும். முதல் குழந்தையைப் பற்றி ஆவலோடு எதிர்பார்க்க வேண்டிய விஷயம் அது ஆணா பெண்ணா என்பது. ஒருவரும் நிச்சயத்தோடு முன்னதாகவே ஆண் குழந்தை அல்லது பெண் குழந்தை பிறக்கப் போகிறது என்று சொல்லக் கூடாது. அப்படிச் சொல்லிவிடுவோம் என்று சொல்லுகிறவர்களை நம்பவும் வேண்டாம். சில தேவனுடைய மனிதர்கள் கணித்து சொல்லுகிறது சரியாயிருக்கும், ஆனால் அநேகமாக தேவ மனிதர்கள் ஆண் குழந்தை பிறக்கப் போகிறது பெண் குழந்தை பிறக்கப் போகிறது என்று சொல்லிக் கொண்டிருக்கமாட்டார்கள். குழந்தை பிறக்கப் போகிறது என்று சொல்வார்கள், பெற்றோர்கள் தங்களுக்கு ஆண் குழந்தை அல்லது பெண் குழந்தை பிறக்கப் போகிறது என்று எதிர்பார்த்து, அதற்கு மாறான குழந்தை பிறந்தால் அதிகமாய் ஏமாற்றமடைவது, அந்தக் குழந்தையின் குணத்துக்கு பங்கமுண்டாக்குவதாகும். தங்களுடைய பெற்றோர்கள் தாங்கள் எதிர்பார்த்தபடி நாம் பிறக்காததால் அதிகமாய் ஏமாந்து போனார்கள் என்ற உணர்ச்சி அப்படிப்பட்ட குழந்தைகள் தங்கள் ஜீவியத்தை பரிதாபமான ஏமாற்றத்தோடு ஆரம்பிக்க காரணமாகி விடும். இவ்விதமாய் தங்கள் குழந்தை ஜீவியத்தை ஆரம்பிக்க வேண்டுமென்றே சுய நலத்தோடு செய்கிறவர்கள் தங்களுக்கும் தங்கள் பிள்ளைகளுக்கும் ஜீவிய காலமெல்லாம் மனதிற்குரிய கஷ்டத்தை சம்பாதித்து வைத்தவர்களாவார்கள்.

இக்காலம் பெண்களின் விடுதலைக் காலம். இக்காலத்தில் எல்லா தேசங்களிலும், ராஜ்யங்களிலும், படிப்பிலும், வைத்தியத்திலும் பெண்கள் மேலான உத்திரவாதமான உத்தியோகங்களை நிர்வகிக்கிறார்கள். குழந்தை ஆணோ பெண்ணோ தேவனால் அனுப்பப்பட்டதாக ஏற்றுக்கொள்ளப்பட்டு நேசிக்கப்பட வேண்டும். தங்களுக்குப் பிறக்கப் போகும் குழந்தை ஆணோ பெண்ணோ அதற்குப் பலப் பெயர்களை வைத்திருப்பார்கள். இவ்விதமாய் ஆயத்தமாய் இருப்பதை அவர்கள் நம்பினார்கள். ஆகவே இந்தப் பெயர்களை அர்த்தத்தோடு தெரிந்து கொண்டார்கள். பூரண ஆயத்தத்தோடு தனக்காகக் காத்திருந்த சிறு வீட்டுக்குள் தேவனுடைய ஈவாகிய புதிய ஜீவன் பிரவேசிக்க நாள் வந்தது. கடைசி

சமயத்தில் பெண்கள் வீட்டிலே இருக்க விரும்புவார்கள். அது நல்லது. நம்பிக்கையோடு சந்தோஷத்தோடு பிரசவிக்கும் நேரத்துக்குள் பெண்கள் பிரவேசிக்க வேண்டும். பெரும்பான்மையான கணவர்களைப் போல தன் மனைவி அடையப்போகும் வேதனையைப் பற்றி அதிகக் கவலையுள்ளவனாய் கணவன் அடிக்கடி தேவனிடத்தில் ஜெபம் பண்ணவேண்டும். குழந்தை பிறந்ததும் அவளுக்காகக் கரிசனை கொண்டு ஆவலோடு தன் பூரணசிசுவை பார்ப்பதும் கணவனுக்கு காண்பிப்பதும் மனைவிக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும். தனக்கும் தன் கணவனுக்குமுள்ள ஐக்கியத்தின் உயிருள்ள அடையாளமும், தன் கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் சேர்க்கும் இணைப்பும் தொடர்ந்து செல்லும் ஜீவியத்தின் அடையாளமுமாக அந்தச் சிறிய சிசு அங்கே பிறந்துள்ளது.

சுகப்பிரசவத்துக்கு ஏற்கெனவே குருக்கள் மூலமாய் முறையாக ஜெபித்து எண்ணெய் பூசி, ஜெபித்து, ஜெப எண்ணெய் உட்கொண்டிருக்க வேண்டும். தேவனுடைய ஆசீர்வாதமும், பாதுகாப்பும், சித்தமும் இதிலே நிகழ்கிறது. தேவன் தன்னுடைய அற்புத செயலை காண்பிக்கிறார். இரண்டு பேர்களும் [கணவனும் மனைவியும்] சேர்ந்து புதிதாக பிறந்த ஒரு ஜீவன் மேல் அன்புகாட்டத் தொடங்குகிறார்கள். இது அன்பின் ஒருபடி வளர்ச்சியாகும்.

குழந்தைகளை பராமரித்தல் :

ஆறுமாதம் முடிவதற்குள் குழந்தைக்கு அம்மை குத்துதல், போலியோ (Polio) குத்துதல் போன்ற காரியங்களை கண்டிப்பாக செய்துவிடவேண்டும். முதல் சில வாரங்களுக்கு, ஆரோக்கியமான குழந்தை பெரும்பொழுது தூங்கும் அதற்கு வசதியாக படுக்கை இருத்தல் வேண்டும். பிரப்பந் தொட்டில் குழந்தைக்கு அழகான படுக்கை, தூங்கும் குழந்தையின் முகத்திலும் கண்ணிலும் ஈக்கள் வந்து மொய்க்காத படி கொசுவலை கட்டியாவது பாதுகாக்கவேண்டும். ஈக்கள் கண்வலியையும், கொப்புளங்களையும் பிறப்பிக்கின்றன; இவைகள் வயிற்றுப் போக்கையும் பிறப்பிப்பதுண்டு. உறங்கும் போது, குழந்தையின் முகத்தை போர்வையால் மூடிவிடக் கூடாது. அதற்கு சுத்தமான காற்று நிறைய வேண்டும். எனவே அதைச்சுற்றித் திரைகள் கட்டி காற்றைத் தடுக்கலாகாது. மாறாக, ஜன்னல்களைத் திறந்து வைக்க வேண்டும். இல்லையெனில், வெயில் படாத இடத்தில் தொட்டிலைக்கட்டி குழந்தையை ஒரு வலையைக் கொண்டு பாதுகாக்கலாம். அடிக்கடி குழந்தைக்குத் தண்ணீர் கொடுத்து தொண்டை வறட்சி ஏற்படாதபடி பார்க்க வேண்டும். சின்னக் குழந்தையை தினமும் குளிப்பாட்டி சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். குளிப்பாட்டும் தண்ணீர் வெது வெதுப்பாக இருக்க வேண்டும். குளிப்பாட்டி முடிக்கும் தருணத்தில் சற்றே குளிர்ச்சியான தண்ணீரை ஊற்ற வேண்டும். இப்படி செய்வதினால் சருமத் துவாரங்கள் சிறுத்து குழந்தைக்கு ஜலதோஷம் பிடிக்காமல் இருக்கும். நீரின் சூட்டை தாய்மார்கள் தங்கள் முழங்கையைவைத்து அறியலாம். அவள் கைக்கு அந்த நீர் இதமாக இருக்க வேண்டும். இதுபோன்றே, குளிர்ந்த தண்ணீர் ஊற்றும்போது அதனுடைய நிலையும் அறிந்து கொள்ள வேண்டும். குழந்தை நடுங்கும் அளவுக்குத் தண்ணீர் குளிர்ச்சியாக இருக்க கூடாது. குழந்தையை வெறும் தரையில் விடலாகாது. விட்டால் வெவ்வேறு வகையான பாக்டீரியாக்கள், புழுக்கள், போன்றவற்றின் தொற்று ஏற்பட ஏதுவாகும். அழுக்காய்ப் போன பிஞ்சுக்கரங்கள் பாக்டீரியாவைக் கடத்தும். அதனால் வயிற்றுப் போக்குப் போன்ற நோய்கள் வரும். தரையிலுள்ள அமீபா பூச்சியும், கொக்கிப் புழுவும், நேராக குழந்தையின் சருமத்தைத் துளைத்துக்கொண்டு புகுந்துவிடும். பாயை விரித்து அதில் குழந்தையை விட்டு வைப்பதே சிரேஷ்டம். கொஞ்சம் வளர்ந்து விட்டாலும் சதா அதைக் கவனிக்கத்தான்

வேண்டும். இல்லையேல், தரையில் உள்ள உயிர்ப்புழுக்களால் குழந்தைக்கு தொற்று நோய் ஏற்படலாம். இடுப்பைச்சுற்றிக் கட்ட தூய துணிகளைப் பயன்படுத்தல் வேண்டும் அழுக்கான துணிகள் துர்க்கந்தம் வீசுவதுடன், குழந்தையின் ஜனனேந்திரிய இடத்தில் உறுத்தலை உண்டாக்கும். இந்தத் துணிகள் சிலவற்றில் அம்மோனியம் வாசனை அடிப்பதுண்டு. இதற்குக் காரணம் பாக்டீரியாதான். சோப்பு போட்டுக் கழுவினால் இது போய்விடும். கழுவி விட்டு கொதிநீரில் போடுவதும் நல்லது. இந்த வாசனையை நீக்கி விட்ட பிற்பாடு அதிக சிரமப்பட்டுக் கழுவத் தேவையில்லை. ஆண்குழந்தையாயிருக்கட்டும், பெண்குழந்தையாயிருக்கட்டும் இடுப்பில் துணியில்லாமல் ஒரு போதும் பிள்ளைகளை விடக்கூடாது. குழந்தைகளுடைய ஜனன உறுப்பைக் கழுவி மிகவும் சுத்தமாக வைத்திருக்கவேண்டும் அதில் உறுத்தல் உண்டாகி பிள்ளைகளுடைய கைகள் அங்கு போகாதபடிகவனித்துக் கொள்ள வேண்டும்.

குழந்தைக்கு ஏற்ற சிறந்த உணவு தாய்ப்பால் தான். ஆனால், அந்தத்தாய் ஆரோக்கியமுள்ளவளாய் இருக்கவேண்டும். தாய் ஆரோக்கியமாய் இருக்க, வேண்டிய அளவு ஓய்வு கொள்ள வேண்டும், நிறைய தண்ணீர் பருக வேண்டும். தினந்தோறும் திறந்த வெளியில் உடற்பயிற்சி செய்ய வேண்டும். தீட்டாத தானியங்கள், காய்கறிகள், நல்ல பழங்கள், பால் இவைகள் கொண்ட சீரான சுத்தமான உணவு உட்கொள்ளவேண்டும். தரமான புரோடீன்கள் முழு அளவு பெறுவதற்காக பருப்புக் கலந்த பச்சை இலைக்கறிகளை உண்ணவேண்டும். பொதுவாக தீட்டிய தானியங்களில் போதிய சத்து இருப்பதில்லை. கோதுமை போன்ற முழுதானியங்கள் மிக நல்லது. கைப்பிள்ளைக்காரி நச்சுப்பொருட்கள் எதையுமே உபயோகிக்கக்கூடாது. காப்பி, தேனீர் கூட தாய்க்கு கெடுதலுண்டாகும். தாயின்மூலமாக குழந்தைக்கு அந்த கெடுதல் பரவும். சராசரி நிறையோடு பிறக்கிற குழந்தைக்கு நான்கு மணிக்கு ஒருமுறை பால் கொடுக்கவேண்டும். ஒவ்வொரு தடவையும் 20 நிமிஷத்துக்குப் பால் கொடுப்பது நல்லதொரு பழக்கம். பால் கொடுக்கும் பொழுது நெஞ்சை மாற்றி மாற்றிக் கொடுப்பதினால் ஓய்வு கிடைக்கும். பால் குழந்தைக்கு முழுவதும் கொடுத்து விடுவதினால், மேலும் பால் சுரக்கிறதற்கு அது ஏதுவாகும் இந்தக் காலத்துப் பெண்களில் அநேகர் பால் கொடுக்க விரும்புகிறதில்லை. காரணம் தங்களுடைய அழகு கெட்டுப் போய்விடுமென்று, இது மோசமான சுபாவமாகும். அப்படிச் செய்யாதபடிஒழுங்காக குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுக்க வேண்டும். தாய்ப்பால் இல்லையென்றால் பசும்பாலோ, எருமைப் பாலோ கொடுக்காமல் தரமான பால் பவுடர் வாங்கி அதை பாலாக மாற்றி, தாய்ப்பாலைப்போல தண்ணீர் கலந்து கொடுப்பது நல்லது. எந்த அளவுக்கு குழந்தைகள் வளருகிறதென்றால் அதற்கு வியாதிவராமல் பார்ப்பதுதான். ஆரஞ்சுப்பழரசமோ, ஆப்பிள் பழரசமோ, திராட்சைப் பழரசமோ, மத்தியான வேளையில் குழந்தைக்கு கொடுக்கலாம். கொஞ்சம் கொஞ்சம் தண்ணீர் கலந்து கொடுக்க வேண்டும். பிள்ளைகளுக்கு உணவு முறைகளைக் கவனிக்க, சுகாதாரமுறைகளைப் பற்றி அறிந்து கொள்ள நல்லதொரு டாக்டர் மூலமாக ஆலோசனைப் பெற்றுக் கொள்வது நல்லது. பல்முளைத்து வரும்பொழுது பிள்ளைகளுக்கு காரட்டைக் கொடுத்து அவைகளை மெல்லும்படிச் சொல்லலாம். நன்றாக வாட்டிய ரொட்டியைக்கூட கொடுத்து மெல்லச் சொல்லலாம். இவ்விதமாக குழந்தைகளுடைய பற்கள் பாதுகாக்கப்பட வேண்டும். குழந்தை வளர வளர அதனுடைய உணவுகளை மாற்றி, குழந்தைக்கு உணவு கொடுக்கக் கவனம் செலுத்த வேண்டும். குழந்தைக்கு மலச்சிக்கல் வராதபடி கவனமாக இருக்க வேண்டும். அடிக்கடி நிறைய தண்ணீர் கொடுக்க வேண்டும். காய்ச்சி விட்டு, மிதமான சூட்டில் அந்தத்தண்ணீர்

குடிக்கக்கூடியதாக இருக்கவேண்டும். குழந்தைகளைக் கவனமாக வளர்க்க வேண்டிய ஞானம், தாய்மார்களுக்கு இருக்க வேண்டும். குழந்தை உற்பத்தியானது முதற்கொண்டு 280 நாட்கள் தாயினுடைய வயிற்றிலும், பிறந்தபின்பு, 1. 1/2 வருஷங்கள் தாயைச் சார்ந்தும் வாழ்கின்றன. அதற்குப்பின்பும் குழந்தைகள் பல ஆண்டுகள் தாயோடே ஒட்டிக் கொண்டு இருக்கின்றன. அதனால் ஒரு பிள்ளையை உருவப்படுத்தி, அதை வளர்த்து உலகத்தில் நிறுத்துவது தாயினுடைய பெரிய கடமையாயிருக்கிறது. ஆகையால் தாய்க் குலத்தை நாம் போற்ற வேண்டும்.

பெண்கள் பூப்படைந்ததும், குழந்தை பெறுவதற்கான நிலையை அடைந்துவிட்டார்கள் என்று அர்த்தமல்ல. சாதாரணமாக 9 முதல் 13 வயதுக்குள்ளாக பூப்படையலாம். ஆனால் அவர்களுக்கு மன வளர்ச்சியும், சரீரவளர்ச்சியும் அடைய பல ஆண்டுகள் ஆகும். அதனால் 18 வயதுக்கு முன்னால் பெண்களுக்கு விவாகம் முடிப்பது அநீதியான காரியமாகும். 18–21 வயதுக்குள்ளாக விவாகம் முடிக்கலாம்.

சில மதங்களில் சிசு விவாகங்கள் செய்து வைப்பதும், இன்னும் தேவதாசிகளாக சிறுமிகளை கோயில்களில் விட்டு காமக் களியாட்டுகளுக்கு உபயோகிப்பதும் அருவருப்பான செயல்களாக காணப்படுகின்றது. இவைகளெல்லாம் பெண் இனத்துக்குச் செய்யப்படுகிற கொடுமையாகும்.

(தொடரும்).

---

"நீர் என்னைப் பால் போல் வார்த்து, தயிர்போல் உறையப்பண்ணினீர் அல்லவோ? தோலையும் சதையையும் எனக்குத் தரித்து, எலும்புகளாலும், நரம்புகளாலும் என்னை இசைத்தீர்; எனக்கு ஜீவனைத் தந்ததும் அல்லாமல், தயவையும் எனக்குப் பாராட்டினீர்; உம்முடைய பராமரிப்பு என் ஆவியைக் காப்பாற்றினது.

யோபு. 10:10–12.

---

## கர்த்தருக்கு ஸ்தோத்திரம்!

### நன்றி ஏறெடுத்தல்

நமது திருச்சபையின் மாதாந்திர வெளியீடான புதிய எருசலேம் செய்தியை சென்னை திருச்சபையார் கடந்த 9 ஆண்டுகளாக [1983 to 1992 February] Print செய்து பம்பாய் தலைமை சபைக்கு அனுப்பி உதவி செய்தார்கள். சென்னை சகோதரர் ஒருவரும், ஊழியர்களும், சபையாரும் செய்த தியாகங்கள், சுவிசேஷ பணிக்காக அவர்கள் எடுத்தமுயற்சிகள் வெகு அதிகம். ஒழுங்கும் கிரமுமாக புதிய எருசலேம் செய்தி வெளிவர அவர்கள் எடுத்துக்கொண்ட பிரயாசங்களுக்காய் கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறோம்! இறைவன் இதற்கான பலனை கட்டளையிடுவாராக! கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் சென்னை சபையாரை வாழ்த்துகிறோம். மார்ச் 1992 முதல் புதிய எருசலேம் செய்தி பம்பாயில் Print செய்யப்பட்டு இங்கிருந்து அனுப்பப்படுகிறது என்பதையும் சபையாரின் கவனத்திற்கு கொண்டு வருகிறோம். தொடர்ந்து உங்களெல்லாருடைய உதவியும், ஜெபமும் திருச்சபையின் எழுத்துப் பணிக்குத் தேவை என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

# இந்து மதம் (தொடர்ச்சி)

ஜைன மதத்தாரைக் குறித்து நாம் பார்த்து வருகிறோம். மேலும் இவர்கள் சொல்லுவது இந்த உலகம் அநாதியாய் நிலை பெற்றிருக்கிறது என்றும், ஒருக்காலத்திலும் அழியாத நிலைமை உடையதென்றும், கடவுளாலோ அல்லது வேறொருவராலோ இது உண்டாக்கப்பட்டதல்ல என்று நிச்சயமாய்ச் சொல்லுகிறார்கள். இதுவுமல்லாமல் இந்த உலகம், கீழ் உலகம் என்றும், நடு உலகம் என்றும், மேலுலகம் என்றும், மூன்றாய் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். மேலும் இந்த உலகத்தின் அடியிலே அதோகதி என்ற பெயருள்ள ஒரு உலகம் உண்டென்றும் அதற்கு மேல் ஏழு நரக லோகம் உண்டென்றும் அதற்கு மேல் பத்து பவனலோகம் உண்டென்றும், அதற்குமேல் இந்த மண்ணுலகம் உண்டென்றும், இதற்கு மேல் ஜோதிலோகம் உண்டென்றும், வியந்திரலோகமும் வித்தியாதர் லோகமுமாகிய லோகங்கள் உண்டென்றும், மேலே பதினாறு வகைப்பட்ட தேவலோகம் உண்டென்றும், அதன்மேல் அகவித்திர லோகம் உண்டென்றும், அதன் மேல் இந்த உலகங்களுக்கெல்லாம், கர்த்தாவாகிய அநாதி சித்தர் பரமேஸ்டி என்னப்பட்ட பராபரவஸ்து இருக்கின்ற மோட்ச உலகு உண்டென்றும், சொல்லுகிறார்கள். இந்த உலகம் பதினான்கு கயறு உயரமும் ஏழு கயறு அகலமுமாய் இருக்கிறது என்றும் நம்பியிருக்கிறார்கள். இந்த கயற்றளவோ வென்றால் மனித புத்தியினால் கண்டறியப்பட்டதல்ல. ஞானிகள் அறிய முடியாததாகஇருக்கிறது என்று சொல்லிக் கொள்கிறார்கள். பூவில் இருக்கிற சமுத்திரங்களும் பிரிவுகளும் மனித புத்தியினால் கண்டு கணக்கிடக்கூடாது. பூமியின் நடுவிலே மகாமேரு பர்வதம் உண்டென்றும் அதற்கு தென்புறமெல்லாம் பரதநாடு, வடபுறமெல்லாம் அயராவதநாடு, கீழ்புறமும், மேற்புறமும் விதேக நாடென்றும் பேர்கள் வழங்கப்படுகிறது என்றும் சொல்லுகிறார்கள். மகாமேருவுக்கு இரண்டு பக்கத்திலும் மூன்றுவித போக பூமிகள் உண்டென்றும் சொல்லுகிறார்கள். இந்த போக பூமியில் பிறந்த மனிதர்களுக்கு ஆயுசும், சரீர உயரமும் மிகவும் அதிகம். மேற்கூறிய நாடு மூன்றிலும் ஒரு நாட்டார் மற்றொரு நாட்டுக்குப் போகக் கூடாது. ஒரு நாட்டில் பகலாயிருக்கிற வேளையில் மற்றொரு நாட்டில் இராத்திரியாயிருக்கும். விதேக நாட்டாருக்கும் சரீர உயரமும், ஆயுசும் அதிகம். இந்த உலகத்தின் பிரமாணத்தை முற்றும் திரிலோக சாரமென்னும் சாத்திரத்தில் கண்டறியலாம்.

உலகத்தின் உயரத்திற்கும் அகலத்திற்கும் செய்யுள்.

> ஏழு கயற்றகன்றை அகன்று
> மேரே கயறுயர்ந்திடையிலொன்றாய்
> மூழு வென்விறையிலந்தாய்
> முடியுண்டாபடி லேமாயழிவில்லா
> உலகிற்றேற்ற மனந்தாம் படிப்பதேச
> மெனுவன திரண்ட தோமாம்
> இறந்தனள் பிறந்தவண்டாள்.

இது தமிழில் மேரு மந்திர புராணம் என்றிருக்கிறது. இந்த ஜைனர்கள் அருக தேவனை தங்களுக்குப் பிரதானமான கடவுளாகத் தொழுதுகொள்கிறார்கள். இந்த தேவனுக்கு ஜனன் என்ற பிரசித்தி பெற்ற ஒரு பேருண்டு. மேலும் ஆயிரத்தெட்டு நாமங்களுண்டென்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இந்த ஜனன் என்கிற பேரை வைத்து இவர்கள் ஜைனர்கள் என்றழைக்கப் படுகிறார்கள்.

(தொடரும்)

---

"...நீங்கள் இந்த வீணான தேவர்களை விட்டு, வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள யாவற்றையும் உண்டாக்கின ஜீவனுள்ள தேவனுடத்திற்குத் திரும்பவேண்டும்..." அப். 14:15.

---

'தேவன் ஒருவரே . . .'
THERE IS ONE GOD . . .

Regd No 040088/84
Postal Regd No MH BY NE-94/83
Tamil Monthly Magazine

# இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தார்!

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   15 [புதன்] ஏப்ரல் 1992
   15 [வெள்ளி] மே 1992
   15 [திங்கள்] ஜூன் 1992
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs 100-00

அனுப்ப வேண்டிய முகவரி

CHIEF PASTOR N LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR,
DARGA ROAD, BHANDUP,
BOMBAY-400 078 INDIA.

3. [illegible] சந்தா [எண்] [illegible] குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது காணிக்கையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்

5. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை [illegible] [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited and Published by Chief Pastor N LAZAR New Jerusalem Church Church Lane Tilak Nagar Darga Road Bhandup Bombay-400 078 Printed at Beauty Printing Works, Tilak Nagar Bhandup Bombay 400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 101 - MAY '92



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ,
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ர)ன் என்று நீங்கள் அறியீர்கள்...
விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்
கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-13).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

தேவன் மனிதனை சிருஷ்டித்தார். மனிதன் அதிசயமான விதத்தில் சிருஷ்டிக்கப்பட்டுவிட்டான். மனிதனுடைய சரீர அமைப்பு அவனுடைய மூளை அமைப்பு, மூளைக்கும் மற்ற உறுப்புகளுக்குமுள்ள நரம்புத்தொடர், செய்திபரிமாற்றங்கள், மனிதனுடைய சிந்தனை சக்தி, மனிதனுடைய செயல் திறன், ஆராயும் தன்மை, தெளிவு, பரிசுத்தம், அன்பு, உணர்ச்சிகளை வெளியிடுதல், கட்டுப்பாடு, கற்றுக்கொள்ளும் திறன் இவைகளெல்லாம் மிக அதிசயமானவைகளாயிருக்கிறது. உலகத்தில் எந்த ஒரு எந்திரமும் மனிதனுக்கு ஒப்பாகாது. இந்த நாட்களில் கம்ப்யூட்டர்கள் கண்டுபிடித்து அந்த எந்திரத்தின் மூலமாக கூட்டல், கழித்தல், பெருக்கல் இன்னும் பல காரியங்களைச்செய்கிறார்கள். ஆனால் மனித எந்திரத்திற்கு நிகரில்லை. மனிதனுக்கு தேவன் கொடுத்திருக்கிற மகா சக்திகளில் ஒன்று மனித உற்பத்தி திறனாகும். உலகத்தில் எந்த எந்திரமும் குட்டிபோடுவதில்லை. குட்டிப்போடமுடியாது. மனிதர்களுக்கோ இந்த சக்தியைத் தேவன் அருளி பலுகிப்பெருகுங்கள் என்று ஆணையிட்டார். அந்த ஆணையினுடைய, அந்தக்கட்டளையினுடைய சக்தி இன்னும் தொடர்ந்து செயல்பட்டு உலகத்தில் பிரஜா உற்பத்தி நடந்து கொண்டிருக்கிறதை நாம் அறிவோம். ஆனபடியினால் மனிதனில் அடங்கியிருக்கிற விசேஷங்கள் அநேகமாயிருக்கின்றன. இந்த மனிதன், இறைவனோடு கூட ஐக்கியமாயிருந்து இறை ஆவியினால் நிரப்பப்பட்டு, அவருடைய ஆவியினால் கட்டுப்படுத்தப்பட்டு அவருடைய வானத்தின் சட்டத்திற்குட்பட்டு நடக்கும் பொழுது அவன் மனிதனாய், மனிதனில் மேன்மையடையும் சிலாக்கியமுடையவனாய் தேவ குமாரனுக்கு ஒப்பானவனாய் ஒரு குட்டித் தெய்வத்தைப் போல் அவன் ஆகமுடியும். தேவனுக்கு ஒப்பாக என்றால், தெய்வீக ஆளுகையும் திறனுமுள்ளவனாகக் காணப்படமுடியும். தேவன் மனிதனை தம்முடைய சாயலாகவும், தம்முடைய ரூபத்தின்படியும் சிருஷ்டித்தார் என்று சொல்லுகிறார். ஆதி. 1:26,27-ம் வசனங்களில் பல அர்த்தங்கள் அடங்கியிருக்கின்றன. மனிதன் பூரணமடையவேண்டும். அந்தநிலையை அவன் திருச்சபை ஐக்கியத்தின் கட்டுப்பாட்டிற்குள் இருந்து பெற்றுக்கொள்ள முடியும் என்று இறைவன் தமது வேதாகமத்தில் குறிப்பிட்டுள்ளார். இந்த நிலையைப் பெற்றுக்கொள்ள நாமெல்லாரும் தீவிரிப்போமாக! மனிதனுடைய முழுநிலை குமாரத்துவமாகும். அந்த நிலையை அடைவோமாக! அது இயேசுவைப்போலிருத்தலாகும். ஆமென்!!

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# கிருபை வரங்கள் (தொடர்ச்சி)

**எவைகளுக்காக தேவன் பற்பல பாஷைகளின் வியாக்கியான வரத்தை உபயோகிக்கிறார்?**

**1. பொது நன்மைக்காக:**

பொதுவாக ஒரு சபையில் ஒருவர் அந்நிய பாஷையில் சற்றுநேரம் சத்தமாக பேசினால் அங்கு இருப்பவர்களுக்கு விசேஷித்த நன்மை ஒன்றும் ஏற்படாது. ஆனால் அந்த அந்நியபாஷைகளுக்குப் பின், பேசியவரோ அல்லது வேறொருவரோ ஆவியானவர் ஏவுதலினால் வியாக்கியானம் பண்ணுவாரெனில் அங்கு பொதுவான நன்மை ஏற்படுகிறதுமல்லாமல் எல்லோரும் பக்தி விருத்தியிலேயும், தேவபயத்திலேயும் வளர ஏதுவாகும். அந்நிய பாஷையில் பேசுகிறவன் சபைக்குப் பக்திவிருத்தியுண்டாகும்படி அர்த்தத்தைச் சொல்லக் கடவன் (I கொரி. 14:5). "அந்தப்படியே அந்நிய பாஷையில் பேசுகிறவன் அதன் அர்த்தத்தைச் சொல்லத்தக்கதாக விண்ணப்பம் பண்ணக் கடவன்" (I கொரி. 14:13). அந்நிய பாஷையில் பேசி வியாக்கியானம் செய்யுங்கால் அது பொது நன்மையை அதிகமாய்த் தரும்.

**2. எல்லோரும் புரிந்து கொள்ள.**

ஒரு கூட்டத்திலிருக்கும் அனைவருமே அந்நிய பாஷையில் பேசுவார்கள் எனில் அவர்கள் எல்லாரும் பக்திவிருத்தியடைவார்கள். ஆனால் கல்லாதவர்களாவது, அவிசுவாசிகளாவது உள்ளே பிரவேசித்தால் (I கொரி. 14:23) அவர்கள் ஒன்றையும் புரிந்து கொள்ளாதபடி, ஒன்றையும் பெற்றுக் கொள்ளாதபடித் திரும்புவார்கள். அவ்வாறு ஆவியில் நிறைந்து அந்நிய பாஷை பேசும் போது வியாக்கியான வரம் பெற்றவர் அங்கே இருக்க, அவர்கள் அதன் அர்த்தத்தை கூறுவார்களெனில், அங்கே வருகிற கல்லாதவர்களும் அவிசுவாசிகளும் அதைப்புரிந்து கொள்வார்கள். ஆகவே, இங்கு தேவ இரகசியங்களை எல்லோரும் புரிந்து கொள்ளும்படி வியாக்கியான வரம் மிகவும் இன்றியமையாததாக இருக்கிறது.

**3. எல்லோரும் ஐக்கியமாயிருக்க.**

ஒரு கூட்டத்திலுள்ள விசுவாசிகள் அந்நிய பாஷையில் பாடவோ, ஜெபிக்கவோ செய்கிறார்கள் என வைத்துக் கொள்வோம். (I கொரி. 14:15) பவுல் கீழ்க் கண்டவாறு விவரிக்கிறார். "நீ ஆவியோடு ஸ்தோத்திரம் பண்ணும் போது கல்லாதவன் உன் ஸ்தோத்திரத்துக்கு ஆமென் என்று எப்படிச் சொல்லுவான்? நீ பேசுகிறது இன்னதென்று அவன் அறியானே. நீ நன்றாய் ஸ்தோத்திரம் பண்ணுகிறாய் ஆகிலும் மற்றவன் பக்தி விருத்தியடைய மாட்டானே" (I கொரி. 14:16,17). ஆனால் இங்கே வியாக்கியானம் உண்டாகுமெனில் அவ்வித ஜெபத்தையும், துதியையும் கல்லாதவன் ஒருவன் புரிந்து கொண்டு அதற்கு அவன் ஆமென் எனக்கூறவும் செய்வான். ஆகையினால் இவ்விடங்களில் பாஷைகளின் வியாக்கியானம் மிகுந்த பிரயோஜனத்தை உண்டு பண்ணுகிறது. இங்கு பாஷைகளின் வியாக்கியானம் மொழி பெயர்ப்போ அல்லது வார்த்தைக்கு வார்த்தை அர்த்தமோ அல்ல அது கருத்துப் பொருள் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். அந்நிய பாஷையில் ஒரு வார்த்தையோ அல்லது வாக்கியத்தையோ கூறும்போது அது நீண்டதொரு வாக்கியமாகவோ, அல்லது சில வாக்கியங்களுக்கு வியாக்கியானம் ஒருவார்த்தையாகவோ உண்டாகலாம். "மெனே" என்ற வார்த்தைக்கு தானியேல் கொடுத்த வியாக்கியானம் பெரிய வாக்கியமாக இருந்தது. "தேவன் உன் ராஜ்யத்தை மட்டிட்டு அதற்கு முடிவு உண்டாக்கினார்". "தெக்கேல்"

என்ற மற்ற வார்த்தைக்கு 'நீ தராசிலே நிறுக்கப்பட்டு குறையக் காணப்பட்டாய்' என்று வாசிக்கிறோம் (தானி. 5:26). இவ்விதக்காரியம் வியாக்கியானத்தில் வருவது வழக்கம் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். அந்தப்படி அந்நிய பாஷை பேசுகிறவன் வியாக்கியான வரத்திற்காக ஜெபிக்கக்கடவன். இல்லையென்றால் சபையில் சத்தமாக அந்நியபாஷைப் பேசி பொது ஆராதனைக்கு இடையூறு செய்யாதபடி தனக்கும் தேவனுக்கும் மாத்திரம் தெரியும்படி அந்நியபாஷைப்பேசலாம்.

பொதுவாக இந்தநாட்களிலே மிகுதியாக வெளிப்படுத்தல், தீர்க்கதரிசனம் என்று அந்நிய அக்கினி அதிகமாக கிறிஸ்தவர்கள் மத்தியிலே காணப்படுகிறது. ஆவினால் உண்டாகும் வெளிப்படுத்தல் தீர்க்கதரிசனம், அந்நிய பாஷை வரம், வியாக்கியானம் இவைகளைப் பெற்றவர்கள் ஆவிக்குரிய வாழ்வில் குறைந்திருக்கும்போதும், ஆவியானவர் கூறாமலும் கிரியை செய்யாமலும் இருக்கும்போது முன் எண்ணத்தின் படியே மாம்சத்தில் வியாக்கியானம் பண்ணுவதும், தீர்க்கதரிசனம் சொல்லுவதும் அந்நியபாஷைகளைப் பேசுவதும், வெளிப்படுத்தலைக் கூறுவதும் அந்நிய அக்கினியே. இதனால் பலக்குழப்பங்கள் நேரிடும். அந்நிய அக்கினிக்கு இடங்கொடாதபடி காக்கப்படவேண்டும் கர்த்தர் சொன்னார் என்று சொல்லி பொய்யாய்த் தீர்க்கதரிசனம் சொல்கிறவர்கள் இருக்கிறார்கள். இன்னும் சிலர் தங்களுடைய மாம்ச சித்தத்திற்கேற்றபடி தீர்க்கதரிசனம் சொல்லிக்கொள்கிறார்கள். ஆவிகளை பகுத்தறியும் வரமில்லாத சபைகளிலே எது பரிசுத்த ஆவியானவர் எது அந்நிய அக்கினி என்று அறியாததினால் அந்நிய அக்கினி, அசுத்த ஆவிகள் அதிகமாகக் கிரியை செய்கின்றன.

அநேக சபைகளிலே தீர்க்க தரிசனம் வெளிப்படுத்தல் சொல்கிறவர்கள் என்று கருதப்படும் அநேகர் ஸ்திரீகளாக இருக்கிறார்கள். புதிய ஏற்பாட்டில் தீர்க்கதரிசிகளைப் பற்றி நாம் அதிகமாகப் பார்க்கிறோம். தீர்க்க தரிசனம் சொல்லுதல் என்று சொல்லப்படுகிறது வேறே. ஆவியில் நிரம்பும் பொழுது எல்லோருக்கும் வெளிப்படுத்தல், தீர்க்கதரிசனம் உண்டாகலாம். அதனால் அவர்கள் தீர்க்கதரிசிகள் அல்ல. தீர்க்கத்தரிசிகள் கர்த்தருடைய திட்டத்தைத் திட்டமாக வெளிப்படுத்துபவர்களாகும். தீர்க்கதரிசனம் தூரத்தில் நடக்கப் போகிற சம்பவங்களை தெளிந்து சொல்லுகிறவர்களுக்கு தீர்க்கதரிசிகள் என்றுபெயர். இந்தக் காரியத்திலே தேவஜனங்கள் விழிப்பாக இருக்கவேண்டும். ஆவிகளைப்பகுத்தறியும் வரமுடைய, அதிகாரமுடைய ஊழியர்களுக்கு முன்னால் இவை நடைபெறும் பொழுது சகலமும் கட்டுப்பாட்டிற்குள் இருக்கும். தீர்க்கதரிசிகளின் ஆவிகள் தீர்க்கதரிசிகளுக்கு அடங்கியிருக்கிறது என்று வேதத்திலே சொல்லப் பட்டிருக்கிறது. அடக்கிக் கொள்ளவேண்டுமென்று விரும்பினால் அடக்கிக்கொள்ள முடியும். அடக்கிவிடும் அடங்காமையாய்க் கிரியை செய்கிறது பரிசுத்த ஆவியானவருடைய கிரியையல்ல. முழுக்க முழுக்க பாவத்தில், ஆவிக்குரிய ஜீவியத்தில் குறைவாய் இருந்துக்கொண்டு தீர்க்கதரிசவம் சொல்லுகிற அநேகர் இருக்கிறார்கள். இவைகளைக் குறித்து தேவஜனங்கள் எச்சரிக்கையாயிருந்து இவைகளை விட்டு விலகவேண்டும் என்று புத்திசொல்லுகிறோம்.

(தொடரும்)

---

"...உங்களுக்குள்ளே ஒருவன் தீர்க்கதரிசியாயிருந்தால், கர்த்தராகிய நான் தரிசனத்தில் என்னை அவனுக்கு வெளிப்படுத்தி, சொப்பனத்தில் அவனோடே பேசுவேன்." எண். 12:6

---

# இந்து மதம்

(தொடர்ச்சி)

ஜைன கடவுளே எல்லாக் கடவுளுக்கும் மேலான கடவுள் என்றும், இந்தக் கடவுள் எதையும் சிருஷ்டிக்கிறதோ இரட்சிக்கிறதோ இல்லை என்றும் எல்லா உயிர்களிடத்திலும் இவர் மிகவும் அன்பாய் இருக்கிறாரென்றும், எல்லாக் காலங்களையும் இவர் அறிவாரென்றும் சொல்லிக் கொள்கிறார்கள். இந்த அருக தேவனானவர் தன்னையல்லாமல் வேறே தெய்வம் இல்லையென்று சொல்லுகிறதாகவும், ஆனால் இந்த ஜைனர்கள் சிவன், பிரம்மா, விஷ்ணுவையும் விட்டுவைக்கவில்லை அவர்களையும் தொழுது கொள்ளுகிறார்கள். அதற்கு அவர்கள் கொடுக்கிற விளக்கம் : சிவன் பிரம்மா விஷ்ணு அருகதேவனுடைய பக்தர்களாயிருந்தவர்கள் ஆனபடியினால் அவர்களையும் பூசிக்கிறோம் என்று சொல்லுகிறார்கள்.

இந்த சமயம் ஆதி காலத்திலிருந்தே இருக்கிறது என்பதற்கு அவர்கள் சில காரணங்களைச் சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்லுகிற காலக்கணக்குகள் மனிதப் புத்திக்கு எட்டாததாக இருக்கும். காலங்களை ஐந்தாகப் பிரித்திருக்கிறார்கள்.

1. உச்சபினிக் காலம்
2. நன்னர்க் காலம்
3. நற் காலம்
4. நற்றீக் காலம்
5. தீனர் காலம்
6. தீக்காலம்
7. தீத்தீக்காலம்

இப்பொழுது ஐந்தாவது காலம் நடைபெறுகிறது ஒவ்வொரு காலத்திற்கும் கொடுத்திருக்கிற கணக்கு இப்பொழுது ஐந்தாவது காலத்தின் பிரகாரம் ஐந்தாம் காலத்திற்கு 20,000 வருஷம் காலமாகும். மேலும் இந்தக் காலங்களில் இரவும் பகலும் உண்டாயிற்று என்றும் மனிதர்கள் அந்திய காலத்தில் தேவலோகம் போவார்கள் நரகம் போவதில்லை ; மேலும் இவர்களுக்கு வியாதியும் மலமூத்திரங்களும். சரீர மலங்களும் இது முதலானவற்றால் வரும் உபத்திரவங்கள் இல்லை, இவ்வண்ணமாய் போக பூமி பின்பு மூன்றும் காலத்தில் எட்டில் ஒரு பங்கு காலம் இருக்க 14 மனுக்கள் தோன்றினார்கள் இந்த மனுக்களுடைய காலங்களில் சூரிய சந்திரர் தோன்றினார்கள் என்றும், இந்த ஐந்தாவது காலத்தில் நாவி மகாராஜாவைத்தான் இந்துக்கள் பிர்மா என்று சொல்லுகிறார்கள் என்றும், இந்தக்காலத்தில் உருச்சப தீர்த்தங்கரர் என்ற பேருடைய முதல் அவதார புருஷர் தோன்றினார் என்றும், அவருக்குப் பின் 23 தீர்த்தங்கரர்கள் இவரைப்போலவே அவதார புருஷர்களாய்ப் பிறந்தார்கள் இவர்கள் காலத்தில் சக்கரவர்த்திகள் 12 பேர்களும், 9 பலதேவர்களும், 9 வாசுதேவர்களும், 9 பிரதிவாசுதேவர்களும் இந்த நாலாங்காலத்திலே தான் தோன்றினார்கள் இவர்கள் அறுபத்து மூவருக்கும் 'சலகா புருஷர்' என்று பேர் என்றும் சொல்லிக் கொள்கிறார்கள். இந்தத் தீர்த்தங்கரர் இருபத்து நால்வரும் குரு உபதேசம் இல்லாமல் சகல கலா வல்லவர்களாயும் இருந்தார்கள் என்றும், ஒவ்வொருவரும் தேவர்களாலே செய்துவைக்கப்பட்ட ஐந்து கலியாணம் உடையவர்களாயும், நால்வகைப்பட்ட தேவராசிகளாலே எப்பொழுதும் போஷிக்கப்பட்ட பெருமையுடையவர்களாக இருந்தார்கள் என்றும் பலவிதமாய்ப் புகழ்ந்துஎழுதியிருக்கிறார்கள்.

வடஇந்தியாவிலே இவர்கள் அதிகமாகக் காணப்படுகிறார்கள். இவர்கள் சொல்லுகிற காலக் கோட்பாடுகள் எல்லாம் மனிதபுத்திக்கு எட்டாததும், ஒருவித உபாயத்தால் அறியப்படக்கூடியதுமாய் இருக்கிறபடியாலும் மற்ற சமயங்களெல்லாம் தங்களாலே தானே காலத்தோஷத்தாலும், புத்தியீனத்தாலும் உண்டாக்கப்பட்டனவென்றும் அநேக திருஷ்டாந்தங்கள் இவர்கள் வேதத்திலும் அனுபவத்திலும் காணுகிறபடியினாலும் இன்னும் அநேக காரணங்

களாலும் இந்த சமயம் முந்தி இருந்தது என்றும் சொல்லிக் கொள்கிறார்கள். இந்த சமயத்தார் சுவேந்தாம்பரிகள் என்றும் திகம்பரிகள் என்றும் இருவகைப்பட்டிருக்கிறார்கள். இந்த இருதிரத்தாருக்கும் வேதம் ஒன்றாயிருந்தும் சிலக்காரியங்களில் மாத்திரம் ஒவ்வாத விகற்பத்தையுடையவர்களாயிருக்கிறார்கள். சுவேந்தாபரிகளோவென்றால் அநேக உட்பிரிவுகளையுடையவர்களாயிருக்கிறார்கள். திகம்பரிகள் சில உட்பிரிவுகளையுடையவர்களாயிருக்கிறார்கள்

இந்த சமயத்தார்கள் வடக்கே அதிகம் உண்டு. இவர்களுடைய பிரதானமான ஆசாரம் யாதொருஉயிரையும் கொல்லாமல் இருக்கிறதேயாகும். பொய் சொல்லல் கூடாது. யாதொருவனுடைய பொருளையும் அபகரிக்கக்கூடாது. ஒருவனுடைய ஸ்திரீயை விரும்பாமலும், தான், தானியம், வீடு, தோட்டம், பூமி, வாகனம், உடுப்பு முதலான வஸ்துக்களில் மீதமான ஆசையுடையவர்களாயிருப்பதும், இராத்திரியில் சாப்பிடாமல் இருப்பதும், [இராத்திரி சாப்பிட்டால் பூச்சிகள் ஆகாரத்தில் விழுவதால் விழுங்கவேண்டியது வருமென்று] கள்ளுச் சாராயம் குடிக்கக்கூடாது என்றும், இவர்களுடைய முக்கியமான விரதங்களான அத்திக்காய், ஆலங்காய், அரசங்காய், கோழிக்காய், இலந்தைக்காய், விழாங்காய், சுரைச்காய், கஞ்சா, அபினி, வெங்காய், பெருங்காயம், வெள்ளைப்பூண்டு, முள்ளங்கி, காளான் முதலான பொருட்களை மற்றும் அதிக விதையுள்ள பொருட்களையும் இவர்கள் சாப்பிடுவதற்கு மனதினால் கூட நினைக்கமாட்டார்கள். யாதொரு மாம்சத்தை மறந்தும் கையினால் தொடமாட்டார்கள். இன்னும் இதுமுதலான அநேக தருமங்கள் இல்லத்தார்களுக்குண்டு. இதை விவரித்து எழுதப்போனால் அநேக பக்கங்களாகும். ஆனபடியினால் சுருக்கமாக எழுதுகிறோம்.

இல்லறத்திலே மோட்சம் இல்லையென்றும், துறவறத்திலே மோட்சம் உண்டென்றும் சொல்லுகிறார்கள். ஸ்திரீ ஜென்மத்தில் மோட்சம் இல்லையென்றும், விலங்கு ஜென்மத்தில் தேவர்களிலும், நாகர்களிலும், சூத்திரர்களிலும் மோட்சம் இல்லையென்றும், நிச்சயமாய் நம்பியிருக்கிறார்கள். ஆனால் இந்த ஐந்தாங்காலத்திலும், ஆறுங்காலத்திலும் யாவருக்கும் மோட்சம் இல்லையென்று துணிந்து இருக்கிறார்கள். இதற்கு காலமே காரணம் என்று காண்பிக்கிறார்கள். எப்போதும் பூமியில் மூன்று குறைந்து 9 கோடி மனிதர்கள் இருக்கிறார்கள் என்று இவர்கள் சொல்லுகிறார்கள். மேலும், இவர்களுடைய ஸ்தலங்கள் வடஇந்தியாவில் பல இடங்களில் இருக்கிறது. தென்இந்தியாவிலும் காஞ்சிபுரம், திருப்பரங்குன்றம், தேனிக்குளம் என்றும், மூன்றுபத்திரை என்றும், ஸ்ரீரங்கபட்டணம் என்றும், களக்கிரி என்றும், இரத்தினகிரி என்றும், வடக்கே சமதேகக்கிரி என்றும், இவ்வாசலர் என்றும் காசி என்றும், பாபாபுரி என்றும், சம்பாபுரி என்றும் பிரசித்தமாகச் சொல்லிக் கொள்கிறார்கள். இவர்களுடைய வேதங்கள் இக்காலத்திலும் வழக்கத்திலில்லாமலும், முக்காலத்திலும் உபதேசமில்லாமல் இருந்ததேயல்லால் புஸ்தகத்தில் எழுதும் வழக்கம் இல்லாதிருந்தபடியால் அந்த வேதங்கள் பன்னிரண்டிலும் உள்ள சிலபொருட்கள் மாத்திரம் எடுத்து பிராகிருதபாஷையிலும், சமஸ்கிருத பாஷையிலும் முன்னிருந்த பெரியோர்களாகிய சந்நியாசிகளால் செய்யப்பட்டு, எழுதப்பட்டு, பின்னோர்களால் படித்துவரப்பட்டு இருக்கிறது. இப்போது வழங்கிவரும்படியான உண்மையுள்ள சாஸ்திர புஸ்தகங்கள் மகாபுராணம், திரிலோகசாரம், கோமட சாரம், பதார்த்தசாரம், இரத்தினகரக்கண்டம், தருமகிரிச்சை, சிந்தாமணி, சூடாமணி, நீலகேசிவாதம், மேருமந்திரபுராணம், அமரம், நகடாயனம், நயச்சக்கரம், சத்தபுத்தி விசேதவனம், மகாதவனம், தவழம், சுவேதினி இவை முதலிய அநேக புஸ்தங்கள் வழங்குகின்றன. தமிழில் சிந்தாமணி சூடாமணி, நீலகேசிவாதம், மணிமேகலை, நாலடி, குறள், நிகண்டு, நன்னூல் பெருமந்த புராணம், போன்ற புஸ்தகங்கள்

வழங்கி வருகின்றன. இவர்களுக்கு டில்லியிலும் பிரபலமான மடங்களுண்டு. பரிவாரங்களும் உண்டு. துறவறத்தாலொழிய இல்லறத்தால் வசிப்பதற்குரியவரல்லர் என்று சொல்லுகிறார்கள். ஜனன மரணம் உண்டென்று சொல்லுகிறார்கள். எல்லா உயிர்களும் அநாதி சொன்னபடியே, வேதத்தில் எல்லா உயிர்களுக்கும் அன்போடும் இரக்கத்தோடும் அள்ளிசெய்வதே கடவுளுடைய செயல் என்றும், புண்ணிய பாவங்களைச் செய்வதும் அவற்றின் பயனை அனுபவிப்பதும், மோட்சத்தைப் பெறுவதும், நரகத்தையடைவதும் உயிர்களுடைய செயல் என்றும், பாவத்தை ஒழிக்கவும், புண்ணியத்தை உண்டாக்கவும் உயிர்களுக்கே வல்லமையுண்டென்றும் இதுவே உறுதியானத் தத்துவம் என்றும் நம்புகிறார்கள். இதிலே கடவுளுக்கு இடமில்லை.

4. பௌத்தம்

புத்தனை வணங்குவது. பௌத்தம் இந்தேசத்தின் பூர்வீகம் என்று சொல்லுகிறார்கள். கி. பி. 700 வருஷத்துக்கு முன்னே கௌதம வம்சத்தானாகிய விரவாகு என்பவன் டில்லி ராஜாவாகிய பத்துமல்லன் என்பவனைக்கொலை செய்து, தான் ராஜாவானான். இவனும், இவனுக்குப்பின் ஆளுகை செய்த மூன்று ராஜாக்களும், நாற்றெண்பது வருஷம் ஆண்டார்கள். இம்மூவரில் கடைசியாய் ஆண்டவனுக்குப் பெயர் மகாபத்தி. இவனுக்கு புத்தன் பிறந்திருக்க வேண்டும். பௌத்தன் ராஜாங்கத்தை விரும்பாமல், ரிஷிவேஷம் தரித்து அக்காலத்தில் சிலர் கைக்கொண்டிருந்த சாஸ்திரக்கொள்கைகளைத் தானும் தழுவிக்கொண்டு துரைத்தனத்தாருடைய துணையினாலே தான் அங்கீகரித்துக் கொண்ட மதவிஷயத்தை அரசர், ராஜாங்க உதவியால் பிரபல்யப்படுத்தி, ஸ்தாபித்து, அக்காலத்திலிருந்த மற்ற மதங்களை நிர்மூலமாக்கினான். கி. பி. 300 வருஷத்துக்கு முன்னிருந்து பௌத்திர ராஜனாகிய ஆதியத்தனை துறந்தான் ஜெயித்து, பௌத்தர்களை சங்காரம் பண்ணினான். திருச்சபை சரித்திரத்தில் கூன் பாண்டியன் பௌத்தர்களை அழித்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்பொழுது பௌத்தர்கள் இந்துஸ்தானிலிருந்து ஓடி இலங்கைத்தீவு, பர்மா, சீனா முதலிய தேசங்களில் பிரவேசித்து, அவ்விடங்களில் தங்கள் மதத்தை ஸ்தாபித்தார்கள்.

பௌத்தர்களுடைய கொள்கையாவது :

முதற்காரணர் இல்லை என்றும், எந்த பொருளும் தானாய் உண்டாகிறது என்றும், புண்ணியத்தினாலே ஒருவன் எல்லாரிலும் மேன்மை பெற்று தேவனாவான் என்றும் முன்னே ரிஷியாயிருந்த பௌத்தன் தன் புண்ணிய பலத்தால் அப்படிப் பட்ட தேவனானான் என்றும், அவன் சாசுவதமாய் தேவனாயிருக்காமல், மற்ற புண்ணியசாலிகளும் தேவர்களாவார்கள் என்றும், ஒரு கர்ப்பகாலத்துக்கு ஐந்து தேவர்கள் உண்டு என்றும், அவர்களில் பௌத்தன் நாலாவது தேவன் என்றும், ஒவ்வொரு தேவனும் 4000 வருஷம் ஆளுகை செய்வான் என்றும் கி. பி. 1840-ம் வருஷத்தில் பௌத்தன் ஆண்ட வருஷங்கள் 2382 வருஷங்கள் என்றும், ஒரு கர்ப்ப காலம் முடிந்தால் உலகம் அழிந்து போகும் என்றும், 26 மோட்ச பதவிகள் உண்டென்றும் கர்ப்ப லோகமும், மட்டான வேதனை உள்ள 120 நரகங்கள் உண்டென்றும் எல்லாவற்றையும் விட்டு, ஒன்றுமில்லாதவனாகி, தானே தேவனாகிறதே மேலான சுகம் என்றும், கொலை, களவு, விபசாரம், பொய், மது முதலிய பஞ்ச பாதகங்களைச் செய்யலாகாது என்றும், ஜாதி பேதம் கூடாதென்றும், புத்தனுடைய விக்கிரகத்தை கோயில்களில் வைத்து பூஜித்து பல சடங்குகளைச் செய்ய வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். பௌத்தர்களுக்குள் அநேக வேற்றுமைகளுண்டு. பௌத்தன் பத்து அவதாரம் செய்தானாம்.

(See word's a History and of the
Hindus III Volumes
Wilson's Exposure of

Hinduism II Parts.
Kasipandaram காண்க.)

மேற்சொல்லியிருக்கிற இந்துமதத்துக் கடுத்த மூன்று விஷயங்களை யாதொருவர் பட்சபாதமின்றி வாசித்துப்பார்ப்பார்களா கில் இச்சைகளை சுவாமிகளாக்கி தங்கள் குற்றங்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு தேவனுக்கி செய்யுள் பாடி சாமியாக்கி வைத்திருக்கிறார்கள் என்பதை ஒத்துக் கொள்வார்கள்.

Make idols of their lust and every grave as than god.

வேதத்திலும் சில சாஸ்திரங்களிலும், சர்வத்துக்கும் ஆதி கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று சொல்லியிருந்தாலும், அவருடைய இலட்சணங்களை அறியாமல், சத்திய வேதஒளி இல்லாமல், பட்டப்பகலை இரவு என்று கூறி, சில விடங்களில் அவரை நிர்க்குணராகையால் வேண்டுதல் வேண்டாமை யிலால் என்று சிலவிடங்களில் சமஸ்தமும் பிரம்மமும் பிரம்மம் சமஸ்தமென்று கண்ணிலே கண்டதெல்லாம் கலிதரும் கடவுள் என்றும் பண்ணினதை படைக்கவும், படைத்து வைத்ததை அழிக்கவும், வல்லமை யில்லா திரிமூர்த்திகளை தேவர்கள் என்றும் சுகமான நாற்றமாய் சுகமல நாற்றமாய் நாறுகின்ற அவர்கள் சரிதைகளை புராணங்களில் எழுதி ஊறுபட்ட கற்களில் உருக்கள் செய்து ஜெகத்தோர்க்கு ஒப்பனையாய் வெகுவாய்ப் பாடி பரிகாசமாய் நாட்டிலே பிராமணர்கள் பிழைக்க, அரிவொண்ணாத முத்தொளி பகாப் பொருளை பலவிதமாய் அலப்பி கடவுளைக் குறித்து தங்கள் உள்ளத்திலிருந்த சத்தியத்தை பொய்யாக மாற்றி துதிக்கப்படத்தக்க சிருஷ்டி கர்த்தாவைப் பார்க்கிலும் நீச சிருஷ்டிகளைத் தொழுது தங்கள் நடக்கைக் கொத்த அசுத்த தேவர்களை உண்டுபண்ணிக் கொண்டிருக்கிறார்கள். நான்கு வேதத்தையும் அறு சாஸ்திரங்களையும் விசாரிக்குமளவில் ஆங்காங்கே பெரும் வைக்கோல் போரில் ஊசிகிடக்குமாப் போல சில நல்ல கருத்துக்கள் இருந்தும், இந்து மதத்தை தொகுப்பாய்ப் பார்க்கும்போது புத்திக்கும் அதற்கும் அனந்த வித்தியாசத்தைக் காணலாம். தரும நோக்கமாய் பொய், களவு முதலியவற்றை செய்யலாகாதென்று மனிதர்களின் சாஸ்திரத்தில் சொல்லியிருக்க அப்படி செய்கிறவர்களைத் தண்டிக்க இடம் எங்கே? விதி, நித்தியம், விதி உலகத்தை ஆளுகிறதென்றால் விதிப்படி நடக்கிறவரைத் தண்டிப்பது நியாயமா? இந்து மதத் துக்கடுத்த ஆராதனை எவ்வளவேனும் பக்திக்கடுத்ததல்ல. முதலாவது, அது அர்த்த மில்லாத வியர்த்த பொருள் என்றும், இரண்டாவது, சந்தடியும், கேளிக்கையும், சிற்றின்ப ஆடல் பாடலும், சேர்ந்த சம்பந்தமென்றும், மூன்றாவது, பணம்பறிக்கிற வித்தையென்று தெளிவாய் சொல்லலாம்.

ஆண்ட பொருளையறியாதான் செய்தருமம்
மாண்ட மரத்துக்கணைத்த

இந்துமதம் மனிதர்களை அதிக கேட்டுக்குட்படுத்துகின்றது. இந்துக்களுடைய சாஸ்திரத்தில் ஜீவனைக் கொல்வது பஞ்சமா பாதகத்தில் ஒன்று என்று சொல்லியிருந்தும், நரபலி இடுவதும், பெண்பிள்ளைகளை மரித்துப்போன தங்களுடைய புருஷர்களுடைய பிரேதங்களோடு கட்டாயமாய் உடன்கட்டை ஏறச்செய்வதும், கருவை அழிப்பதும் மனமறிந்த கொலை பாதகமல்லவா! இதுவுமன்றி ஜாதிக்கட்டுப்பாடு உண்டாக்கி கொடுமையும் கேடும், எந்த தேசத்திலும் இல்லாத அருவருப்பும் இந்துக்கள் மத்தியிலே உண்டு. பாலபருவத்திலே விவாகம் பண்ணி புருஷன் மரித்துப் போனால், பெண் தான் தாலியறுத்துவிட்டு மறுபடியும் கலியாணம் செய்யாமல் இருப்பது இவர்களுடைய நீதி. நீதியானால், பெண்ணை இழந்த புருஷனும், அப்படியே செய்ய வேண்டுமல்லவா? புருஷர்களுக்கு ஒரு நியாயம். புருஷர்களுக்கு மாத்திரம் அநேக பெண்டுகளை ஆளலாம். எளிய ஜனங்களுக்கும், ஸ்தீரிகளுக்கும் கல்வியை மறைத்து வைக்கிறது இவர்களுடை முக்கிய நோக்கம். சம்பாதிக்கிற பணத்தை புதையலிட்டு வைத்தும், மூழ்கிப்போகத்தக்கபடி வட்டிக்கு விட்டு, இச்சகம் பேசி, ஒத்தா

சைகளைச் செய்து, பொருள், சத்திரம் சாவடிகளைக் கட்டி இரவிலா இருப்பதை கனமென்று எண்ணி, செல்வத்தையிழந்து போய், எளியவர்க்காவது, மற்றவர்க்காவது கொடுக்காமல் மேன் மக்களுக்கு கல்விச் சங்கங்களை யுண்டு பண்ணுகிறுர்கள். மதம் எப்படியோ அப்படியே மனிதனின் நடக்கையுமிருக்கும். மெய்வேதம் எதுவோ அதுவே பாவத்தையும் தாறுமாறுகளையும் மாற்றும்.

கடவுள் ஒன்றுண்டே வேதமொன்றே,
காரண சற்குரு தீட்சத் தானுமொன்றே,
அடையுடனே அவரருளும் பதவியொன்றே
அம்புவி மனுப்பிறவி யானதென்றே,
கடையொளியும் பல மனுவோர்க்குமென்றே
யல்லாமல்,
நால் வேத மறுசமய நடக்கை விகரார்
திடமுடைய தேவர் பலருண்டென்போர்கள்
தீ நரகில்தக்காளாவார் நிண்ணந்தானே.
—கொங்கணர்.

இதிலிருக்கிற குறையின்றி படிப்பிக்கிற ஒரே மார்க்கம் கிறிஸ்தவ மார்க்கமே.

(தொடரும்).

---

"...நீங்கள் இந்த வீணான தேவர்களை விட்டு, வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள யாவற்றையும் உண்டாக்கின ஜீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்டும்..." அப். 14:15.

---

# மனிதன்

(தொடர்ச்சி)

மனிதனுடைய ஆவி:

மனிதன் முப்பிரிவுகளுள்ளவனாக சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறன். ஆவி, ஆத்துமா, சரீரம் என்று ஏற்கெனவே நாம் சொல்லியிருக்கிறோம். ஆத்துமாவைக்குறித்தும், சரீரத்தைக் குறித்தும் கடந்த இதழ்களிலே பார்த்தோம்.

ஆவி : மனிதனுடைய உள்ளான நிலை ஆவியாகும். Iதெச. 5:23 லும் எபி. 4:12 லும் ஆவியையும், ஆத்துமாவையும் சரீரத்தையும் வெவ்வேருக பிரித்துக் காண்பித்திருக்கிறது. ஆவி மனிதனுடைய உள்ளான தன்மையாக இருக்கிறது. இது மனிதனுடைய உயிருக்கு ஒப்பானதாகும். இந்த ஆவியானது மனிதனுடைய வாழ்க்கையைக் கட்டுப்படுத்தக் கூடியதாக இருக்கிறது. கடவுளின் மனிதன் என்று சொல்லப்படுகிறவர்களில் ஆவி விசேஷித்த விதமாக கிரியைசெய்கிறது. இந்த ஆவியில் தேவ ஆவியானவர் வந்து தங்கி இவர்களை ஆட்கொள்கிறர். இவர்களுடைய ஆவியின் கட்டுப்பாட்டிற்குள் ஆத்துமாவும், ஆத்துமாவின் கட்டுப்பாட்டிற்குள் அவர்களுடைய சரீரமும் இயங்குகிறது. கர்த்தருடைய ஆவியானவர் சிம்சோனை ஏவத் துவக்கினர் என்று நியாயாதிபதிகளின் புஸ்தகத்தில் நாம் வாசிக்கிறோம். கர்த்தருடைய ஆவியை பெற்றவர்கள் கர்த்தருடைய ஆவியினல் இயங்குகிறர்கள் (நியா. 13:25). ஆவியே மனிதனுடைய உள்ளான நிலையாக, உயிராக இருக்கிறது. ஆவி இறைவனோடு கூட தொடர்பு எடுக்கவும் இறைவனிடத்தில் ஜெபம் பண்ணவும் இறைவனோடுகூட ஐக்கியமாயிருக்கவும் அதற்கு முடியும். இரட்சிக்கப்படாத மக்களில் அவர்களுடைய ஆவி இருளான நிலையில் அதாவது மரித்த நிலையில் இருக்கிறது. அவர்களுடைய ஆவி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து இரட்சிக்கப்படும் பொழுது அது உயிர்பிக்கப்படுகிறது. உயிர்ப்பிக்கப்பட்ட அந்த ஆவியிலேயே பரிசுத்த ஆவியானவர் வந்து தங்குகின்றர்.

யாக். 2:26 ல் "ஆவியில்லாத சரீரம்

செத்ததாயிருக்கிறது போல கிரியையில்லாத விசுவாசம் செத்ததாயிருக்கிறது'' என்று எழுதப்பட்டிருப்பதைக் கவனிக்கவும். ஆவியே மனிதனுடைய உள்ளான நிலை. இந்த உள்ளான மனிதன் [Inner man] வெளியேறி விடும் பொழுது மனிதன் செத்தவனாகிறான். ஆவியும், ஆத்துமாவும் மனிதனை விட்டு வெளியேறி விடுகிறதே மரித்துப் போதல் என்று சொல்வதாகும். இந்த ஆத்துமாவும் ஆவியும் தொடர்ந்து ஜீவிக்கிறதாக இருக்கிறது. இந்த ஆவியானது தீட்சண்யமானது. ஆவியில் பெலன் கொள்கிறது மிக அவசியம் ஆவியும், ஆத்துமாவும் கொஞ்சம் வித்தியாசம் உள்ளது போல் தோன்றும். ஆனால், இவைகளை நாம் மிகவும் தெளிவாக பகுத்து அறியலாம்.

ஆவி, 'உயிர்' என்றுபிரித்துக் கூறலாம். உயிர் பரப்பொருளில் வெளிப்படுவது. ஆவி ஒருவனது உள்ளான தன்மையை தெரிவிப்பது. ஆவியின் தன்மையினால் மனிதனுடைய குணநலன்கள் அமைகின்றன. ஆவியின் தன்மைதான் மனிதனுக்கு உடல் வலிமையை உண்டாக்குகிறது. மிருகங்களிலிருந்து மனிதனை வித்தியாசப்படுத்திக் காண்பிப்பது ஆவியே. மிருகங்கள் உயிரும் உடலும் உடையவைளாயிருக்கின்றன. குழுவுக்தன்மைகள் அவைகளுக்குண்டு. அவ்வளவே. அவைகள் தங்களை சிருஷ்டித்த இறைவனை அறியவோ இறைவனோடு தொடர்பு எடுக்கவோ முடியாது. மனிதன் குரங்கிலிருந்து வந்தான் என்று சொல்லுகிற மதியீனமான மனிதர்களைக்குறித்து நாம் ஆச்சரியப்படுகிறோம். மனிதன் இறைவனுடைய சிருஷ்டிப்பு; மனிதன் மகாமேன்மையானவன். தேவன், தம்முடைய சாயலாகவும், தம்முடைய ரூபத்தின் படியேயும் மனிதனை உண்டுபண்ணினார். கடவுளுடைய சாயல், மனிதன் தேவனோடு ஐக்கியமாயிருப்பதின் மூலம் அவனிலிருந்து வெளிப்படும். அல்லவென்றால் தேவனுடைய சாயலை பிரதிபலிக்காமல் அதற்கு மாறாக அவனுடைய வாழ்வு காணப்படும். பொதுவாக மனிதன் ஆவியே என்று சொல்லப்படுவதுண்டு. அந்த மனிதனுக்குத்தான் இந்த சரீரமான உறை, உடல் கொடுக்கப்படுகிறது. இந்த உலக வாழ்க்கையை அவன் துறக்கும் பொழுது அல்லது மரித்துப் போகும் பொழுது அந்த ஆவிக்கு வேறொரு ஆவிக்குரிய சரீரம் இப்பொழுது இருக்கிற சரீரத்தைப்போன்றே ஒரு உள்ளான சரீரம் அதற்குக் கொடுக்கப்படுகிறது. அந்த சரீரத்திலே அது தொடர்ந்து ஜீவிக்கும். ஆவிக்கு உணர்ச்சி, வேதனையுண்டு; அது பாடுபடுகிறதுண்டு. ஆத்துமாவும்' ஆவியும் கிட்டதட்ட சமமாக இருக்கின்றன.

தேவன் மனிதனை சிருஷ்டித்து அவனுடைய நாசியிலே ஜீவசுவாசத்தை ஊதினார். மனிதன் ஜீவனையும், ஆத்துமாவையும் உடையவனானான். இவ்வளவு விசேஷித்த மனிதன் இறைவனையறிந்து, இறைவனோடு ஐக்கியமாயிராவிட்டால் மிருகத்திலும் கேடுகெட்டவனாக, வஞ்சகனாக, துரோகியாய், துணிகரமுள்ளவனாய், அசுத்தனாய் அவன் வாழ்ந்து தன்னுடைய கிரியைகளுக்கேற்ற தண்டனையை அடையப்போகிறான். ஆனபடியினால் நாம் தேவனுக்கு பயந்திருப்போமாக! தேவனோடு ஐக்கியமாயிருந்து அவருடைய ஆவியினால் நாம் நிரப்பப்பட்டிருப்போமாக! தேவஆவியானவர் நம்முடைய ஆவியையும் ஆத்மாவையும், சரீரத்தையும் நிரப்பி ஆட்கொள்கிறவராக இருக்கிறார். தேவனோடு ஐக்கியமாயிருப்பதும் தேவனை மகிமை படுத்துவதுமே மனித சிருஷ்டிப்பினுடைய நோக்கம். தேவனை மகிமைப் படுத்தும்படியாகவே மனிதன் சிருஷ்டிக்கப்பட்டான். தேவனை மகிமைப் படுத்துவோமாக! ஆமென்.

★ முற்றும். ★

''...இயேசு ஆவியிலே களிகூர்ந்தார்...''
லூக். 10:21.

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

எழுதப்பட்ட காலம் : கி. மு 1688. அதியாகமம். எழுதப்பட்ட காலத்திலேயும் இது எழுதப்பட்டது.

எண்ணாகமத்தை எழுதியவர் : மோசே.

எழுதப்பட்ட இடம் : எரிகோவின் அருகே யோர்தானுக்கு இக்கரையில் மோவாபின் சமவெளியில் வைத்து மோசே எண்ணாகமத்தை எழுதினர். (எண். 36:13).

எண்ணாகமப் புஸ்தகத்தில் இஸ்ரவேலர்கள் வனாந்திரத்தில் செய்த பிரயாணத்தைக் குறித்தும், அதன் துவக்கத்திலும் முடிவிலும் நடந்த சம்பவங்களைக் குறித்தும் மிகவும் விவரமாக எழுதியிருக்கிது. இதில் மூன்று பாகங்களுண்டு.

1. சீனாய் மலையில் கொடுத்த பிரமாணங்கள். (எண்.1:1-10:10).

இதில் முதலாம் குடிமதிப்பு, பாளயத்தின் ஒழுங்கு, லேவியருக்குரிய ஆசாரம், சுத்தம் அசுத்தத்துக்குரிய காரியங்கள், காணிக்கைகள் சமுசய நிவிர்த்தி ஏற்பாடுகள் நசரேயரின் கொள்கை, ஆசீர்வாதங்கள், விலக்கு, லேவியரின் பிரதிஷ்டை, பஸ்கா பண்டிகை பற்றி இரண்டாம் முறை எழுதிய கட்டளை, மேகஸ்தம்பம், வெள்ளிப் பூரிகைகள் காணப்படுகின்றன.

2) எண்ணாகமம். 10:11-21:9 முடிய : சீனாய்மலையிலிருந்து ஏதோமுக்கு செய்த பிரயாணம்.

பிரயாணத்தின் ஒழுங்கு, எத்திரோ ஜனங்களைப் போகவிடுதல் ஜனங்களின் முறுமுறுப்பு, எழுபது மூப்பர்களை நியமித்தல், மிரியாமும் ஆரோனும் செய்த கலகம், வேவுகாரரின் பயணம், போஜனபானம், காணிக்கை, ஓய்வுநாள், கோராகும் அவனை சேர்ந்தவர்களும் செய்த கலகம், லேவியரின் கடமைகள்' சிவப்புக்கடாரியின் சாம்பல் சடங்கு, மிரியாமின் மரணம், மோசேயின் கோபம், ஆரோனின் மரணம், ஏதோமைச் சுற்றிப் போகிற சம்பவம், வெண்கல சர்ப்பம் ஆகியவைகளாகும்.

3. எண்ணாகமம் 21:10-36:13 முடிய

ஏதோமிலிருந்து யோர்தான் கரைக்கு பிரயாணம், பாட்டுகள், எமோரியரை ஜெயித்தல், மோவாப்பை சந்தித்தல், பிலேயாமின் சரித்திரம், வேசித்தனம், விக்கிரகாராதனை, பினெகாஸ் என்ற பிரதான ஆசாரியனை நியமித்தல், இரண்டாம் குடிமதிப்பு, சுதந்திர உரிமை, மோசே மரணத்திற்கு தன்னை ஆயத்தப்படுத்துதல், காணிக்கைகள், பொருத்தனைகள் மீதியானியர் அழிக்கப்படுதல், ரூபன், காத், மனாசே தங்களை யோர்தானுக்குக் கிழக்கே ஸ்தாபித்தல், இஸ்ரவேல் செய்த பிரயாணத்தின் விவரம், கானான் தேசத்தில் அவர்கள் தங்களை ஸ்தாபிப்பதைப் பற்றிய நியாயம், லேவியரின் ஊர்கள், அடைக்கலப்பட்டணங்கள் ஆகியவை அடங்கும்

மேற்சொன்ன அட்டவணையை நாம் பார்த்தால் இந்த புஸ்தகம் சரித்திரத்தையல்லாமல் நியாயப்பிரமாண விவரங்களை பற்றியும் சொல்லுகிறது என்று அறிந்து கொள்ளலாம். இஸ்ரவேலரைப்பற்றிய இச்சரித்திரத்தில் மோசேயின் பயப்பக்தியும் (எண். 12:3), விசுவாசத்தையும் (எண். 10:29) யேகோவாவின் மேல் அவருக்கு இருந்த சிநேகத்தையும் (எண். 12:6), இஸ்ரவேலரில் அவர் வைத்த அன்பும் எண். 11:2-10; 21:7), அவருடைய பயத்தையும் (எண். 11:10), ஜனங்கள் காட்டின வெறுப்பையும் (எண். 20-ம் அதி) நாம் காணலாம். இவைகள் யாவையும் சேர்த்து இப்பொழுது வேதத்தில் இருக்கும் புஸ்தகமாய் செய்த அவர், இதை வாசிக்கிறவர்களுக்கு எச்சரிப்பும் புத்தி போதனையும் கூறுகிற ஒரு தீர்க்கதரிசியாய் விளங்குகிறார். இந்தப்போதனையின்படி இஸ்ரவேலர்கள் ஒரே கடவுளாகிய யேகோவாவுக்குக் கீழ்ப்படிந்து அவருடைய கட்டளையின்படி நடந்தால் மாத்திரம் அவர்களுக்குப் பாக்கியமுண்டாகும் என்பதை சுட்டிக் காட்டுகிறார்.

[தொடரும்].

---

"இப்படிக் கர்த்தர் கட்டளையிட்டபடியே, மோசே அவர்களைச் சீனாய் வனாந்தரத்தில் எண்ணிப்பார்த்தான்" எண். 1:19

---

# குடும்பம் (தொடர்ச்சி)

## குழந்தை வளர்ப்பு

குழந்தைகளுக்கு உணவு ஊட்டி, உடைஉடுத்து, உலகப்படிப்பு அவைகளுக்குப் படிப்பித்து வளர்க்கிறதோடுகூட அவைகளுக்குத் தெய்வ பக்தியையும், ஒழுக்கத்தையும், கீழ்ப்படிதலையும், கற்றுக் கொடுக்கிறது பெற்றோரது கடமையாகும். குழந்தைகளுடைய முதல் கல்வி நிலையம் குடும்பமாகும் (வீடாகும்). குழந்தைகள் பெற்றோர்களிடத்திலிருந்தே கற்றுக்கொள்கின்றன. பெற்றோர்கள் பேசுவதையும், செய்வதையும், அவைகள் கண்டு, கேட்டு அந்தப் பிரகாரம் செய்கின்றன. பெற்றோர்கள் குழந்தைகளுக்கு மாதிரியாக ஜீவிக்கவேண்டும். குழந்தைகள், பெற்றோர்கள் சொல்லுகிறபடியல்ல அவர்கள் செய்கிறபடியே செய்வார்கள். பெற்றோர்கள் சொல்லுகிறபடி அவர்களே ஜீவித்தால் குழந்தைகளும் அப்படி ஜீவிப்பார்கள். பிள்ளைகளிடத்திலே பொய் சொல்லக்கூடாது. பொய் சொல்ல அவைகள் கற்றுக்கொள்கிறதே பெற்றோர்களிடமிருந்து தான். பிள்ளைகளை இயேசுவண்டை வழிநடத்தவேண்டும். "சிறுபிள்ளைகள் என்னிடத்தில் வர தடை பண்ணாதிருங்கள்" என்று இயேசு கிறிஸ்து திருவுளம் பற்றியிருக்கின்றார். அநேக குடும்பங்களில் பிள்ளைகளை உலகப்பிரகாரமாக படிக்க வைத்து அவர்களுக்கு நல்ல மாப்பிள்ளை தேடி, பெண் தேடி விவாகம் முடித்து வைக்கவும், சொத்து சேர்த்து வைக்கவும், மிகவும் பிரயாசம் எடுக்கிறார்கள். அவர்களுடைய சரீர வளர்ச்சியைக்குறித்துக் கவலைப் படுகிறார்கள், பிரயாசம் எடுக்கிறார்கள். உலகப் படிப்புக்காகவும் உடைக்காகவும் எவ்வளவோ பணம் செலவு செய்கிறார்கள் ஆனால் அந்த அளவு ஆத்மீகக் காரியங்களில் தங்கள் பிள்ளைகளுக்காகப் பிரயாசம் எடுக்கிறதில்லை. உடல் வளர்ச்சியோடு மனவளர்ச்சியும், தெய்வ பக்தியும் பிள்ளைகளுடைய வாழ்க்கையிலே உண்டாகக் கற்றுக் கொடுக்க வேண்டும். என் பிள்ளை அது சிறுபிள்ளை, அதற்கு என்ன தெரியும் நன்மை தீமை அறியாத வயது என்று

சொல்லக்கூடாது. சின்ன வயதிலே பிள்ளைகளுக்குப் போதிக்கலாம். அவைகள் விளங்காதவர்கள் என்று ஒரு போதும் எண்ணக்கூடாது விளங்குகின்றன. நாளடைவில் அவைகள் அவைகளைக் கடைபிடிக்கும். தவறு செய்யும் பொழுது பிள்ளைகளைக் கண்டிப்பாக கண்டிக்க வேண்டும். குடும்பத்தில் யாருக்காவது ஒருவருக்கு பிள்ளைகள் பயந்திருக்க வேண்டும். ஆனபடியினால் குழந்தைகள் வளர்ப்பு ஒரு முக்கியமான கலையாகும். ஒவ்வொரு குடும்பத்தாரும், ஒவ்வொரு பெற்றோரும் தங்களுடைய குழந்தைகளை சரியாக வளர்ப்பிக்க தாங்களே கேட்டுக்கற்று, படித்துத் தெளிவு பெற்று அவைகளைக் குழந்தைகளுக்கு படிப்பித்து வளர்ப்பிர்களாக. கர்த்தர் குடும்பங்களைக் காப்பாற்றுவாராக! கர்த்தருடைய கிருபை தெய்வீகக் குடும்பங்கள் எல்லாவற்றிலும் உண்டாயிருக்க இறையருள்புரிய வேண்டி நிற்கிறோம். ஆமென்!

★ முற்றும். ★

"இயேசுவானவர் ஞானத்திலும், வளர்த்தியிலும், தேவகிருபையிலும், மனுஷர்தயவிலும் அதிகமதிகமாய் விருத்தியடைந்தார்."
லூக். 2:52.

# நீ யாரை சுமந்து செல்லுகிற கழுதை?

பிள்ளைகளே, கர்த்தர் தாம் சிருஷ்டித்த சிருஷ்டிகள் ஒவ்வொன்றையும் அவருடைய சித்தத்தை வெளிப்படுத்த பயன்படுத்துகிறார் என்பதற்கு ஆதாரமாக நாம் வேதாகமத்தில் வருகின்ற ஒரு மிருகத்தைக் குறித்துப் பார்க்கலாம். அந்த மிருகம் கழுதை.

கழுதை என்றால் யாவரும் ஒரு கீழ்த்தரமான மிருகம் என்று என்னுவார்கள். கெட்டவனைப் பார்த்து கழுதைப்பயல் என்று திட்டுவார்கள். கழுதையைப்பற்றிய பழமொழிகள்: "கழுதை கெட்டால் குட்டிச் சுவர், கழுதைதேய்ந்து கட்டெறும்பாகியது" என்றும் சொல்லுவர். வேதாகமத்திலோ, சிலரது மரணத்தைக் குறித்து, ஒரு கழுதை புதைக்கப்படும் வண்ணமாகப் புதைக்கப்பட்டான் என்று எழுதியிருக்கிறது.

கழுதையை சுமை சுமக்கப் பயன்படுத்துவார்கள். நாம் நமது நாட்டில் பார்க்கின்ற கழுதைகள், கழுதை இனத்தில் கடைசித் தரமானது. ஆனால், மேலை நாடுகளில் கோவேறு கழுதைகளை மனிதர்கள் தங்கள் பிரயாணத்திற்காக பயன்படுத்துவார்கள். மலைப்பிரதேசங்களில், சரியான பாதைகள் இல்லா இடங்களில் பயணம் செய்ய கோவேறு கழுதைகள் பயன்படுகின்றது.

பழைய ஏற்பாட்டில் பிலேயாம் என்ற ஒரு கள்ளத்தீர்க்கதரிசி இருந்தான். அவன் பயணம் செய்ய ஒரு கழுதையை பயன்படுத்தி வந்தான். ஒரு முறை அவன் தேவ ஜனங்களை சபிக்க, தேவனுக்குப் பிரியமில்லாத இந்தச் செயலைச் செய்ய திட்டமிட்டு அந்தக் கழுதையின் மீது சவாரிச் செய்து கொண்டிருந்தான். கர்த்தருடைய தூதனானவர் கையில் உருவினப் பட்டயத்தைப் பிடித்துக் கொண்டு இவன் போகிற வழியிலே நின்றார். அதைக் கண்டு அக்கழுதை வழியை விட்டு வயலிலே இறங்கினது இப்படி இரண்டு முறை நடந்தது மூன்றும் முறை இடுக்கமான இடத்தில் நிற்கும் போது அவன் காலை சுவரோடு நெருக்கிற்று அவன் கழுதையை அடிக்க ஆரம்பித்தான் கழுதையின் கண்ணுக்கு தெரிந்த தூதன், இந்த மதிகெட்ட மனிதனுக்குத் தெரியவில்லை. அவன் கழுதையைத் தடியினால் அடித்தான். கர்த்தர் அவனுக்கு புத்தியைப் புகட்ட கழுதையின் வாயைத் திறந்தார். உடனே அந்த மிருகம் நீ

என்னை மூன்று தடவை அடிந்தீர், நான் உம்மிடத்தில் வந்த நாள் முதல் ஒழுங்காக தானே சேவை செய்கிறேன் இதற்கு முன் நான் ஒரு போதும் இப்படி செய்யவில்லையே என்றது. இந்த மதிகெட்ட மனிதனே இன்னும் உணர்வில்லாதவனாய், என் கையில் ஒரு பட்டயம் மாத்திரம் இருந்தால் உன்னை கொன்று போட்டிருப்பேன் என்றான். அப்பொழுது கர்த்தர் அவனது கண்களைத் திறந்தார் அவன் வழியிலே நின்று உருவின பட்டயத்தைக் கையிலே பிடித்திருக்கிற கர்த்தருடைய தூதனைக் கண்டு தலைக்குனிந்து, முகங்குப்புற விழுந்து பணிந்து கொண்டான். மேலும் தூதன் 'அந்த கழுதை என்னைக் கண்டு மூன்று முறை விலகிப்போயிற்று எனக்கு விலகாமல் இருந்ததானால், இப்பொழுது நான் உன்னை கொன்று போட்டு அந்த கழுதையை உயிரோடே வைப்பேன் என்றான். கழுதை இறைவனுக்குப் பணிகின்றது. ஆனால், மனிதன் இறைவனுக்குப் பணிவது இல்லை. இப்படியாக ஒரு மனிதனுக்கு உணர்வுண்டாக்க இறைவன் தனது சிருஷ்டியை [கழுதையை] பயன் படுத்துகின்றார்.

மேலும், நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த பூலோகத்தில் இருந்த நாட்களில், மரிப்பதற்கு முன் எருசலேம் நகரத்திற்குள் பிரவேசிப்பதற்கு ஒரு கழுதைக் குட்டியை கொண்டுவரச் சொன்னார், சீஷர்கள் அதன் மீது வஸ்திரங்களைப் போட்டார்கள். கர்த்தர் அதின் மேல் ஏறிப் போனார் அநேகர் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள். அந்த கழுதை வஸ்திரத்தின் மீது நடந்து போனது சிலர் மரக்கிளைகளை முறித்து வழிகளிலே போட்டார்கள். இப்படியாக கிறிஸ்துவுக்கு கிடைத்த மகிமை அந்த கழுதைக்கும் கிடைத்தது. 'பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும்' என்பது போல கிறிஸ்துவோடு இருக்கின்ற கழுதை போன்ற நமக்கும் மகிமையுண்டு.

எனவே பிள்ளைகளே, நான் கறுப்பாக இருக்கிறேன் என்றோ, அழகாக இல்லை என்றோ, நான் படிப்பறிவில்லாதன், படிப்பறிவில்லாதவள் என்றோ, நான் ஏழை என்றோ வருந்த வேண்டாம். அந்த கழுதைக்கு கிடைத்த மகிமை உனக்கும் உண்டு, இறைவனைக் காண, இறைவன் உங்கள் மூலம் மகிமைப்பட கர்த்தர் உங்களை அழைக்கிறார் அவர் உங்களை நேசிக்கிறார், ஆகாதது என்று யாவராலும் வெறுக்கப்பட்ட கழுதையின் மீது கர்த்தர் பவனி வந்தார். அது போல் கர்த்தர் உன்னையும் தம்முடைய காரியமாக எடுத்து உபயோகிக்க முடியும், உன்னைக் கொண்டும் கர்த்தர் பேச முடியும், நீ செய்ய வேண்டியது ஒன்றே கர்த்தரிடத்தில் உன்னை ஒப்படைத்து விடு கர்த்தர் உன்னைத் தேடுகிறார் உன்னை நேசிக்கின்றார் அவரிடத்தில் ஒப்படைத்து விடு நீ அவரை ஏற்றுக் கொள் அவரை சுமந்து செல்லும் வாகனமாவாய் அவருக்கு கிடைக்கும் மகிமை உனக்கும் கிடைக்கும்.

"...அது ஆண்டவருக்கு வேண்டும்."
லூக்கா 19:34.

பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Eld Bro. பவுல் | எஸ்தர் | வள்ளியூர் | 9-4-92 |
| Bro ஞானசேகர் | ஜெயலாபாய் | காப்புக்காடு | 22-4-92. |

# "நீ போ, இனிப் பாவஞ் செய்யாதே."

## பாவம் தெய்வீக ஐக்கியத்தைவிட்டு நம்மைப் பிரிக்கும்.

ஒருவர் இரட்சிக்கப்பட்ட பின் பாவம் செய்ய விரும்பி இடம் கொடுத்தால் அதி லிருந்து விடுதலை பெற அதிகநாள் பிரயா சப்பட வேண்டியதாகும். அது (பாவம்) அவர்களுக்குள் பிரவேசிக்க மறுபடியும் போராடும். மறுபடியும் பாவம் செய்கிற வர்கள் மேல் சாத்தானுக்கு ஒரு நம்பிக்கை உண்டாகி நெருங்கி வருகிறான். எப்படி யும் இவர்களை வீழ்த்திவிடலாமென்ற நம் பிக்கையோடு போராடுகிறான். இவர்கள் அறிக்கை செய்தாலும், திரும்பத் திரும்ப அதே இடத்தில் காயம் படுகிறபடியால், [பாவம் செய்கிற படியால்], புண் ஆறினா லும், தழும்புகள் மாறாமல் இருக்கிறது. இது இவர்களுடைய அழகை-பரிசுத்தத்தின் மென்மையைக் குறைக்கிறது. இவர்கள் "நீ பூரண ரூபவதி உன்னில் பழுது ஒன்று மில்லை" (உன் 4:7) என்ற மணவாட்டி ஸ்தானத்தை அடைவது கஷ்டம்.

ஒருவன் தேவனிடத்திலிருந்து பாவ மன் னிப்பையும் அதனாலுண்டான விடுதலையை யும் பெற்றுக்கொண்டபிறகு பாவம் செய் யக் கூடாதென்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொல்கிறார் (யோ 8:11). பாவம் செய்தால் அதிகக்கேடு வரும் என்று வேதம் சொல்கிறது (யோ.5:14). மனிதனை பாவம் செய்ய தூண்டுவதும், பாவம் செய்ய வைப்பதும் பிசாசே. பாவம் செய்கிற ஒவ்வொருவரையும் பிசாசு அணுகுகிறான். தொடர்ந்து அவனுடைய கிரியைகளை செய்ய வைக்கிறான். இதனால் இப்படிப் பட்டவர்களுக்கு வாழ்க்கையில் அமைதி யில்லை. மனைவியைப்பார்த்தாலும், பிள்ளை களைப்பார்த்தாலும், பரிசுத்தவான்களைப் பார்த்தாலும் எரிச்சல் வருகிறது. இதற்கு காரணம் மற்றவர்களல்ல இவரின் பாவமே யாகும்.

சத்துரு இவரை நெருக்கி இந்தபடிச் செய்கிறான், செய்ய வைக்கிறான். சிலவேளை களில் தேவனுடைய வார்த்தைகளை படிக் கும் போதும், பரிசுத்தவான்களுடைய ஆலோசனைகளை, செய்திகளைக் கேட்கும் போதும், தான் விரும்பாத-தேவனுக்குப் பிரியமில்லாத செய்கைகள் தன்னில் இருப் பதைக் கண்டு, (ரோ. 19,20) மெய் மனஸ் தாபத்துடன் பாவ அறிக்கைச் செய்கிறான் அப்பொழுது தீமைசெய்யக் காரணமாயி ருந்த பிசாசு அவனை விட்டு ஓடிப் போகிறான்.

இவர்கள் மறுபடியும், மறுபடியும் தன் னைத் தீய காரியங்களைப்பார்க்க, கேட்க, பேச, படிக்க, செய்ய தூண்டுதல் செய் யும் பிசாசின் ஆலோசனைகட்கு செவி கொடாமல் பரிசுத்த ஆவியானவரின் விருப்பத்தின்படி-ஆலோசனையின் படி நடந்து கொண்டால், மாம்ச இச்சை, பாவம் இவர்களை மேற்கொள்ளமாட்டாது (கலாத்தியர் 5:16).

மறுபடியும், மறுபடியும் பாவம் செய் யத் தூண்டுகிற பிசாசை சிநேகித்து இடம் கொடுத்தால் அவர்களுடைய முன்னிலை மையிலும் அவர்கள் பின்னிலைமை அதிகக் கேடுள்ளதாக இருக்கும் என்று கர்த்தரு டைய வேதம் சொல்கிறது (மத். 12:43-45) தேவனுடைய மெய்யானத் திருச்சரீரத்தை விட்டு சிலர் வெளியே துரத்தப்படுகிறதின் காரணமும் இதுவாகத்தான் இருக்கிறது. (II தீமோத் 4:10).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை அறி கிற அறிவினால் உலகின் அசுத்தங்களுக்கு தப்பினவர்கள் மறுபடியும் அதிலே சிக்கிக் கொண்டால், முன் நிலைமையைவிட பின் நிலைமை கேடுள்ளதாக இருக்குமாம்.

(II பேது. 2:20) அப்படி இல்லாதபடி தேவனுடைய பரிபூரணசித்தத்தை அறிந்து அவற்றைச் செய்து மறுருபப்படுவோம் (ரோமர் 12:2).

பாவம் செய்கிறவர்களுக்கு தேவனுடைய முகம் மறைக்கப்படுகிறது (ஏசா. 59:2). பாவம் செய்கிறவர்களுக்கு கர்த்தருடைய முகம் விரோதமாக இருக்கிறது [சங்.34:16]. பாவத்தின் சம்பளம் மரணம் (ரோ.6:23). பாவத்திற்கு மரித்த நாம் அதில் எப்படி பிழைப்போம் (ரோ. 6:2). பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள், அப்பொழுது அவன் உங்களை விட்டு ஓடிப்போவான் யாக் 4:7).

சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் (யோவா 8:32). ஒருவன் சத்தியத்தைக் கைக்கொண்டு நடக்கும் போது அவன் மெய்யான திருச் சபையில் ஐக்கியமாயிருப்பான். அவனில் வந்து தேவன் வாசம் செய்கிறார் [யோ14:23] ஒரு மனிதன் யாரோடு ஐக்கியம் வைக்கிறானோ அவரைப் போன்ற வாழ்க்கைதான் இவனிலும் காணப்படமுடியும் "பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும்" என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். நம்மை ஆட்கொண்ட நாதர் மகா பரிசுத்தமுள்ளவர் ஆகையால் நாமும் தினந்தோறும் அவருடன் வாழ்ந்து அவரைப்போன்ற தூய நிலையை அடைவோமாக. இனிப் பாவஞ்செய்யாதிருக்கத் தீர்மானிப்போமாக.



"நாம் பரிசுத்தமுள்ளவர்களாக வேண்டும் என்பதே தேவனுடைய சித்தம்"
I தெச 4:3.



# "ஜெப வேளையாகிய ஒன்பதாம் மணி நேரத்திலே"

ஒருவர் தமிழ் நாட்டில், திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நாங்குநேரி என்னும் இடத்தில் தேவனுடைய சபைக்கு பரிசுத்தநாளில் சென்று தேவனை அராதிக்க வள்ளியூரிலிருந்து பஸ் ஏறி பயணச்சீட்டுப் பெற்றுக் கொண்டு பயணம் செய்கிறார். ஆனால் அவர் நாங்குநேரி அருகே பஸ் வரும் போது நல்ல குளிர்ந்த காற்று வீசினப்படியால் சிறிது அயர்ந்து தூங்கிவிட்டார். சிறிது நேரம் கழித்து கண் விழிக்கும் போது பஸ் பாணான்குளம் என்ற ஊர் அருகே வந்து விட்டது. உடனே அவர் மிக அவசரமாக வண்டியிலிருந்து இறங்க எழும்புகிறார். ஆனால் அவருடைய உள்ளத்தில் ஒரு பயமும் குற்றமனசாட்சியும் ஏற்படுகிறது. நாங்குநேரிக்கு பயணச் சீட்டு பெற்றுக்கொண்ட நாம் இப்பொழுது பாணான்குளத்தில் இறங்குவதால் பரிசோதகர் வந்து கண்டுபிடித்தால் இவ்வளவு ஜனங்கள் மத்தியில் நம்மை அவமானப்படுத்தி விட்டு, அபராதமும் விதித்து விடுவாரே என்ற பயத்தில் வண்டியிலிருந்து இறங்கி விடுகிறார். பின்னர் இவருக்கு இருவிதமான கலக்கங்கள் ஏற்படுகிறது. ஒன்று ஆராதனைக்கு காலதாமதமாகி விட்டதே என்பது. மற்றது தண்டனைக்கு உடையவராய் பயணம் செய்து விட்டேனே என்ற கலக்கத்தோடு அடுத்து நாங்குனேரிக்கு செல்லவேண்டிய பஸ்ஸை எதிர்பார்த்துக் கொண்டே நிற்கிறார் என்பதாகும்.

இப்பொழுது நான் தனிஜெபத்திலிருந்து கண்களை விழிக்கும் போது ஏழு. மணி 5 நிமிடம் ஆகிவிட்டது ஏழுமணிக்கு ஆரம்பிக்கவேண்டிய ஊழியர் ஜெபத்திற்கு ஐந்து நிமிடம் கடந்து விட்டது. உடனே போய் ஜெபத்தில் கலந்து கொண்டாலும் ஐந்து நிமிடம் பிந்தியது தேவனுடைய பார்வையில் மேற்கண்ட தரிசனத்தின்படி குற்றமாக கருதப்படுகிறது ஆனபடியால் தேவஜனங்களே! நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள கட்டளையின்படி குறித்தநேரங்களில் தேவனை ஆராதிப்பதும், ஜெபிப்பதும் தேவனுக்கு மிகவும் விருப்பமானது ஆகும். இவர்கள் மத்தியில் தேவன் காட்சிகள், தரிசனங்கள் மூலமாகவும், மற்றும் தமது மகத்துவங்களை வெளிப்படுத்துவதின் மூலமாகவும் தம்மை வெளிப்படுத்துகிறார். மேலும் இவர்கள் கூப்பிடுதலுக்கும் செவி கொடுக்கிறார் (ஏசா. 55:6).

அப்போஸ்தலராகிய பேதுருவும், யோவானும் ஜெபவேளையாகிய ஒன்பதாம் மணி நேரத்தில் தேவஆலயத்திற்குள் பிரவேசித்தார்கள் [அப். 3:1]. இதிலிருந்து தேவனுடைய பரிசுத்தவான்கள் ஜெபவேளைகளையும், ஆராதனை நேரங்களையும் எவ்வளவாய் முக்கியப்படுத்தினார்கள் என்று பார்க்கிறோம். இவர்களிடத்தில் உலக செல்வம் இல்லாத போதும், உன்னதமானவருடைய தேவ வல்லமை இவர்களுக்குள் இருந்தது. இவர்களிடம் இருந்த தேவ வல்லமையை ஒருபிறவி சப்பாணி சுகமாக உபயோகித்தார்கள். இதுவரைக்கும் தேவ ஆலயத்திற்குள் செல்ல முடியாமலும், தேவனை ஆராதிக்க முடியாமலும் இருந்த இவன் எழுந்து, நடந்து, தேவ ஆலயத்திற்குள் சென்று தேவனை மகிமைப்படுத்துகிறான் [அப் 3:6–8]. இதற்குக் காரணம் பரிசுத்தவான்களின் குறித்த நேர ஜெபம் ஆகும்.

இன்று நமக்கு ஆராதனை நேரங்கள், நாட்கள் ஜெபவேளைகள், ஒரு மணிநேர ஜெபவேளை, இவைகள் எல்லாம் கொடுக்கப்பட்டிருந்த போதிலும், நாம் அவைகளைச் சரியாய் கடைபிடிக்காமல் நம்முடைய வசதிப்படி அனுஷ்டிக்கிறோம். சிலர் ஆராதனை ஆரம்பித்த பிறகும், இடைவேளைகளிலும், முடியும் போதும் கலந்து கொள்கிறோம். அப்படியே ஜெபவேளைகளையும் நாம் பரிசுத்தவான்களிடம் வாக்குக்கொடுத்த நேரங்களை விட்டு விட்டு தங்களுடைய கடமைகளை எல்லாம் முடித்து விட்டு தங்களுக்கு விருப்பமான நேரங்களில் ஆராதிக்க, ஜெபிக்க செல்கிறோம். சதாரணமாக ஒரு கம்பெனியில் வேலைபார்க்கிறவர் குறித்த நேரத்தில் கம்பெனிக்குள் செல்லாவிட்டால் அவர் வேலைக்கு வராதவர் [Absent] பட்டியலில் சேர்க்கப்படுகிறார். அவருக்கு வேலையில் ஒரு குறைவு ஏற்படுகிறது. தொடர்ந்து காலத்தாமதமாக வந்தால் தண்டனைக்கு உரியவராகிறார். மீண்டும் தவறினால் அவர் வேலையில் இருந்து பணி நீக்கம் செய்யப்படுகிறார். இது உலக நியமம்.

இப்படி இருக்க நாம் நமது தேவனை ஆராதிக்க வேண்டிய நேரங்கள், ஆராதனைகள் நாட்கள் எவ்வளவு பயபக்திக்குரியவைகள் என்று பாருங்கள் [ஏசா. 6:2,3]. நாம் தேவனை ஆராதிக்கும் ஒவ்வொரு ஆராதனைகளிலும் நமது ஆண்டவராகிய கர்த்தர் ஒரு புஸ்தகத்தோடு எழுந்தருள்கிறார். யார் யார் ஆராதனைக்கு வந்துள்ளார்கள் என்று உற்றுப்பார்க்கிறார். வந்தவர்கள் பெயரை ஒரு பக்கத்திலும் வராதவர்கள் பெயர்களை வேறு ஒரு பக்கத்திலும் பதிவு செய்கிறார். இது ஒவ்வொரு ஆராதனைகளிலும் காண்கிற வெளிப்படுத்தலாகும்.

ஆகவே நாம் ஆராதனை நேரங்கள், ஜெபவேளையில் தேவன் தமது வருகைப் பதிவேடு புஸ்தகத்தில் ஆஜர் எடுக்குமுன் தேவசமுகத்தில் பிரவேசிப்போம். தேவன் நம்மைக்குறித்தும் இவ்விதம் சாட்சிக் கொடுப்பார். தேவ கட்டளை வெளிப்படும். தேவதரிசனம் பெறுவோம் [தானி.

9:23]. நாமும் தேவனுக்குப் பிரியமான [குறித்த] நேரங்களில் ஆராதனை செய்து, ஜெபித்து தேவகிருபையைப் பெற்றுக்கொள்வோம்.

---

..."அசைவில்லாத ராஜ்யத்தைப் பெறுகிறவர்களாகிய நாம் பயத்தோடும் பக்தியோடும் தேவனுக்குப் பிரியமாய் ஆராதனைசெய்யும்படி, கிருபையைப் பற்றிக்கொள்ளக் கடவோம்." [எபி. 12:28].

---

## புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு.

கர்த்தருக்கு ஸ்தோத்திரம். 25. 5. 1992 முதல் 4. 6. 1992 வரை புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு கொடைக்கானல் B. L. SHED ஆலயத்தில் நடைபெற இருக்கிறது. இதற்காக யாவரும் ஜெபிக்கவும், உதவி செய்யவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம்.

கிறிஸ்துவுக்குள்.

*Chief Pastor* **N. Lazar**



'தேவன் ஒருவரே . . .'
**THERE IS ONE GOD...**
Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

## சுவிசேஷப் பிரயாணம்

புதிய எருசலேம் சபை தலைமை மேய்ப்பர் அவர்கள் 23-1-92 அன்று பம்பாயிலிருந்து புறப்பட்டு கிளை சபைகளை சந்திக்கவும், தெய்வ பணிகளை நிறைவேற்றவும், பிரயாணம் சென்றுள்ளார்கள். அவர்களுக்காகவும், அவர்களுடன் பிரயாணம் செய்கிற பரிசுத்தவான்களுக்காகவும் பிள்ளைகளுக்காகவும், ஜெபித்துக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

★ 19. 4. 1992 அன்று பம்பாய் தலைமை சபையில் 8 பேர் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். ★

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   15 [திங்கள்] ஜூன் 1992
   15 [புதன்] ஜூலை 1992
   15 [வியாழன்] ஆகஸ்ட் 1992
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **CHIEF PASTOR N LAZAR**
   **"NEW JERUSALEM CHURCH"**
   **CHURCH LANE, TILAK NAGAR,**
   **DARGA ROAD, BHANDUP,**
   **BOMBAY-400 078 INDIA**
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: Beauty Printing Works, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 102 - JUNE/JULY 92

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பாட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது [illegible] அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே ...

# ஆசிரியர் உரை

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். தீமை செய்கிறவர்கள் திடப்படுவதில்லை. பாவம் பாவந்தான். பாவத்திற்கான தண்டனை முதலாவது அவனுடைய ஆத்துமாவில் ஏற்படுகிறது. அதைத் தொடர்ந்து அவன் அதிக பாவம் செய்து, பாவத்தில் பூரணப்பட்டு ஆத்துமாவை இழந்து போகிறுன். நீதியுள்ள ஆக்கினையை அவன் அடையவேண்டியது வரும். தேவனுடைய ஜனங்கள் பாவஞ் செய்யாதபடி இருக்க எப்பொழுதும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஒரு மனிதனில் ஒரு பாவம் குடியிருப்பதில்லை. வெளிப்படையாய் ஒரு பாவம் ஒருவனில் காணப்படுகிறதென்றுல் அவனில் பல பாவங்கள் இருக்கின்றன என்று அர்த்தம். எந்த ஒரு பாவமும் தனித்து குடியிருப்பதில்லை அது தன் பிள்ளை குட்டிகள், பேரப்பிள்ளைகளோடு கூடவே இருக்கும். பாவமே இல்லாமல் பரிசுத்தமாய் ஜீவிக்கவேண்டுமென்பது நமக்கு கொடுக்கப்பட்ட கட்டளை. அப்படி ஜீவிக்க முடியும். அறியாமையினுல் ஏதாவது பாவங்கள் இருக்கலாம். அவைகள் கண்டுபிடிக்கப் படும்போது, தெரியவரும்போது நாம் விட்டு விடலாம். அறிந்து பாவஞ்செய்கிறவர்கள், துணிந்து பாவஞ்செய்கிறவர்கள் பெரும் பாவிகள். இப்படிப்பட்ட கீட்டுள்ளவர்களை விட்டு தேவ ஜனங்கள் விலகி இருக்கவேண்டும். இல்லையென்றுல் அவர்களுடைய குஷ்டரோகம் இவர்களையும் தொற்றிப்பிடிக்கும். பாவமாயிருக்கட்டும், பரிசுத்தமாயிருக்கட்டும் அது ஒட்டுவார் ஒட்டிபோல இருக்கிறது பரிசுத்தவான்களோடு ஐக்கியம் வைக்கிறவன் பரிசுத்தமாவான்; பாவிகளோடு ஐக்கியம் வைக்கிறவன் பாவியாவான். உலகத்தில் நடைபெறுகிற சம்பவம் இதுவே. ஆனபடியினுல் தேவ ஜனங்கள் தேவனுக்குப் பயந்து, கர்த்தருடைய சித்தம் செய்வீர்களாக பரிசுத்தவான்களுடைய ஐக்கியத்தை காத்துக் கொள்வீர்களாக! பரிசுத்தவான்களோடு ஐக்கியமாயிருங்கள் பரிசுத்தமாவீர்கள். கர்த்தர் சீக்கிரமாய் அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு பலன் அளிக்கும்படியாக வருகிறுர். பாவியாயிருக்கட்டும், பரிசுத்தவானுயிருக்கட்டும் அதிலே பூரணப்படும்படியாக தேவன் பொறுமையாயிருக்கிறுர். சீக்கிரமாய் அவனவனுடைய கிரியைகளுக்கேற்ற பலன் அவனவனுக்கு கிடைக்கும் (வெளி.22:11,12). தேவ ஜனங்கள் கர்த்தருக்குள் திடன் கொண்டு நீதியே செய்து, உண்மை பேசி, நியாயத்தை நடப்பித்து, சத்தியத்தைச் சார்ந்து, சத்தியவான்களாய், சத்தியத்திற்கு சாட்சியாக நிலை நிற்பீர்களாக! நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய கிருபை பரிபூரணமாய் உங்களுக்கு அளிக்கப்படும். ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N LAZAR)

# கீழ்ப்படிதல்

கிறிஸ்தவ இலட்சணங்களில் பிரதானமானது கீழ்ப்படிதலாகும். இரட்சண்யத்திற்குக் கீழ்ப்படிதல் மிகவும் அவசியம். இணங்கிக் கீழ்ப்படிகிற இந்த இலட்சணத்தினாலே நாம் கிறிஸ்தவ ஆசீர்வாதங்கள் எல்லாவற்றையும் பெற்றுக் கொள்ளலாம். கீழ்ப்படிதல் மனத்தாழ்மையிலிருந்து வருகிறது. ஆதி உலகமும், பிசாசுகளும் கீழ்ப்படியாமையினால் விழுந்து போயின. ஆனபடியினால், வேதாகமத்தில் தேவனுக்குக் கீழ்ப்படிந்திருங்கள்; பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள் என்று எழுதப்பட்டுள்ளது (யாக். 4:7). ஒரு விசுவாசியின் ஜீவியத்தில் கீழ்ப்படிதல் எவ்வளவு முக்கியமானதென்று கர்த்தருடைய சந்நிதானத்தில் நாம் தியானிப்போமாக!

விசுவாசி என்றால் கீழ்ப்படிகிறவன் என்று அர்த்தம். மனிதன் கீழ்ப்படிதலுள்ளவனாய் உண்டாக்கப்பட்டான். கீழ்ப்படிதலுள்ளவனாய் இருக்கமுடியும்.

1) நாம் முதலாவது சத்திய வேதாகமத்திற்கு, தேவனுடைய சொல்லுக்கு கீழ்ப்படிய வேண்டும் (ரோ. 16:25). நாம் மனந்திரும்பி, பாவத்தை அறிக்கை செய்து, முழுகி ஞானஸ்நானமும் பெற்றுக் கொள்ளுகிறபோது, அப்படி கீழ்ப்படிந்து நடப்போம் என்றே முதலாவது வாக்குக் கொடுக்கிறோம் (யாத். 24:7). ஆனபடியினால் தேவனுடைய கற்பனைகளுக்குக் கீழ்ப்படிய வேண்டும் (உபா. 11:27). மக்கள் ஊழியர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டும் (எண். 27:20; லூக். 10:16; I கொரி. 16:16). ஆனால், பொய்மத தலைவர்களுக்கு மக்கள் கீழ்ப்படியக் கூடாது. அந்தக் காரியத்தில் தேவனுக்கு விரோதமாக, பரிசுத்தவான்களுக்கு விரோதமாக, திருச்சபைக்கு விரோதமாக மதத்தலைவர்கள் பொய்யானதை தூண்டிவிட்டால் தேவனுடைய மக்கள் அவர்களுக்குக் கீழ்ப்படியக்கூடாது, தேவனுக்கே கீழ்ப்படியவேண்டும் (அப்போஸ்தலர் 5:29).

2) மேலான அதிகாரமுள்ளவர்களுக்குக் கீழ்ப்படியவேண்டும் (ரோ. 13:1; தீத். 3:1; (I பேது. 2:16). பிள்ளைகள் பெற்றோருக்கு கீழ்ப்படிய வேண்டும் (லூக். 2:51; ஆதி. 28:7; எபே. 6:1). வேலைக்காரர்கள் எஜமான்களுக்குக் கீழ்ப்படியவேண்டும் [கொலோ. 3:22]. மனைவிகள் புருஷர்களுக்கு கீழ்ப்படியவேண்டும் [கொலே. 3:18 தீத். 2:5; I பேது. 3:6]. எல்லாரும் ஒருவருக்கொருவர் கீழ்ப்படியவேண்டும் [I பேது. 5:5]. பெருமையினால் மனிதன் விழ்ந்து போனான். கீழ்ப்படிதலினால் அவன் மேலே ஏற முடியும். கீழ்ப்படிகிறதினால் நாம் இரட்சிக்கப்படுகிறோம். கீழ்படிகிறதினால் நாம் பரிசுத்த ஆவி பெற்றுக் கொள்ளுகிறோம். கீழ்ப்படிதலினால் நம்முடைய இரட்சிப்பு பூரணமாகும் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து தம்மைத்தாமே தாழ்த்தி கீழ்ப்படிந்ததினால் உன்னதமாய் உயர்த்தப் பட்டார். எல்லா நாமங்களுக்கும் மேலாக அவருடைய நாமம் இறைவனால் புகழ் பெற்றுள்ளது [பிலிப்பியர் 2:9-11].

கீழ்ப்படிதலினால் உண்டாகும் நன்மை.

1] இரட்சிப்பு [ரோ. 1:7; அப். 6:7; எபி. 5:9].

2] பாவமன்னிப்பு [I பேது. 1:1 2].

3] பரிசுத்த ஆவியானவர் [அப். 5:32] தேவன் தமக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்கு பரிசுத்த ஆவியானவரைத் தந்து அவர் மூலமாய் சகல ஆசீர்வாதங்களையும் அருளுகிறார். ஒருவன் பரிசுத்த ஆவியை நிறைவாய் பெற்றிருக்கிறான் என்பதற்கு அடையாளாம் அவன் வசனத்தின்படியான ஜீவியம் செய்கிறது கீழ்ப்படிகிறதினால் வெளிப்படுகிறதாகும். இணங்குதல் பெரிய

ஆசீர்வாதத்தைக் கொண்டுவரும், சமாதானம் உண்டாகும் [பிர. 10:4].

4] ஆசீர்வாதங்கள் உபா. 11:27].

5] பூரணத்துவம் (எபி. 5:8).

கீழ்ப்படியாமையினால் சாபம் வரும் (உபா. 11:28) கோபாக்கினைவரும் (ரோ. 2:8); விழ்ச்சி, சபையிலிருந்து தள்ளப்படுவான் (II தெச. 3:14; எபி. 4:11). எந்த கீழ்ப்படியாமைக்கும் தண்டனையுண்டு (எபிரேயர் 2 2)

ராகாப் என்னும் வேசி கீழ்ப்படிந்ததினால் கீழ்ப்படியாதவர்களுடனே கூட தண்டனை அடையாதிருந்தாள் [எபி. 11:31]

ஆகையால், எவ்வித ஆராதனைகளைக் காட்டிலும் கீழ்ப்படிதல் முக்கியம். இறைவனுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்து, இறைவனுக்குப் பிரியமான ஆராதனை செய்வதே இறைவனுக்குப் பிரியம் [I சாமு 15:22]. ஆனபடியால், தேவனுடைய பிள்ளைகளாகிய நீங்கள் கீழ்ப்படிதலின் பிள்ளைகளாயிருங்கள் [I பேது. 1:14].

"தமக்கு கீழ்ப்படிகிற யாவரும் நித்திய இரட்சிப்பை அடைவதற்கு காரணரானார்." எபிரேயர் 5:9

# அப்போஸ்தலர்கள்

தேவனால் முன்குறிக்கப்பட்டவர்கள். எபே. 1:6; 1:12
தேவனால் முன்னறிவிக்கப் பட்டவர்கள். I பேது. 1:11
தேவனால் அழைக்கப்பட்டவர்கள். மத். 4:19-22
தேவனால் தெரிந்துக் கொள்ளப்பட்டவர்கள். மாற். 3:14

அப்போஸ்தலராய் இருக்கும்படி .. ரோ. 1:1
மனுசரை பிடிக்கும்படியாக .. மத். 4:19-22, மாற். 1:17
தம்முடன் இருக்கும்படியாக மாற். 3:14
கனி கொடுக்கும் படியாக .. யோ. 15:16
தேவனின் மகிமைக்கு புகழ்சியாயிருக்க. . எபே. 1:11
அவருடைய சுதந்தரமாகும்படியாக எபே. 1:12
குமாரனின் சாயலுக்கு ஒப்பாயிருக்க ரோ. 8:29, I யோ. 3:2
உலகத்திலிருந்து தேவனுக்கென்று யோ. 15:19

தேவனால் அதிகாரம், கட்டளை பெற்றவர்கள் .. லூக்.91மத்10:5,6
தேவனால் அனுப்பப்பட்டவர்கள் மாற். 3:14

பிதா குமாரனை அனுப்பினது போல . யோ. 20:21
ஆடுகளை ஓநாய்களுக்குள் அனுப்புவது போல .. மத். 10:16
அசுத்த ஆவிகளை துரத்தவும், சகல நோய்களை நீக்கவும் .. மத். 10:1 மாற். 3:15
பாவங்களை மன்னிக்க, மன்னியாதிருக்க .. யோ. 20:23
கட்டவும், கட்டவிழ்க்கவும் மத். 16:19

சகல ஜாதிகளை சீசராக்கவும், அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கவும்,
அவர்களுக்கு உபதேசிக்கவும் .. மாற். 28:19,20
வாக்குதத்தம் நிறைவேற காத்திருக்கவும் ... அப். 1:5

அப்போஸ்தலர்கள் எப்படிப்பட்டவர்கள்

சீயோனில் திடன்கொண்டு தங்குகிறவர்கள் ... ஏசா. 14:32
தேவனால் பரிசுத்தமாக்கப் பட்டவர்கள், கர்த்தரின் மகத்துவத்தில் களிகூருகிறவர்கள் ஏசா. 13:3
கர்த்தரின் இருதயத்துக்கு ஏற்றவர்கள், அறிவோடும், புத்தியோடும் மேய்ப்பவர்கள் ஏரே. 3:15
மீன்பிடிக்கிறவர்கள், வேட்டைக்காரர்கள் எரே. 16:16
மந்தையின் முன்நடக்கும் கடாக்கள் ஏரே. 50:8
இஸ்ரவேலில் அடையாளங்களும், அற்புதங்களுமானவர்கள் .. ஏசா. 8:18
சகலத்தையும் வெறுத்தவர்கள் . லூக். 14:26
கிறிஸ்துவிடம் நேரடியாக கற்றவர்கள் யோ. 15:17 கலா1:12
கர்த்தரின் பலமுள்ள சாட்சிகள் .... யோ. 15:27 ஏசா. 43:10,12
அப். 2:32;4:33;5:32;10:39
கர்த்தரின் வார்த்தையை பெற்றவர்கள் ... யோ. 17:14
அவர்கள் உலகத்தார் அல்ல .. யோ. 17:14,16
அற்புதங்களை செய்யும் கிருபை பெற்றவர்கள் . அப். 5:12;3:6
சிறைவாழ்விலும் துதி பாடுகிறவர்கள் .. அப். 5:18;12:14
ஜெபம் பண்ணுவதிலும், போதிக்கிறதிலும் இடைவிடாமல்
தரித்திருப்பவர்கள் .. அப். 6:4
பரிசுத்த ஆவி அருளப்பட கைவைத்து ஜெபிக்கிறவர்கள் அப8:16,17;19:6
திரளான ஜனங்கள் விசுவாசிக்கதக்கதாக பிரசங்கிக்கிறவர்கள் .. அப். 14:1
தைரியமுள்ளவாகளாய் போதிக்கிறவர்கள் . அப். 14:3
கேட்கிறவர்களின் விசுவாசத்தை கண்டு கொள்கிறவர்கள் ... அப். 14:9
விசுவாசிகள் மனதை திடப்படுத்தி புத்தி சொல்லத்தக்கவர்கள் .. அப்.14:22;15:32,40
ஆவியானவரால் நடத்தப்படுகிறவர்கள் ... அப். 16:6,7,9
தங்கள் பாடுகளின் மத்தியில் விசுவாசிகளுக்கு ஆறுதல்
சொல்லத்தக்கவர்கள் .. அப். 1640 II கொரி. 1:4
உலகத்தை கலக்குகிறவர்கள் எனப்படுகிறவர்கள் ... அப். 17:6
இயேசுவே கிறிஸ்து என தெளிவுபடுத்துகிறவர்கள் அப். 18:8; 2:36;40:42
I கொரி. 2:13 அப். 16:17;17:39
இயேசுவின் நாமத்திற்காய் மரிக்கவும் ஆயத்தமாய் இருக்கிறவர்கள்
அப். 21:13 பிலி. 1:21
சுவிசேசத்திற்காக பிரித்தெடுக்கப்பட்டவர்கள் ரோ. 1:1
விசுவாசத்திற்கு கீழ்ப்படியப்பண்ணும் கிருபை பெற்றவர்கள் .. ரோ. 1:7
ஆவியானவரால் வரங்களை பகிர்ந்து கொடுக்கும் கிருபை பெற்றவர்கள் ரோ. 1:10
சத்தியத்தை அறிவிக்கும் பணியில் சகல ஜனங்களுக்கும் கடனாளிகள் ரோ. 1:14
சுவிசேசத்தின் சம்பூரண ஆசீர்வாதத்தால் நிறைந்திருப்பவர்கள் .. ரோ. 15:29
தேவனுக்கு உடன் வேலையாட்கள் .. I கொரி. 3:9

தேவனுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரர்கள் . I கொரி 4:1
உலகத்துக்கும், மனிதருக்கும், தூதருக்கும் வேடிக்கையானவர்கள் .. I கொரி. 4:9
கிறிஸ்துவை தரித்தவர்கள், சுயாதீனர்கள் I கொரி. 9:1
கர்த்தரின் கிரியையை நடப்பிப்பவர்கள் .. I கொரி. 16:10 யோ. 14:12
திருச்சபைக்கு பிரயோஜனமானவர்கள் II கொரி. 1:15
எப்பக்கத்திலும் நெருக்கப்பட்டும் ஒடுங்கிப்போகாதவர்கள் ... II கொரி. 4:8
இயேசுவின் மரணத்தை தங்கள் சரீரத்தில் சுமந்து திரிபவர்கள் .. II கொரி. 4:10
தேவனோடு மனிதனை ஒப்புரவாக்கும் ஊழியத்தைப் பெற்றவர்கள் .. II கொரி. 5:18
ஒப்புரவாக்கும் உபதேசத்தை பெற்றவர்கள் II கொரி. 5:19
எந்நிலையிலும் தங்களை தேவஊழியராக விளங்கபண்ணுகிறவர்கள் II கொரி. 6:3-10
தேவனை அறியும் அறிவுக்கு விரோதமாய் எழும்பும் மேட்டிமைகளையும், சிறைப் படுத்துகிறவர்கள் .. II கொரி. 10:5
ஊன்றக் கட்டும் அதிகாரம் உடையவர்கள் II கொரி. 13:10
ஆவிக்குரிய இரகசியங்களின் வெளிப்படுத்தல் பெற்றவர்கள்
கலா1:12 I கொரி. 2:10 II கொரி. 12:1
மாம்சத்தோடும், இரத்தத்தோடும் யோசனை பண்ணாதவர்கள் . கலா. 1:16
என்னை போலாகுங்கள் என்று சொல்லத்தக்கவர்கள் கலா. 4:12
திருச்சபைக்கு அஸ்திபார மானவர்கள் எபே. 2:20 வெளி. 21:14
சபை கிறிஸ்துவுக்கொப்பான வளர்ச்சியடைய பிரயாசப்படுகிறவர்கள் எபே. 4:12
எப்பொழுதும் தைரியமாயிருப்பவர்கள் பிலி. 1:20
எந்நிலையிலும் மனரம்மியமாய் இருக்க கற்றுக் கொண்டவர்கள் .. பிலி. 4:11
சரீரத்தின் படி தூரமாய் இருந்தும் ஆவியின்படி கூட இருப்பவர்கள் கொலோ. 2:5
சுவிசேசத்தை தேவன் ஒப்புவிக்கத்தக்கதாக தேவனால் உத்தமராக
எண்ணப்பட்டவர்கள் I தெச. 2:4
மனுசரால் வரும் மகிமையை தேடாதவர்கள் I தெச. 2:6
தேவனுக்கு முன்பாக பரிசுத்தமும், நீதியும், பிழையின்மையுமாய் நடப்பவர்கள்
I தெச. 2:10
உண்மையுள்ளவர்கள் என்று கர்த்தரால் எண்ணப்பட்டவர்கள் ... I தீமோ. 1:19
தேவனால் உண்டானவர்கள் - I யோ. 4:6
ஆவிகளை பகுத்தறியும் கிருபை பெற்றவர்கள் - I யோ. 1:6 I பே. 5:12
கிறிஸ்துவின் மூலம் உபத்திரவத்துக்கும், அவருடைய இராஜ்யத்துக்கும், பொறுமைக்கும் பங்காளிகள் - வெளி. 1:6
கிறிஸ்துவின் பாடுகளுக்கு பங்காளிகள் - I பேது. 5:1
இனி வெளிப்படும் மகிமைக்கு பங்காளிகள் - I பேது. 5:1 ரோம. 5:2
கிறிஸ்துவின் ராஜ்யத்தில் நியாயாதிபதிகளாய் சிங்காசனங்களில்
அமர்கிறவர்கள் - மத். 19:28 லூக். 22:30 வெளி. 20:4 தானி. 7:21,22

## அப்போஸ்தலர்களின் சிறப்புப் பெயர்கள்

நியாயாதிபதிகள் - ஏசா. 1:26
ஆலோசனைக்காரர்கள் - ஏசா. 1:26
நுரைத்தனம் பண்ணும் பிரபுக்கள் ஏசா. 32:1 சங். 45:16

சமாதானமுள்ள கண்காணிகள் - ஏசா. 60:17
நீதியுள்ள தண்டற்காரர்கள் - ஏசா.60:17
கிறிஸ்துவின் ஸ்தானாதிபதிகள் - எபே. 6:19
சிறுமந்தை - லூக். 12:32
சிறுவர் - சக. 13:7
ஆடுகள் - சக. 13:7 யோ. 10:15,16,27;21:16
சிநேகிதர் - யோ. 15:15



"... இயேசுவானவர் தாம் தெரிந்துக் கொண்ட அப்போஸ்தலருக்குப் பரிசுத்த அப்போஸ்தலருக்கு பரிசுத்த ஆவியினாலே கட்டளையிட்டார். அப். 1 1.



# பரிசுத்த ஆவி பெற்றதற்கு பற்பல பாஷைகள் பேசுதலே அடையாளம்.

"நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன், எனக்குப் பின் வருகிறவரோ என்னிலும் வல்லவராயிருக்கிறார்...அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் ஞானஸ்நானம் கொடுப்பார்" [மத்.3:11; மாற். 1:8] என்று யோவான் ஸ்நானன் இயேசு கிறிஸ்துவைக் குறித்துப் பிரசங்கித்தார். யோவான் ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுத்தான். நீங்களோ பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்நானம் பெறுவீர்கள்" என்று உயிர்த்தெழுந்த கர்த்தர் சொன்னார் [அப். 1:4;11:16]. "பரிசுத்த ஆவியைக் கொடுப்பேன் என்பது பிதாவினுடைய வாக்குத்தத்தம் [அப். 1:5]. இது இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குத்தத்தம் [யோ. 7:39; அப். 11:17]. இந்த வாக்குத்தத்தம் யூதர்களிலிருந்து இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக்கொள்கிறவர்களுக்குத்தான் உரியது என்று ஆதியிலே எருசலேமில் காத்திருந்து, பெந்தெகொஸ்தே நாளிலே பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொண்ட யூத விசுவாசிகள் எண்ணிக் கொண்டிருந்தார்கள். யூதமார்க்கத்துக்கு அப்பாற்பட்ட மக்களை புறஜாதிகள் என்று எண்ணி ஒதுக்கிவைத்திருந்தனர். ஆனால் பரிசுத்தஆவியானவரோ பேதுருவை கொர்நெலியு பக்தன் வீட்டுக்கு நடத்தி அங்கே அவரும், அவரோடே கூட ஆறு சகோதரர்களும் போய், இயேசு கிறிஸ்துவை பற்றி பேதுரு பிரசங்கித்துக் கொண்டிருக்கையில், பரிசுத்த ஆவியானவர் வசனத்தைக் கேட்டு விசுவாசித்த புறஜாதியார் எல்லார் மேலும் இறங்கினார். அவர்கள் பற்பல பாஷைகளைப் பேசி தேவனைப் புகழ்ந்தார்கள். விருத்தசேதனமுள்ள விசுவாசிகள் பரிசுத்த ஆவியானவர் புறஜாதிகள் மேல் பொழிந்தருளப்பட்டதைக் குறித்து பிரமித்தார்கள். பேதுருவானவர் "இவர்களும் நம்மைப்போல் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டார்கள்' என்று அறிவிக்கிறார் அப். 10:42-47). யூத கிறிஸ்தவர்கள் புறஜாதியாரும் இரட்சிக்கப்படுகிறார்கள் என்று அறிந்து அவர்களை சேர்த்துக் கொள்ளும்படி தேவன் நடப்பித்த கிரியை என்னவென்றால்

1. "ஆதியிலே அவர்கள் மேல் பரிசுத்த ஆவியானவர் இறங்கினது போலவே புற ஜாதிகள் மேல் இறங்கினர்" (அப். 11:15).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்திருந்த யூதர்களுக்கு தேவன் எப்படி பரிசுத்த ஆவியின் வரத்தை அநுக்கிரகம் செய்தாரோ, அதே பிரகாரம் புறஜாதியாராயிருந்து விசுவாசிக்கிறவர்களுக்கு வரத்தை அநுக்கிரகம் பண்ணினர் (அப்10:17).

இருதயங்களை அறிந்திருக்கிற தேவன் யூத விசுவாசிகளுக்கு பரிசுத்த ஆவியை தந்தருளினதுபோல, விசுவாசிக்கிற புறஜாதிகளுக்கும் தந்தருளி அவர்களைக் குறித்து சாட்சி கொடுத்தார் (அப். 15:8). கிருபையினாலே புறஜாதிகள் எப்படி இரட்சிக்கப்படுகிறார்களோ, அப்படியே யூதர்களும் கிருபையினாலே தான் இரட்சிக்கப்படுவோமென்று நம்பினர்கள் அப். 15:11.

ஆதியிலே பெந்தெகொஸ்தே நாளில், யூத கிறிஸ்தவ விசுவாசிகள் ஓரிடத்திலே ஒருமனப்பட்டுக் கூடிவந்தபோது, பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு ஆவியானவர் தங்களுக்குத் தந்தருளின வரத்தின்படி வெவ்வேறு பாஷைகளிலே பேசத் தொடங்கினர்கள் (அப். 2:1-4) கொர்நெலியு விட்டிலே கூடிவந்து வசனத்தைக் கேட்ட புறஜாதியார் விசுவாசிக்க திராணியுள்ள பெரியவர்கள் பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட்டு, பற்பல பாஷைகளைப்பேசி தேவனை புகழ்ந்த படியால் தான் பரிசுத்த ஆவியை புறஜாதியாரும் பெற்றிருக்கிறார்கள் என்பதை அறிந்தார்கள் அவர்கள் பற்பல பாஷைகளை பேசினதை கர்த்தர் அவர்களை தமக்கு சொந்த ஜனமாக அங்கீகரித்துள்ளார் என்பதற்கு சாட்சியாக இருக்கிறது என்பதை புரிந்து கொண்டார்கள். புறஜாதி கிறிஸ்தவர்கள் பற்பல பாஷைகளை மாத்திரம் பேசாதிருப்பார்களானல், யூத கிறிஸ்தவர்கள் அவர்களை வேறுபடுத்தியே வைத்திருப்பார்கள். அவர்கள் பற்பல பாஷைகளை பேசின படியால்தான் யூத கிறிஸ்தவர்களுக்கும், புறஜாதிகிறிஸ்தவர்களுக்கும் யாதொரு வித்தியாசமில்லை என்பதை கண்டு கொண்டார்கள் (அப். 15:9). ஆனபடியால் தங்களோடே சேர்த்துக் கொண்டார்கள்.

பரிசுத்த ஆவியின் அபிஷேகம் நடந்ததாக புதிய ஏற்பாட்டிலே அப்போஸ்தல நடபடிகளில் நான்கு இடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன (அப்.2:1-4). இது கி. பி. 33ல் இயேசு கிறிஸ்து பரத்துக்கு எழுந்தருளிப்போன பத்து நாட்கள் கழித்து நடந்த சம்பவமாகும். அடுத்த சம்பவம் அப். நடபடிகள் 8:15-18 சமாரியாவில் நடந்த சம்பவமாகும். சுவிசேஷகராகிய பிலிப்பு சென்று சமாரியரை கிறிஸ்துவண்டை வழிநடத்த அவர்களுக்கு ஸ்நானம் கொடுத்தார். இந்த செய்தியைக் கேள்விப்பட்டு பேதுருவும் யோவானும் அங்கே அந்த மக்களைக் காணச்சென்றிருந்த பொழுது அவர்கள் இயேசுவின் நாமத்தினலே ஞானஸ்நானம் மாத்திரம் பெற்றிருக்கிறவர்களாகக் கண்டு, அவர்கள் பரிசுத்த ஆவிபெறவில்லையென்று கண்டு அவர்களுக்காக ஜெபம் பண்ணி அவர்கள் தலைமேல் கைவைத்துபோது அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டார்கள். இதை சீமோன் கண்டான். அது எல்லாருக்கும் அது வெளிப்படையாய்த் தெரிந்தது. (அப். 8:14-17). இது கி. பி. 40ல் நடந்தது. அதாவது பெந்தெகொஸ்தே சம்பவத்திலிருந்து ஒரு எட்டு வருஷங்களுக்கு பின்பாக நடந்த சம்பவமாகும். அடுத்த சம்பவம் அப். 10-ம் அதிகாரம் புற ஜாதியாராகிய கொர்நெலியு வீட்டில் நடந்த சம்பவமாகும். இது அப். 8-ம் அதிகாரத்திலிருந்து சுமார் எட்டு வருஷங்களுக்குப் பின்பு நடந்த சம்பவமாகும். அதாவது கி. பி 48 என்று சொல்லலாம். புற ஜாதியார் கர்த்தருடைய வசனத்தை விசுவாசித்த போது, கர்த்தருடைய ஆவியானவர் இறங்கினர். அவர்கள் எல்லாரும் பரிசுத்த ஆவியை பெற்றுக்கொண்டு பற்பல பாஷைகளைப் பேசினர்கள். நம்மைப் போல பரிசுத்த ஆவியைப் பெற்ற இவர்களுக்கு தண்ணீரை விலக்கலாமா

என்று சொல்லி ஞானஸ்நானம் கொடுத்து திருச்சபையோடு கூட பேதுரு அவர்களை அங்கீகரித்துக் கொண்டார். அடுத்த சம்பவம் அதிலிருந்து கிட்டதட்ட எட்டு வருஷங்களுக்குப் பின்பாக சுமார் கி. பி. 56ல் இருக்கலாம். அப். 19-ம் அதிகாரத்தில் இச்சம்பவம் நடைபெறுகிறது. யோவானின் சீஷர்கள் அல்லது யோவான் கொடுத்த ஞானஸ்நானத்தைப் போல ஞானஸ்நானம் அப்பொல்லோ மூலமாகப் பெற்ற 12 பேர்கள் அபிஷேகம் பெற்ற சம்பவம் எழுதப்பட்டிருக்கிறது. அவர்கள் அப்பொல்லோ மூலம் ஞானஸ்நானம் பெற்றிருந்தார்கள். இயேசு கிறிஸ்துவை விசுவாசித்திருந்தார்கள். ஆனால் அவர்கள் பரிசுத்தஆவியை பெற்றிருக்கவில்லை. பரிசுத்த ஆவியைப்பற்றித் தெளிவான உபதேசம் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. ஆனபடியினால் அப். பவுல் அவர்களுக்கு மறுபடியும் பரிசுத்தஆவியைப் பற்றித் தெளிவான உபதேசம் கொடுத்து, அவர்களை மறுபடியும் ஞானஸ்நானப் படுத்தி, அவர்களுக்காக ஜெபித்து, அவர்கள் தலையில் கைவைத்த பொழுது அவர்கள் பற்பல பாஷைகளைப் பேசித் தீர்க்கதரிசனம் சொன்னார்கள். இப்படியாக பரிசுத்த ஆவியின் அபிஷேகம் நடந்த சம்பவங்கள், கூட்டங் கூட்டமாக நடந்த சம்பவங்கள் நான்கு இடங்களில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.

சிலர் இதைக்குறித்து கீழ்க்காணுமாறு சொல்லுகிறார்கள். அப். 2-ம் அதிகாரத்தின் சம்பவம் யூதர்கள் திருச்சபையாய் சேர்த்துக் கொள்ளப்பட்டதற்காக அந்நிய பாஷை அடையாளத்துடன் அபிஷேகம் நடைபெற்றது என்றும், அப். 8-ம் அதி. சமாரியரை திருச்சபையில் சேர்த்துக் கொள்கிறதற்காக அந்த அடையாளம் நடந்தது என்றும், அப். 10-ம் அதிகாரம் புறஜாதிகளை திருசபையில் சேர்த்துக் கொள்கிறதற்காக அந்த சம்பவம் நடந்தது என்றும், 19-ம் அதிகாரம் யோவானின் சீசர்களை சபையில் சேர்த்துக் கொள்வதற்காக அந்த சம்பவங்கள் நடந்தது என்றும் உலக ஜனத்தொகைகளை தேவன் யூதர்கள் என்றும், சமாரியர்கள் என்றும், புறஜாதி என்றும், யோவானின் சீஷர்கள் என்றும் பிரிக்கிறார். இந்த நான்கு பிரிவுக்குள்ளாக உலகத்திலுள்ள மக்கள் எல்லாரும் அடங்கும். அதற்குப் பின்னால் ஒருபோதும் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்திற்கு அந்நியபாஷை அடையாளம் என்று எழுதவில்லை அப்படி சம்பவம் நடந்ததாக எழுதப்படவில்லை ஆனபடியால், இப்பொழுது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்கள் பரிசுத்தஆவி பெற்றுக் கொண்டார்கள். அந்நிய பாஷை அடையாளம் தேவையில்லை அல்லது அவசியமில்லை அல்லது அது சரியில்லை என்று இவர்களுடைய வியாக்கியானம். இது மகா தவறாகும். ஏனென்றால் பரிசுத்தஆவியின் அபிஷேகம் பெற்ற இன்னொரு சம்பவம் அப். 9-ம் அதிகாரம் அப். பவுலுடைய வாழ்க்கையில் காணப்படுகிறது.

அனனியா என்னும் சீசர் பவுல் (சவுல்) தங்கியிருந்த வீட்டுக்குள் பிரவேசித்து அவன் மேல் கையை வைத்து "சகோதரனாகிய சவுலே நீ வந்த வழியில் உனக்குத் தரிசனமான இயேசுவாகிய கர்த்தர் நீ பார்வையடையும் படிக்கும் பரிசுத்த ஆவியினால் நிரப்பப் படும்படிக்கும் என்னை அனுப்பினார் என்றான்" என்று சொல்லி வாசிக்கிறோம். அப். பரிசுத்த பவுல் யூதனென்று நாம் எல்லாரும் அறிவோம். ஆனாலும் அவர் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்த பொழுது பரிசுத்த ஆவியைப் பெற்றிருக்கவில்லை. அனனியா போய், ஜெபம் பண்ணி, அதற்காக அவர் தலையில் கைவைத்தபோது அவர் பரிசுத்தஆவியைப் பெற்றுக் கொண்டார். அப்படி அப். பவுல் I கொரி. 14:18-ம் வசனத்தில் சொல்லும் பொழுது நான் உங்கள் எல்லாரையும் காட்டிலும் அதிகமாக பாஷைகளைப் பேசுகிறேன் என்று சொல்லியிருக்கிறார். ஆனபடியினால், அப். 2-ம் அதிகாரத்தின் சம்பவமானது எந்தக்காலத்திலுள்ள, எந்தமக்களுக்கும் அது பொருந்தும். ஒருவன் பரிசுத்த ஆவியின் அபிஷே

கம் பெற்றுக் கொள்ளும் பொழுது அந்நிய பாஷை அடையாளமும் வல்லமையும் அவனில் உண்டாகும். பரிசுத்த ஆவியின் அபிஷேகம் காணத்தக்கதாயும் கேட்கத்தக்கதாயும் இருக்கும். அவர்கள் பரிசுத்த ஆவி பெற்றுக் கொள்ளும் பொழுது அவர்களுடைய சரீரத்தில் உண்டாகிற அசைவு காணக்கூடிய சம்பவமாகும். அவர்கள் அந்நியபாஷை பேசுகிறது கேட்கக்கூடிய சம்பவமாகும். அப். 2-ம் அதிகாரத்திலே பேதுரு தன்னுடைய பிரசங்கத்தில் சொல்லும் போது அப். 2:33 ல் அவர் தேவனுடைய வலது கரத்தினாலே உயர்த்தப்பட்டு, பிதா அருளிய வாக்குதத்தத்தின்படி பரிசுத்த ஆவியைப் பெற்று, நீங்கள் காண்கிறதும், கேட்கிறதுமாகிய இதைப் பொழிந்தருளினர். ஆனபடியினால் ஒரு மனிதன் பரிசுத்த ஆவியானவரைப் பெற்றுக்கொள்கிறது காணத்தக்கதாகவும், கேட்கத்தக்கதுமான சம்பவமாக அது இருக்கும். இல்லையென்றால் அவன் பரிசுத்த ஆவி அபிஷேகம் பெற்றுக் கொள்ளவில்லை.

ஒரு மனிதன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறதும், மனந்திரும்புவதும் அவருக்கு ஒப்புக்கொடுக்கிறதும் பரிசுத்த ஆவியானவருடைய தூண்டுதல் நடத்துதல் மூலமாகவே ஏற்படுகிறது. பரிசுத்த ஆவியானவருடைய தூண்டுவின்றி, அநுக்கிரகமின்றி யாரும் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கமுடியாது (I கொரி. 12:3). மேலும், பரிசுத்தஆவியின் அபிஷேகத்திற்கு அந்நியபாஷையே அடையாளம் என்று சொல்லி நாம் திட்டமாக, அனுபவரீதியாக அறிகிறோம். அதைப்பற்றிய சத்தியத்தைத் தெளிவாக அறியாதவர்கள் அதைப்பெற்றுக் கொள்வதில்லை. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் தம்மை விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன என்று சொல்லும் பொழுது "நவமான பாஷைகளைப் பேசுவார்கள்" என்று சொல்லி கர்த்தர் திருவுளம் பற்றினதாக மாற். 16:17 ல் நாம் வாசிக்கிறோம். நவமான பாஷைகளைப் பேசுவார்கள். இன்றைக்கு, பாஷை வரம் வேண்டாம் என்று சொல்லுகிற சபையார்களில் ஒருவர் கூட பாஷை பேசாமலிருக்கிறது ஆச்சரியப்படத்தக்க விஷயம். காரணம் அவர்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றுக் கொள்ளவில்லை என்பதாம்.

ஒருவன் பரிசுத்த ஆவி பெற்றதற்கு அடையாளம் அவன் பரிசுத்த ஆவியினாலே பேசும் பற்பல பாஷையே. மற்றபடி நான் பரிசுத்த ஆவி பெற்றுள்ளேன் என்று ஒருவன் சொல்வதை எப்படி நம்புவது? ஒருவனுக்கு பரிசுத்த ஆவியின் வரம் அநுக்கிரகம் செய்யப்பட்டுள்ளது என்பதை எப்படிக் கண்டுக் கொள்வது? ஒருவனை தேவன், தாம் ஏற்றுக் கொண்டதைக் குறித்து சாட்சி கொடுக்காதிருக்க அவனை எப்படி திருச்சபையின் அங்கமாய் சேர்த்துக் கொள்வது? தேவன் சாட்சி கொடுக்காத ஒருவனுக்கு எப்படி கர்த்தருடைய பந்தியில் பங்கு கொடுப்பது?

பிரியமானவர்களே, இந்நாட்களில் கிறிஸ்துவின் ஆவியில்லாத அநேக போலி கிறிஸ்தவர்கள், நான் விசுவாசித்த போதே பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டேன் என்கிறார்கள். பரிசுத்த ஆவியின் கிரியையில்லாமலா விசுவாசித்தேன் என்கிறார்கள். பரிசுத்த ஆவி இல்லாமலா பிரசங்கிக்கிறேன் என்கிறார்கள். பரிசுத்த ஆவி இல்லாமலா ஆவியின் கனி இருக்கிறது என்கிறார்கள். பரிசுத்த ஆவி பெறாமலா எவ்வளவு, எவ்வளவு பரிசுத்தவான்கள் மறைந்தார்கள் என்கிறார்கள். இவர்கள் கொடுக்கிற சாட்சியை நாம் ஏன் அங்கீகரிக்க வேண்டும்? இவர்கள் பரிசுத்தஆவி பெற்றவர்கள் என்று நாம் ஏன் விசுவாசிக்க வேண்டும்?

இயேசு கிறிஸ்துவை விசுவாசியுங்கள், பரிசுத்த ஆவி பெற, பிதாவின் வாக்குத்தத்தம் நிறைவேற ஜெபியுங்கள். பற்பல பாஷைகளை நீங்கள் பேசுவீர்கள். இதுவே

தேவன் உங்களுக்கும், பரிசுத்த ஆவியின் வரம் தந்தருளினர் என்பதற்கு இறைவனுடைய சாட்சியாக இருக்கும்.

ஒருவன் பரிசுத்த ஆவி பெற்றதற்கு மற்றவர்கள் காணும் அடையாளம் அவனிலிருந்து பரிசுத்த ஆவியானவர் பேசும் பரியாச உதடு, பற்பல பாஷைகளே என்பது சத்தியமும் உண்மையும் அனுபவமுமாகும்.

□□□□□□□□□□□□□□□□□□□□□□

"அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு ஆவியானவர் தங்களுக்கு தந்தருளின வரத்தின்படியே வெவ்வேறு பாஷைகளிலே பேசத் தொடங்கினார்கள்" அப். 2:4

□□□□□□□□□□□□□□□□□□□□□□

## வேத பாடம் (தொடர்ச்சி)

### எண்ணாகமம்

**எண்ணாகம புஸ்தகத்துடைய நோக்கம் :-**

எண்ணாகமம் என்று இதற்கு பெயர் சூட்டியிருக்கிற பிரகாரம் இரண்டு தடவை இஸ்ரவேல் புத்திரர்களின் ஜன கணிதம் (Census) எடுக்கப்பட்ட விபரம் இதில் எழுதப்பட்டிருக்கிறது. முதலாவது ஜனத்தொகை எடுக்கப்பட்டது. இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து புறப்பட்ட இரண்டாவது வருஷமாகும். இது எண்ணாகமம் 1:1–10:36 முடிய இதனுடைய விபரம் காணப்படுகிறது. உடனே கானானுக்குள் பிரவேசித்து, கானானை சுதந்தரித்துக் கொள்ளும் முன்பாக இரண்டாம் விசை ஜன கணிதம் எடுக்கப்பட்டது. (எண். 26:1–65 ல் இது குறிப்பிடப்பட்டுள்ளது. முதல் தடவை அவர்களுக்கு எண்ணிக்கை எடுக்கப்பட்டவுடனே அவர்கள் கானானை சுதந்தரித்துக் கொள்ள கட்டளை உண்டாயிற்று. ஆனால் அவர்கள் அதை மறுத்து விட்டார்கள் எண். 13:1–14:45). இதனிமித்தம் வனாந்தரத்தில் அவர்கள் சுற்றி, சுற்றி அலையவேண்டியதாயிற்று. 38 வருஷங்களுக்குப் பின்பு மறுபடியும் அவர்களை எண்ணும்படியாக கர்த்தர் மோசேக்கு கட்டளையிட்டார். முதல் தடவை எண்ணும் பொழுது மோசேயும் ஆரோனும் எண்ணினர்கள். இரண்டாம் தடவை எண்ணும் பொழுது ஆரோன் இல்லை. மோசேயும், ஆரோனின் குமாரனாகிய எலெயாசரும் எண்ணினார்கள் இந்த எண்ணிக்கை இரண்டு தடவை இந்த புஸ்தகத்தில் எடுக்கப்பட்டிருக்கிறதற்கு ஒரு நோக்கம் உண்டு. எகிப்திலிருந்து புறப்பட்ட எல்லாரும் இரண்டாம் தடவை எண்ணிக்கை எடுக்கும் பொழுது இல்லை. எகிப்திலிருந்து புறப்பட்ட 20 வயதிற்கு மேற்பட்ட யுத்த புருஷரான ஆண்கள் அநேகமாக வனாந்திரத்தில் மரித்துவிட்டார்கள். நாங்களும், எங்கள் பிள்ளைகளும் கொள்ளையாகும்படிக்கு எங்களை வனாந்திரத்தில் அழைத்து வந்தீர்களோ என்று அவர்கள் கேட்ட அவர்களுடைய பிள்ளைகள் இரண்டாம் எண்ணிக்கையில் இருந்தார்கள் அவர்களே கானானுக்குள் பிரவேசித்தார்கள். எப்புனேயின் குமாரனாகிய காலேபும், நூனின் குமாரனாகிய யோசுவாவும் தவிர நாம் முதல் எண்ணிக்கையில் எண்ணப்பட்ட மக்களை இரண்டாம் எண்ணிக்கையில் காணுவதில்லை. ஆவிக்குரிய வாழ்க்கையிலும் ஆரம்பிக்கிற அநேகர் கவனமாக நடந்துக் கொள்ளாவிட்டால் இப்படி அவர்களுக்கும் சம்பவிக்கும் என்பதை எச்சரிக்கும்படியாக எண்ணாகம புஸ்தகம் நமக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

எண்ணாகமமானது மிகவும் விசேஷித்த ஆசீர்வாதமான புஸ்தகமாகும். எண்ணாகமத்தில் நாம் அநேக இரகசியங்களை பார்க்கிறோம்.

## எண்ணாகமத்தின் பொருளடக்கம்:-

### 1) பிரயாணத்திற்கு ஆயத்தப்படல்

a) இஸ்ரவேலர்களுடைய எண்ணிக்கை.

1] எண்ணப்பட்ட இஸ்ரவேலர்கள் எண். 1:46-54
2] கூடாரம் மடிக்கும் விதம் ஒழுங்கு எண். 2:1-34
3] லேவியருடைய Census எண். 3:1-4:41

b) கடைசியான ஆயத்தம் எண். 5:1-9:23

1] பலவித கட்டளைகளும் பலிகளும் எண். 5:1-7:89
2] லேவியர்கள் பிரதிஷ்டை எண். 8:1-26
3] பஸ்கா ஆசரிப்பும், அக்கினி ஸ்தம்பமும் எண். 9:1-23

## எண்ணாகமத்தினுடைய விளக்கங்கள்:-

எண்ணாகமம் மிகவும் முக்கியமான புஸ்தகம் ஆகும். இஸ்ரவேலர்களுடைய சரித்திரத்தில் 38 வருஷ வனாந்திர பிரயாணங்கள் இதில் குறிப்பிடப்பட்டிருக்கிற படியால் இதனை கவனமாய் ஆராய்ந்து இதில் காணப்படுகிற குறைகள் புதிய ஏற்பாட்டின் மக்களாகிய நம்முடைய வாழ்க்கையில் உண்டாகாதபடி கவனமாய் தவிர்க்க வேண்டும். இறைவன் எண்ணும் பொழுது ஆரம்பத்திலிருந்தது போல முடிவு மட்டும் நாம் தேவ சமுகத்தில் நிலைத்திருந்து தேவ ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும். எண்ணாகமம் எண்களினால் நிறைந்திருக்கிறதினால் சிலருக்கு அது படிப்பதற்கு அவ்வளவு மனமிருக்காது, ஆனால் கருத்தூன்றி படிக்கிறதினால் அநேக ஆசீர்வாதங்களையும், நன்மைகளையும் நாம் பெற்றுக் கொள்வோம்.

[தொடரும்.]



"என்னுடைய தாசனாகிய காலேப் உத்தமமாய் என்னை பின்பற்றி வந்தபடியினாலும், அவன் போய்வந்த தேசத்திலே அவனை சேரப்பண்ணுவேன்; அவன் சந்ததியார் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்" எண். 14:24



# கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்.

கடந்த 1992-ம் வருடம் மே மாதம் 25 முதல் ஜுன் மாதம் 4 ந் தேதி முடிய கொடைக்கானல் B. L. SHED ல் உள்ள நம்முடைய ஆலயத்தில் புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு மிகவும் வெற்றிகரமாகவும், ஆசீர்வாதமாகவும் நடந்து முடிந்தது. அதற்காக பிதாவாகிய தேவனை ஸ்தோத்த ரிப்போமாக! இந்த ஊழியர் மாநாடு விசேஷித்த அற்புத அடையாளங்களுடையதாக விளங்கினது. கர்த்தருடைய ஊழியர்கள் கர்த்தருக்குள் பெலன் கொண்டு, வீறுகொண்டு எழும்ப இது மிகவும் பிரயோஜனமாக இருந்தது. அநேக புதிய ஊழியர்கள் ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்து சேர்ந்து விட்டார்கள் ஊழியர்களுக்கு அதிகாரங்களும், வல்லமைகளும் பகிர்ந்தளிக்கப் பட்டன. இந்த ஊழியர் மாநாட்டின் வெற்றிக்காக ஜெபித்த, கொடுத்த, தியாகம் செய்த, உழைத்த, அதற்கான ஏற்பாடுகள் செய்த, பற்பல விதத்திலேயும் பணி செய்த எல்லா மக்களையும், ஊழியர்களையும் தேவன் ஆசீர்வதிப்பாராக! திருச்சபையார் ஊழியர் மாநாட்டை தங்களுடைய ஜெபத்தினாலும், தியாகங்களினாலும் தாங்கினதற்காக கர்த்தருக்கு நன்றி, ஸ்தோத்திரம். கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். ஊழியர் மாநாடு வெற்றிகரமாக நடந்து முடிந்தது. தொடர்ந்து கர்த்தர் தம்முடைய கிரியைகளைக் காண்பிப்பாராக! ஆமென்.



# இந்து மதம் (தொடர்ச்சி)

சில புத்தியுள்ள இந்துக்கள் தங்கள் வேதங்களினாலும் சாஸ்திரங்களினாலும் பிரயோஜனமில்லையென்றும் மனிதர்கள் கெட்டழிந்து போகிறார்கள் என்று கண்டு மிகவும் கவலைப்பட்டு சத்தியத்தையறிந்து தங்களாலானமட்டும் பிரயாசப்பட்டார்கள். அவர்களில் ஒருவராகிய பத்திரகிரியார் சொல்லுவதையும் கேளுங்கள்.

"சாத்திரத்தை சுட்டு சதிர்மறையை பொய்யாக்கி
சூத்திரத்தைக் கண்டு சுகம் பெறுவது எக்காலம்?"

இந்த சூத்திரமாகிய சத்திய வேதம் உலகத்துக்கு சற்குருவாகிய இயேசு கிறிஸ்துவானவர் யாவருக்கும் பொதுவாய் அருளிய வேதமே. இந்து வேதங்களை ரிஷிகளே உண்டாக்கினார்கள். கடவுள் உண்டாக்கவில்லை. வேதங்களை ரிஷிகள் உண்டாக்கியிருக்க, அவைகளை கடவுள் உண்டாக்கினார் என்பதற்கு நியாயம் ஒப்படியென்றால், ரிகண்டில் பிராமணர்களை பிர்மா என்று பிரித்துக் காட்டியிருக்கிற தந்திரந்தான். இதனால் பிராமணர்களாகிய பிரமாக்கள் தங்களை சிருஷ்டிக் கர்த்தாவாகிய பிரமாவுக்கு சமமாக்கி அவர் வாயினின்று வேதம் வந்ததாக மாறுபாடாய் சொல்லியிருக்கிறார்கள். கீழ்க்காணும் சுலோகத்தில் ஹவிபோகி என்னும் ஹவி தன்னை பிர்மா என்று சொல்லியிருக்கிறார் இதைக் கூர்ந்து கவனிக்கவும் இதனால் பிராமணர்கள் பிரமாக்களாய் அழைக்கப்பட்டு ரிஷிகளாகிய பிராமணர்களால் வேதம் வெளிப்பட்டது உண்மையென்றும் கடவுளால் இந்து வேதங்கள் உண்டாகவில்லையென்பதும் தெளிவாகிறது. ஆராய்ந்து அறிய முடியாத பார்ப்பனரல்லாத மற்றவர்கள் பிர்மா என்ற தப்பர்த்தத்தைக் குறியாய்க் கொண்டு கடவுளால் உண்டாக்கப்பட்ட வேதம் என்று இன்னும் பேரவி நம்பிக்கைக் கொண்டிருக்கிறார்கள்.

சுலோகம் :

எம், ஸர்மா, நமீன், தேவி, வாக்கி, வாங்கிய வார்த்தை உத்தரம், ராம சரிதம்; தற்பரனீதம் பிரச்சதோ வேதம் முகத்திலிருந்துவந்ததென்பதை வியாக்கியானசிதைவு வார்த்தைகளேயன்றி உண்மையல்ல. இவற்றுள் ஆச்வாலயனரால் செய்யப்பட்ட சிரவுத சூத்திரம் என்பது யாகம் செய்கிற விதிமுறைகளை தெரிவிப்பது. அவையாவன:—

1. ராசியம், 2. கவாமயனம், 3. கோசீயம், 4. அசுவமேதம், 5. அக்கிர சக்கிரது, 6. சாகமேதம், 7. பஞ்சசாகிரதீயம், 8. விஸ்வகீத், 9. பவுண்டரீகம், 10. பாரதவாத சகாசம், 11. சமூப்க்கரசித்திரம், 12. மகப்ரதம், 13. ராத்திரி சத்திரம், 14. சதாத்திரம், 15. ஸ்தோமா, 16. துவாசிபத்து ரசம், 17. சகஸ்ரம் விக்ஸரம் என்பனவைகளாம்.

இந்த யாகங்கள் இதைப் போன்ற மற்றுமுள்ள யாகங்களின் முன் சொன்ன நான்கு அக்கினிகளில் காகத்தியம், ஆகவனியம். தட்சணாக்கினி இன்னும் மூன்று அக்கினியை ஆராதிக்கும் அக்கினி தோத்திரத்தாரே செய்ய வேண்டுமாம். இந்த யாகங்களைப் பற்றியவிவரங்களைச் சொன்னால் மிகவும் பையித்தியக்காரத்தனமாய் இருக்கும். (உ-ம்) அசுவமேதயாகம். அசுமேதயாகத்தின் அருவருப்பை இங்கே எழுதவே கை கூசுகிறது. அசுவம்-குதிரை மேதம்-சேர்க்கை. அதாவது, குதிரையுடன் சேர்தல் என்றர்த்தம். அசுவமேத யாகத்தில் யாக பசுவாகிய குதிரையை எஜமான் மனைவியாகிய மகிஷியோடு இயற்கைக்கு மாறான வகையில் புணர்ச்சி செய்ய விடுதலாம். இதைப் போன்ற மற்ற பௌவ

டரிக முதலிய பல யாகங்கள் இந்துக்களுடைய வேதத்தில் இருக்கிறது. இந்தப் பல யாகங்களை, தேவர்களும், ரிஷிகளும் மனிதர்களும் செய்து முடித்தாலன்றி வேறு வகையில் முக்தி பதவி அடையவே முடியாது என்பது வேத அந்த இரகசியம். இவ்வித யாக பலிகளை பராபர வஸ்துவாகிய தேவன் மனிதரிடத்தில் தமக்கு செய்யும்படி எதிர்பார்த்து இவ்வித யாகங்கள், பலிகளுக்கு பலனாக முக்தியளிப்பார் என்று நம்பலாமா? இவ்வித அருவருப்பான யாக பலிகள் பரிசுத்த தேவன் ஏற்றுக்கொள்ளும் யாகமா? இவ்வித யாகபலிகளைச் செய்வோர் இன்று எத்தனை பேர் இருக்கிறார்கள் என்று சொல்லமுடியுமா? அல்லது இவ்வித யாக பலியால் முக்தி சேர்வோர் எத்தனை பேருண்டு என்றாவது சொல்ல முடியுமா? இதெல்லாம் கள்ளக் குருக்களின் வஞ்சிப்பான போதனை என்பது கண் விழித்து பார்த்து அறிந்துக் கொள்ள வேண்டியது மனிதனின் கடமை.

புலால் தின்போரை சூத்திரர் தீண்டாதார் என்று சொல்லும் கள்ளக் குருக்கள் மறைமுகமாக விருந்தினருக்கு பசுவினுடைய மாம்சத்தை நெய்யில் பொரித்து தேனிட்டு புசிக்கக் கொடுப்பதும் இதற்கு பெயர் மதுவர்க்க வழங்கல் என்பது. யாக பலிகளில் கொன்ற ஜீவன்களின் இறைச்சியை பங்கு போட்டு கொண்டு சாப்பிடுவது நியாயமா?

பொதுவாக இந்து மார்க்கத்தின் தீய பழக்கங்களை ஆங்கில அரசாங்கத்தார் சட்டம் இயற்றி, அடக்கி அவைகளை நிறுத்தி வைத்தார்கள். ஆனாலும், மறுபடியும் இந்துக்கள் அவைகளை நடைமுறையில் கொண்டுவர வெகுவாக பிரயாசப்பட்டு தங்களுடைய கலாச்சாரத்தை விட்டுவிடக் கூடாதென்று சொல்லி அவர்கள் கூச்சலிடுகிறார்கள். இவைகளைக் குறித்து சுருக்கமாகச் சொல்லுகிறோம் பொதுவாக இந்து மதத்தைப்பற்றி விரிவாகக் சொல்லப் போதுமான நேரமோ, இடவசதியோ இல்லை. ஆனாலும், மனுமக்களுக்கு ஒரு மதத்தைப் பற்றி சொல்லும் பொழுது அதிலுள்ள நிறை குறைகளைக் காட்ட வேண்டியதும் அவசியம். வேதம் என்று சொல்லுவதில் ஆங்காங்கு வைக்கோற் போருக்குள் ஊசி கிடப்பது போல் சில நல்லக் கருத்துக்கள் இருந்த போதிலும் நாலு வேதம் ஆறு சாஸ்திரம் என்பது மாயையே.

## இந்து மதத்தில் காணப்படுகிற பலவித பொருத்தனை பலிகள்:

### இரத யாத்திரை

பெரும் பட்டணங்களில், நகரங்களிலுள்ள விசேஷித்த புண்ணிய க்ஷேத்திரங்களில் இரத உற்சவம் என்னும் தேர்த்திருவிழா கொண்டாடுவது இந்து சமயபக்தியில் ஒருபழக்கம். ஜகநாதபுரத்தில் இவ்வித இரத உற்சவ காலங்களில் தேர் மீது வலம் வருகையில் இவ்விழாவில் கலந்துக் கொள்ளும் பக்தரில் பலர், தங்களிலுள்ள பரம்பரை சொற்குருக்கள் போதித்த மாருட்டமான பாதக குருட்டு நம்பிக்கையின்படி, கைலாய பதவி சேரலாம் என்னும் ஆசை மிகுதியால் போய்க் கொண்டிருக்கும் தேர்ச்சக்கரத்தின் அடியில் குறுக்கிட்டு விழுந்து நசுங்கி உயிரிழப்பார்கள். இவ்விதமான பழக்கங்கள் இப்பொழுது உயிர்விட யாரும் முன் வரவில்லை. ஆனாலும், இந்த இரத யாத்திரையின் முக்கிய நோக்கம் முக்தி சேர்க்கிறது தான். இவ்விதமான பொய் நம்பிக்கைகாக உயிரை விட்டு மாய்ந்த பயங்கர கோர காட்சியை கண்ட ஆங்கில அரசாங்கம் சட்டம் இயற்றி, இத்துர்ப்பழக்கத்தை அறவே நீக்கிவிட்டார்கள்.

(தொடரும்.)

"ஆனபடியினால் நீங்கள் மறுபடியும் அடிமைத்தனத்தின் நுகத்துக்குட்படாதிருங்கள்......" கலா. 5:1.

# கிருபை வரங்கள் (தொடர்ச்சி)

## வெளிப்படுத்தலின் வரங்கள்:

மனநிலை மண்டலம் (உள்ளம்).

ஞானத்தின் வசனம், அறிவை உணர்த்தும் வசனம், ஆவிகளை பகுத்தறிதல் இவை மூன்றும் இம்மண்டலத்தில் உட்பட்ட வரங்களாகும். அவைகளை ஒவ்வொன்ருக கவனிப்போம்.

**1) ஞானத்தின் வசனம். [Word of wisdom]**

ஞானத்தின் வசனம் இயற்கைக்கு அப்பாற்பட்ட தெய்வீக ஞானத்தின் வெளிப்படுத்தல். மனித ஞானம் ஞானத்தின் வசனம் என்ற வார்த்தை வேறுப்படுத்த சிறிது கடினம். எனினும் இவை இரண்டிற்கும் எவ்வித தொடர்பும் இல்லை. மனித ஞானம் உதவாத நிலைகளில் தெய்வீக ஞானம் தேவையுள்ள சமயங்களில் வெளிப்படும். அப்பொழுது ஆவியானவர் ஒருவனுக்கு தெய்வீக ஞானத்தை ஏவுதலின் மூலம் வெளிப்படுத்தலாம். இனி இவ்வரத்தை தேவன் எவ்வித சந்தர்ப்பங்களில் கொடுக்கிருர் என்பதை கவனிப்போம்.

**1. எதிர்ப்பு நிலைகளில் நிலைத்து நிற்க.**

இயேசு தமது சீஷர்களை விட்டு பரமேறுமுன் அவர்களுக்கு வரவிருந்த எதிர்ப்புகளைப் பற்றி இங்ஙனம் கூறினர். என் நாமத்தினிமித்தம் அவர்கள் உங்களைப்பிடித்து ஜெப ஆலயங்களுக்கும், சிறைச்சாலைக்கும் ஒப்புக் கொடுத்து ராஜாக்கள் முன்பாகவும், அதிபதிகள் முன்பாகவும், உங்களை இழுத்துத் துன்பப்படுத்துவார்கள். ஆனாலும், அச்சந்தர்ப்பங்களில் என்ன உத்தரவு சொல்வோமென்று கவலைப்படாதிருக்கும் படி உங்கள் மனதில் நிர்ணயம் பண்ணிக் கொள்ளுங்கள். உங்களை விரோதிக்கிறவர்கள் ஒருவரும் எதிர்த்து பேசவும், எதிர்நிற்கவும் கூடாத வாக்கையும் ஞானத்தையும் நான் உங்களுக்குக் கொடுப்பேன் [லூக். 21:12,14,15]. தேவ மக்கள், தேவனுடைய நாமத்தினிமித்தம் எதிராளிகள், அதிகாரிகள் ஆகியோர் முன் நிற்க நேரிடுங்கால் அங்கே என்ன சொல்லவேண்டும் என்பதை முன்னரே ஆலோசித்து நிர்ணயம் பண்ணி கூறுவது கூடாதகாரியம். ஏனெனில் அங்கு கேட்கப்படும் கேள்விகள் எவைகளென்று நமக்குத் தெரியாது. ஆகவே, ஆவியானவர், அவ்வித சந்தர்ப்பங்களில் ஞானத்தின் வசனத்தைப் பகிர்ந்து கொடுப்பதின் மூலம் உதவி செய்வார். தெய்வீக ஞானம், பதில் சொல்பவர்கள் நாவின் மூலம் வெளிப்படும். இந்த ஞானத்தை ஒருவர் தடை செய்யவோ எதிர்க்கவோ முடியாது.

**2. வசனத்தை பேச (உரைக்க):**

ஸ்தேவான் கர்த்தரைக் குறித்து பிரசங்கிக்க, பலர் அவருடன் வாக்குவாதம் செய்ய எழும்பினர். ஆனல், அவர் பேசின ஞானத்தையும், ஆவியையும் எதிர்த்து நிற்க அவர்களால் முடியாமற் போயிற்று (அப். 6:10). பேதுருவின் பிரசங்கத்தைக் கேட்டு மக்கள் ஆச்சரியமடைந்தனர். ஏனெனில், பேதுரு படிப்பறியாதவர் என்றும், பேதமையுள்ளவரென்றும் ஜனங்கள் அறிந்திருந்தார்கள். (அப். 4:13). படிப்பறியாத அவர் உரைத்த ஞானத்தின் வசனம் மக்களை ஆச்சரியத்தில் ஆழ்த்திற்று. குறை சொல்லும் மனப்பான்மையுடன் கூட்டங்களில் சிலர் ஞானத்துக்கு எதிர்பேசாமல் திரும்பிச் செல்வது வழக்கம். ஞானத்தின் வசனம் பெற்ற ஒரு தேவ ஊழியரின் பிரசங்கத்தின் முன் உலக ஞானம் வழிவிட்டு செல்கிறது. ஏனெனில், பிரசங்கியார் கற்று வைத்துள்ள ஞானமல்ல அது சமயத்தின் போது ஆவியானவர் அருளும்

என்று பாரதவிஜயம் வெளியிட்டுள்ளது. இந்து முன்னணி செயற்குழு கூடி ஜூன் மாதம் 6, 7 ஆகிய தேதிகளில் திருச்சி திருப்பராய்த் துறை ராமகிருஷ்ண தபோவனத்தில் தீர்மானம் நிறைவேற்றினார்களாம். தீர்மானம் நிறைவேற்றி அரசுக்கு அதிர்ச்சி வைத்தியம் கொடுக்க, தமிழ் நாடு அரசுக்கு கிலி பிடித்து விசாரிக்க தொடங்கி தராசும், விஜய பாரதமும் புழுகுகிறவர்களின் கூட்டம் என்று கண்டு அரசாங்கம் விழித்து நிற்கிறது. இந்துக் கூட்டம் என்றால் பொய்யையே ஆதாரமாகக் கொண்டு பொய்யர்கள் கூடி தீர்மானங்கள் நிறைவேற்றுவதும், நாட்டையும் ஏழை எளிய மக்களையும் பாழாக்குவதுமே வழக்கமாகிவிட்டது என்று நல்ல இந்துக்கள் அறிவர். அவர்கள் இந்தக் கூட்டங்களில் கலந்துக் கொள்வது இல்லை. யதார்த்தம் என்ன என்று நல்லவர்கள் அறிவார்கள். சரி, இந்தப் பத்திரிக்கைகள் புதிய எருசலேம் சபைக்கும் ராஜீவ் காந்தியை கொலை செய்த சிவராசனுக்கும் தொடர்பு உண்டு என்றோ, விடுதலை புலிகளுக்கும் புதிய எருசலேம் சபைக்கும் தொடர்பு உண்டு என்றோ நிரூபிக்க முடியுமா? நிரூபிக்க தகுதி உண்டா? புதிய எருசலேம் சபை ஜாதி வெறியை எதிர்ப்பதினால் இதற்கு விரோதமாய் இவர்கள் செயல்படுகிறார்கள். விசாரணைக்கமிஷனும், காவலர், C I D . C B.I இவர்களுக்கு தெரியாத இரகசியம் Mr Shyamக்கும், விஜய பாரதத்திற்கும் வெளிப்பட்டிருக்கிறது என்றால் ஆச்சரியமான காரியமாயிருக்கிறது. சரி, இந்த புழுகினி பத்திரிக்கைகள் தாங்கள் கூறியது பொய்யென தெரியவந்த பிறகாவது தங்கள் தவறை ஒத்துக்கொண்டு தாங்கள் முன் எழுதியது தவறானது என்று தங்கள் பத்திரிக்கையில் வெளியிட்டு ஜனங்களைத் தெளிவு படுத்துவார்களா? வெளியிடுமா? வெளியிடாது. ஒரு பக்கம் சாய்ந்து நிற்பவனுக்கு 'தராசு' என்று பெயர். பொய்யை கூறி, பாரதத்தை ஜெயமடையச் செய்யப்போகிறோம் என்று சொல்லுகிறவர்களுக்கு 'விஜய பாரதம்' என்று பெயர். அகண்ட பாரதம் அடைந்தே தீருவோமென்று பிதற்றுகிறார்கள். இந்தியாவின் ஒரு பகுதி 'தீன்பிகா' குத்தகைக்கு விடப்பட்டு விட்டது. சத்தியமேவ ஜெயதே. உண்மை சொன்னால் உடல் எல்லாம் அரிக்கும். விடுதலைப்புலிகளுக்கும் புதிய எருசலேம் சபைக்கும் எவ்வித தொடர்பும் இல்லை. புதிய எருசலேம் சபை ஆத்மிகமானது. தெய்விகமானது. தேவனுடைய திருச்சபையாகும் இது. இதன் மேல் விழுகிறவன் நொறுங்கிப் போவான்; இது எவன் மேல் விழுமோ அவனை நசுக்கிப் போடும். (மத். 21:44). ஆனபடியினால் தேவ ஜனங்கள் பொய்யர்களைப் பற்றி எச்சரிக்கையாயிருங்கள். இந்தப் பத்திரிக்கைகள் தங்களை உண்மையுள்ளவர்கள் போல காண்பித்து நடிக்கிற நாடக நடிகர்களாகும். இவர்களுக்கு நாம் பயப்பட போவதில்லை.

நாம் ஜெயிப்போம், ஜெயிப்போம். கிறிஸ்தவர்களுக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள், எழும்புகிறவைகள் எல்லாம் முறியடிக்கப்படும். ஏனென்றால் இது தெய்விகம் (சங். 2:1-5).

◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘

"தேவனோடே போர் செய்கிறவர்களாய்க் காணப்படாதபடிக்குப் பாருங்கள் என்றான்" அப். 5:39.

◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘◘

'தேவன் ஒருவரே ...'

# THERE IS ONE GOD...

Regd No. 040088/84
Postal Regd No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

மகிழ்ச்சியான செய்தி

## புதிய எருசலேம் அச்சகம் ஆரம்பம்.

அச்சுக்கலை 12-ம் நூற்றுண்டில் தோன்றிற்று. முதலாவது அச்சடிக்கப்பட்ட புஸ்தகம் பைபிள் (கிறிஸ்தவ வேதாகமம்) ஆகும். புதிய எருசலேம் அச்சகம் **CHIEF PASTOR. N. LAZAR** அவர்களால் 23.7.1992 வியாழனன்று ஜெபம்பண்ணி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினல் ஆரம்பித்து வைக்கப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். **APOSTLE PASTOR. S. SUNDARRAJ**-ம், **PROPHET. S. YESUDASAN**-ம், ஊழியர்களும், சபை மக்களும் கலந்துக் கொண்டனர். பல ஆண்டுகளாக அதற்காக ஜெபித்த எல்லாருக்காகவும் கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறேன். அச்சகத்திற்காக நன்கொடை அருளிய எல்லாருடைய தியாகங்களும் ஜெபங்களும் தேவனுடைய சந்நிதானத்தில் நினைவுகூரப்படுகின்றன. கர்த்தர் அதற்கான பலன்களை உங்களுக்கு கட்டளையிடுவாராக! அச்சு இயந்திரத்தின் மூலமாக ஆண்டவர் பணியை தீவிரமாகச் செய்ய இறைவன் அருள்புரியும்படி வாசகர்கள் ஜெபிக்கவும், அதற்காக வாங்கப்பட்ட கடனை அடைக்க, தேவனுடைய கரத்திலிருந்து உதவி கிடைக்க மன்றாடவும் கேட்டுக் கொள்ளுகிறோம். உங்களுடைய பங்கும் இதிலிருக்கட்டும்.

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   11 [வெள்ளி] செப்டம்பர் 1992
   15 [திங்கள்] அக்டோபர் 1992
   15 [செவ்வாய்] நவம்பர் 1992
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

அனுப்ப வேண்டிய முகவரி :

**CHIEF PASTOR N. LAZAR**
**"NEW JERUSALEM CHURCH"**
**CHURCH LANE, TILAK NAGAR,**
**DARGA ROAD, BHANDUP,**
**BOMBAY-400 078 INDIA.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

1. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினை ... தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: Beauty Printing Works, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 103 - AUG./SEPT. '92



"புதிய … சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரோ)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்... நான் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்"

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்குக் கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.

2 விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).

3 திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20

4 அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.

5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.

6 இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)

7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர். வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43)

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய ஜனங்களே,

யாக்கோபுக்கு இக்கட்டுக்காலம் என்பது போல் திருச்சபைக்கு சாத்தானாலும் அவனுடைய கையாட்களினாலும் நெருக்கடி உண்டாயிருக்கிற காலமாகும் இது. தேவ ஜனங்கள் ஊக்கமாக ஜெபிக்கவும், இறைபணி செய்யவும் கர்த்தர் அநுக்கிரகஞ்செய்வாராக! கர்த்தர் தெய்வமானால் அவரைப் பின்பற்றுங்கள், பாகால் தெய்வமானால் அவனைப் பின்பற்றுங்கள் என்று எலியா தீர்க்கதரிசி சவால் விட்டு கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே தெய்வம் என்று நிரூபித்ததுபோல (I இரா. 18:21-39) இறைவனை நிரூபிக்கவேண்டிய, இவரே இறைவன் என்று சாதிக்கவேண்டிய காலம் இது. எங்கு பார்த்தாலும் விக்கிரகாராதனை பெருகி மக்கள் மடைமைத்தனத்திற்குள்ளாக கற்காலத்திற்கு திரும்பிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குப் படிப்பித்துக் கொடுக்கிறதே கல்லெறிதலாயிருக்கிறது. நாமோ இறைவனை காண்பிக்க இறைவழியைப் பின்பற்றுவோமாக. சவால்விட்டு இறைவனை நிரூபிக்க முடியும். ஆனால் உண்மையை ஏற்றுக்கொள்ள முடியாத உலகத்திலே நாம் இருக்கிறோம். நாம் தெளிவுடையவர்களாயிருக்கிறோம். இவரே தெய்வம்! இறைவனுடைய தீர்க்கதரிசனத்தின் பிரகாரம் "இந்த வானத்தையும் பூமியையும் உண்டாக்காத தெய்வங்களெல்லாம் ஒழிந்துபோகும்" என்பதை திட்டமாக நாம் அறிந்திருக்கிறோம் (எரே. 10:11). "கர்த்தரோ மெய்யான தெய்வம்; அவர் ஜீவனுள்ள தேவன், நித்திய ராஜா; அவருடைய கோபத்தினால் பூமி அதிரும்; அவருடைய உக்கிரத்தை ஜாதிகள் சகிக்கமாட்டார்கள். கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, வானத்தையும் பூமியையும் சமுத்திரத்திலுள்ள சகலத்தையும் சிருஷ்டித்தவரும், ஆண்டு நடத்துகிறவருமாயிருக்கிறார். அவர் ஒருவரே சகலத்தையும் சிருஷ்டித்த சிருஷ்டி கர்த்தா" என்று உரிமை பாராட்டுகிறார் (எரே. 10:10). ஆனபடியினால் நாம் அவரை மகிமைப் படுத்துவோமாக (யோ. 1:1-3). தெய்வம் தம்முடைய வல்லமையைக் காண்பிக்க ஊக்கமாக ஜெபிப்போமாக. அசையாது நிற்போமாக. தொடர்ந்து கிரியை செய்து இறைவனை மகிமைப் படுத்துவோமாக! இறையாசீர் நம்மேலும் நம்மை நேசிக்கிறவர்கள் மேலும் உண்டாயிருப்பதாக!! ஆமென்!!!

கிறிஸ்துவுக்குள்

N. Lazar

CHIEF PASTOR N. LAZAR

# கிருபை வரங்கள் (தொடர்ச்சி)

**1. ஒரு நபரின் உண்மையை வெளிப்படுத்த:**

I இரா. 11:1-6 ல் இதைப்பற்றிய விளக்கமான ஒரு சம்பவம் காணப்படுகிறது. முதிர் வயதினால் கண்கள் மங்கலடைந்த, பார்வை குன்றியிருந்த அகியா தீர்க்கதரிசியை வஞ்சிக்கும் நோக்கத்துடன் யெரொபெயாமின் மனைவி மாறு வேடத்தில் சென்றாள். ஆனால் இவ்வரம் அவரில் ஒளிர்விட்டதால் அவள் நடையின் சத்தத்தைக் கேட்டவுடனே அவளைப் பற்றிய காரியத்தை அப்படியே அகியா சொன்னார். இந்தத் தீர்க்கதரிசியிடம் இவ்வரம் இல்லாதிருந்தால் தீர்க்கதரிசி வஞ்சிக்கப்பட்டிருப்பார். ஈசாக்குக்கு இவ்வரம் இல்லாததினாலே யாக்கோபினால் வஞ்சிக்கப்பட்டார் (ஆதி. 27:17-23). அதைப் போன்றே இவ்வரம் இல்லாததினாலே தேவ ஊழியனாகிய யோசுவா கிபியோனியர்களால் வஞ்சிக்கப்பட்டார் (யோசு. 9:3-15). இவ்வரம் சபைகளில் இல்லாததினால் எவ்வளவு தீமைகள் ஏற்படுகின்றன என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

**2. ஒரு மனிதனின் தேவையை வெளிப்படுத்த:**

ஒருவரைக் காண்கையில் அவரின் உள்ளான தேவையை அறியவும் அதை வெளிப்படுத்தவும் இவ்வரம் உதவுகின்றன. யோவான் 4-ம் அதிகாரத்தில் சமாரியா ஸ்திரீயின் தேவையை சீஷர்கள் அறியவில்லை. எனினும் இயேசு அறிந்திருந்தார். இன்றும் இவ்வரம் இதே வகையில் கிரியை செய்கிற அனுபவம் அநேகமுண்டு. இதை சிலர் தீர்க்கதரிசனம் என்று தவறாக நினைக்கின்றனர். இது தவறு. அறிவை உணர்த்தும் வசனத்தின் கிரியையால் ஒரு மனிதனின் அந்தரங்க இரகசியங்கள், தேவைகள் வெளிப்படும் என்பதாம்.

**3. ஒரு மனிதனின் உள்ளான நிலையை வெளிப்படுத்த:**

விசுவாசிகளின் மத்தியில் பிசாசு நுழைவது எளிது. அவர்கள் அந்நியரல்ல, சபையில் உள்ளவர்களே. ஒரு சபையில் தேவ கிருபையை அனுபவித்த அவர்களிடம் சிறிது சிறிதாக பின்மாற்றம் ஏற்படுகிறது. இதை வெளிப்படுத்தவோ, அறிக்கையிடவோ அவர்களது அந்தஸ்து அனுமதிப்பதில்லை. இதினிமித்தம் நல்லவர்கள் போல் அவர்கள் நடிக்கலாம். இப்படிப்பட்ட வேஷபக்திக்காரர்கள் பேராபத்தை விளைவிக்கிறவர்களாகும். இவர்களைக் கண்டுபிடித்து சபை சிட்சிக்க வேண்டும். அல்லது சபை நீக்கம் செய்யவேண்டும். கிருபா வரங்கள் ஒளிர் விடுகின்ற சபைகளில் வேஷபக்திக்காரர்கள் நிலைநிற்க முடியாது. அப். 5:1-13 ல் அனனியா சப்பீராள் செய்தி இதற்கு ஒரு எடுத்துக்காட்டு. அனனியாவும், சப்பீராளும் போலிவேஷக்காரர்களாக இருந்தனர். ஆஸ்தியின் பணத்தில் ஒருபங்கை மறைத்து வைத்தனர். இது தவறு என்பதை அவர்கள் அந்தஸ்து அனுமதிக்கவில்லை. நல்லவர்கள் என்ற எண்ணத்தோடு சபையில் நுழைந்தனர். ஆனால் கிருபை வரத்தால் பிரகாசித்துக் கொண்டிருந்த பேதுரு அங்கிருந்த படியினால் அவருக்கு இவர்களுடைய வேஷம் புலனாயிற்று. அதனால் அவர்கள் தண்டனை அடைந்தனர். பேதுருவின் ஸ்தானத்தில் கிருபை வரம் பெறாதோர் இருந்திருப்பாராயின் ஒரு வேளை அன்றைய பிரசங்கத்தின் பொருள் அவர்களுடைய ஈகையை குறித்ததாக இருக்கலாம். அனனியா சப்பீராள் என்பவர்களுடைய மாதிரியை யாவரும் பின்பற்ற வேண்டும் என்பதையே அன்றைய பிரசங்கமாகக் கூறி முடித்திருப்பார். கூட்டம் முடிந்தவுடன் சபையார் அவர்களை மனமாற வாழ்த்தியிருப்பார்கள். காலதாமதமின்றி போலி வேஷக்காரர்கள்

சபையில் முதலிடம் பெற்று விடுவார்கள். கிருபை வரத்தால் பிரகாசித்த பேதுரு அங்கிருந்தபடியால் சபை வஞ்சிக்கப்படாதபடி பரிசுத்தமடைந்தது. இன்றைய சபைகளில் இவ்வரம் ஒளிவிட வேண்டியது மிகவும் அவசியமல்லவா!

**III ஆவிகளைப்பகுத்தறிய (Discerning of the spirit).**

ஆவிகளைப் பகுத்தறியும் அறிவானது அத்தியாக்கலை இருக்கிறவாறே கண்டுகொள்வதற்குதவும் இயற்கைக்கு மேலான பகுத்தறிவாகும் இது. மனிதர்கள் வெறு பிரிக்கின்ற அனுபவமாக சிலர் நினைக்கிறவர்களுண்டு. அதுமுறையன்று ஆவியின் மண்டலத்தைச் சேர்ந்துள்ள ஆவிகளை இயற்கைக்கு அப்பாற்பட்ட பகுத்தறிவினால் அறியும் வல்லமையே இது. ஒருவரில் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு கிரியை நடக்கும் போது அது தேவ ஆவியினாலா அல்லது அசுத்த ஆவியினாலா என்பதைக் கண்டு கொள்வதற்காக வல்லமை இவ்வரத்தின் மூலம் இவருக்குக் கிடைக்கிறது. இவ்வரம் எந்நிலையில் கிரியை செய்கிறது என்பதை அறிந்தால் அது அதிகமாகத் தெளிவாகும்.

**1. ஒரு செய்தியின் மூல காரணத்தை அறிந்து கொள்ள :**

பவுலும், சீலாவும் பிலிப்பி பட்டணத்தில் இருக்கையில் ஒரு இளம் பெண் அவர்களைப் பின்தொடர்ந்து இந்த மனுஷர்கள் உன்னதமான தேவனுடைய ஊழியக்காரர்கள் இரட்சிப்பின் வழியை நமக்கு அறிவிக்கிறவர்கள் என்று சத்தமிட்டாள் (அப். 16.17). வெளித்தோற்றத்திற்கு அழகாக, ஆவியினால் உண்டானது போல் காணப்பட்ட அந்தப் பேச்சின் மூலகாரணம் என்ன என்பதை பவுல் அறிந்து கொண்டார். அவளுக்கு மூலகாரணமாயிருந்த பொல்லாத ஆவியை அதட்டி அவளை விட்டு நீங்கச் செய்தார். இந்தக் கிருபை வரம் பவுலிடம் சுடர் விடாமல் இருக்குமெனில் ஒரு வேளை தேவன் தமதூழியத்துக்கு ஆயத்தம் பண்ணின வழி இதுவே, நமக்குத் துணையாக ஒரு தீர்க்கதரிசினியைத் தந்துவிட்டார் என்று இன்றுள்ள மற்றவர்களைப் போல ஏமாந்து போயிருக்க முடியும். ஆகையால் இன்று இவ்வரம் நம்மத்தியில் அதிகமாய் ஊற்றப்பட வேண்டும்.

**2. ஒரு நோயின் மூலகாரணத்தை அறிந்து கொள்ள :**

பற்பல காரணங்களினால் நோய்கள் உண்டாகின்றன. உடல் சம்பந்தமான காரணங்களால் நோய் உண்டாகலாம். ஆனால் எல்லா வியாதிகளும் அவ்விதமாக உண்டாகிறதில்லை. அசுத்த ஆவியின் கிரியைகளினால் நோய் உண்டாகலாம். அதைப்போன்று ஒருவர் செய்த பாவத்தின் பலனாகவும் நோய் உண்டாகலாம். இறுதியில் சொல்லப்பட்ட இரு வியாதிகளும் சுகம் கொடுக்க மனித சிகிட்சைகளால் ஒன்றும் இயலாது. அசுத்த ஆவி அவர்களிலிருந்து புறப்பட்டுச் செல்ல வேண்டும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மூலம் பாவ மன்னிப்பும் அவர்களுக்குத் தேவை. மேற்சொல்லப் பட்ட வியாதிகள் எங்ஙனம் உண்டாயின என்று அறிய இந்தக் கிருபையின் வரம் பெரிதும் உதவும்!

இயேசுவிடம் ஊமையான ஒரு சிறுவனைக் கொண்டு வந்தார்கள் (மாற். 9:17). அந்த நோயின் மூல காரணத்தை இயேசு அறிந்து அவனை நோக்கி ஊமையும் செவிடுமான ஆவியே இவனை விட்டுப் போ இனிமேல் இவனிடம் பிரவேசியாதே என்றார். அப்பொழுது அந்த அசுத்த ஆவி கூக்குரலிட்டு புறப்பட்டுச் சென்றது. அவன் சுகம் பெற்றான் (மாற். 9:25). இங்கே காணப்பட்ட கிருபை வரத்தின் வெளிப்பாடு இது.

**3. பைத்தியம், கலகம், மரியாதைக் குறைவான நடத்தை இவைகளின் மூல காரணத்தை அறிந்து கொள்ள:**

பைத்தியம் என்று சொல்லும் போது மனவியாதியினால் மட்டுமல்ல அசுத்த ஆவியின் கிரியைகளினாலும் ஏற்படும் என்பதை தேவ ஜனங்கள் உணர வேண்டும். இதற்கு உதாரணம் லேகியோன் (லூக். 8:28–30). இவ்வாறு சில கலகங்கள், மரியாதைக் குறைவற்ற நடத்தைகள் இவைகளுக்கும் அடிப்படையான சக்தி அசுத்த ஆவியே. அதினின்று விடுதலை பெறவேண்டுமெனில் அதின் மூலகாரணத்தை அறியவேண்டியது அவசியமாகும். மூலகாரணத்தை அறிந்து கொள்ள இக் கிருபை வரம் அவசியம். ஆனபடியினால் இறைவனுடைய ஆவியானவர் நமக்கு அருளுகிற வெளிப்படுவது வரங்கள் மனநிலை மண்டலம், ஞானத்தின் வசனம், அறிவை உணர்த்தும் வசனம், ஆவிகளைப் பகுத்தறிதல் இவைகள் வெளிப்படுதலில் மனநிலை மண்டலத்திலாகும். இவை மிகவும் அதிகமாக நம்மில் பிரகாசிப்பதாக!

### III வல்லமையின் வரங்கள்:

*சரீர மண்டலம்:*

விசுவாசம், அற்புதங்கள், குணமாக்கும் வரங்கள் ஆகிய இம்மூன்று வரங்களும் இத்துறையை சேர்ந்தவைகள்.

#### 1 விசுவாசம்.

தெய்வீக விசுவாசம் இயற்கைக்கு அப்பாற்பட்ட கிரியை. எல்லோரிடத்திலும் நம்பிக்கையுண்டு. விசுவாசத்தினால் இரட்சிப்படைகின்றனர். விசுவாசத்தினால் வாக்குத்தத்தங்களைப் பெற்றுக்கொள்ளுகின்றனர், விசுவாசத்தினால் பிழைத்துமிருக்கிறோம். விசுவாசத்தினால் நீதிமான் பிழைப்பான் (எபி. 10:38). கிருபையினாலே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள் (எபே. 2:8). விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம் (எபி. 11:6) என்ற வேதவாக்கியங்கள் விசுவாசத்தைக் குறித்து தெளிவுபடுத்துகின்றன. இவ்விசுவாசம் எல்லா தேவனுடைய பிள்ளைகளிடத்திலும் உண்டு. இவ் விசுவாசம் எல்லா தேவபிள்ளைகளிடத்திலும் இருக்க வேண்டும். இந்த விசுவாசம் உடையவர்களே விசுவாசிகள் ஆகும். ஆனால் விசுவாசத்தின் வரம் என்பது இதிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. இவ்வரத்தை விசேஷித்த வரம் என்று வேதாகமம் நமக்குக் குறிப்பிடுகின்றது. இயேசு செய்த ஒரு காரியத்தையும், அதைத்தொடர்ந்து அவர் உரைத்ததையும் இதில் தெளிவாக புரிந்து கொள்ளலாம். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கனி காணப்படாத ஒரு மரத்தை சபித்தார் (மாற். 11:12–14). மறுநாள் இயேசு அவ்வழியே திரும்ப வருகையில் அந்த அத்திமரம் வேரோடு பட்டுப் போயிருந்தது. இதினிமித்தம் ஆச்சரியப்பட்ட சீஷர்களிடத்தில் "தேவனிடத்தில் விசுவாசமாயிருங்கள்" என்று இயேசு கூறினார். மூல பாஷையில் சரியான மொழி பெயர்ப்பு "தேவனுடைய விசுவாசம் உடையவர்களாயிருங்கள்" என்பது, தேவன் கொடுக்கின்ற விசுவாச வரம் என்று பொருள்படும். இது இங்கு "தேவனின் விசுவாசம்" என்று அழைக்கப்படுகிறது. ஒன்றுமில்லாமையின்போது அல்லது யாதொன்றும் காணாதிருக்கும் போது கூறுவதுதான் தேவனின் விசுவாசம். இதன் அடிப்படையில், கூறிய பிரகாரம் ஒரு காரியம் நடைபெறவும் செய்கிறது. சாதாரண விசுவாசத்தினின்று வேறுபட்டது தான் இந்த "விசுவாசம்" என்னும் வரம். விசுவாசம் என்னும் வரம் எந்த முறையில் கிரியை செய்கிறது என்பதை ஆராயும் பொழுது அதை நன்றாக அறிய முடியும்.

1) எதிரிகளிடம் இருந்து தப்ப (II இரா. 6:13–20).

எலிசா செய்த ஒரு தனிப்பட்ட காரியத்தைக் காணலாம். சீரிய சேனைகள் தங்களை சூழ்ந்திருப்பதைக் கண்ட வேலைக்காரன் எலிசாவிடம் முறையிட்டான்.

எலிசாவில் காணப்பட்ட 'தேவனின் விசுவாசம்' கிரியை செய்தது. ஒன்றையும் காணமல் இருக்கும் போதே நம்மிடம் உள்ளவர்கள் அவர்களிடத்தில் உள்ளவர்களை விட அதிகம் என்று கூறினார் பார்க்கத்தக்கதாக இவனுடைய கண்களை திறக்கவேண்டுமே என வேலைக்காரனுக்காக ஜெபித்தார். உடனே அவனுடைய கண்கள் திறக்கப் பட்டன. அவன் கண்டான். சேனை வீரர்கள்தங்களது பார்வையை இழக்கும்படி ஜெபித்தார். அவர்கள் பார்வை இழந்தார்கள். சிறிது நேரம் கழித்து அவர்கள் கண்கள் திறக்கும்படி ஜெபித்தார். கண்கள் திறக்கப்பட்டன. எதிரிகளிடமிருந்து தங்களைதற் காத்துக்கொள்ள தன்னிடமிருந்த விசுவாசத்தை எலிசா இவ்வாறு உபயோகப்படுத்தினார். இவைகளெல்லாம் விசுவாசம் எனனும் வரத்தின் வெளிபபடுத்தலே யாகும்.

(தொடரும்.)

" விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும். மாற். 9:23

# இந்து மதம் (தொடர்ச்சி)

### சரக பூஜை

இப் பொருத்தனையின் பலியின் பழக்கம் முதல்முதலில் வட இந்தியாவில் பழக்கத்தில் இருந்து பிந்தின காலங்களில் இதுதென்னிந்தியாவிலும் பழக்கத்தில் வந்து விட்டது. அம்மனுக்குப்பூத்தேர் இழுத்தல் போன்ற திருவிழாக்களில் பொருத்தனை பண்ணிக் கொண்டவரிலுள்ள தெய்வ அனுக்கிரகத்தை சோதித்தறிய இவ்விதம் செய்கிறார்கள். சுமார் 25 அல்லது 30 அடி மரக்கம்பம் ஒன்றில் கூர்முனையுள்ள ஊசி ஒன்றை சொருகி பின்னர் இக்கம்பை தரையில் நாட்டியிருக்கும் தூணில் கயிறு கட்டி சக்கரம் போல் சுழலச் செய்து விட்டிருக்கும். கயிற்றுநுனியில் இரண்டு கொக்கிகள் தொடுத்து, பூமியைத் தொடும் அளவில் நீண்டு தொங்கும். பொருத்தனைக்காரர் கம்பத்துடன் சேர்ந்து அம்மனை நமஸ்கரித்து, கம்பத்தின் கயிற்று நுனியில் தொடுத்து தொங்கும் இரு கொக்கிகளை எடுத்து தன் முதுகில் அல்லது விலாபக்கத்தில் சதையோடு ஊடுருவ மாட்டி குத்திக் கொள்வார்கள். உடனே இவர்களை அப்படி உயரத்தூக்கி மேலிருந்து கிறுகிறுவென்று சுழற்றுவார்கள். எவ்வளவுக்கதிக நேரம் வேதனை சகித்திருக்கிறானே அவனே அம்மனுக்கு மிக பிரீதியுள்ளவனாய்ப் போற்றப்படுவான். இக்கொடும் வேதனையை சகிக்க முடியாத சிலர் அந்நேரத்திலேயும், சிலர் சில நாட்கழித்தும் மரித்துப்போவார்கள். மற்றவர்களோ இவ்வகையில் மரித்துவிட்டவர்களை முக்தி சேர்ந்தோர் என்று போற்றுவார்கள். இக்கொடும் பாதகம் கொலைச் செயலேயன்றி முக்தி சேர்க்கும் பக்தி வழிபாடு அல்ல என்று கூர்ந்து கவனித்த அரசாங்கம் இதற்கோர் புது திட்டமியற்றி 1863 ம் ஆண்டில் அறவே நிறுத்தி விட்டார்கள்.

### 'ஹரிபோல்' 'ஹரிபோல்' 'போல் ஹரி'

ஹரிபோல் ஹரிபோல் என்னும் இவ்வக்கிரமச் செயல் சிலவிடங்களில் சிறிது மாறுதலுடன் வழக்கத்தில் இருந்தாலும் வட நாட்டில் மிகுதியும் வழக்கத்தில் இருந்தது. ஒருவன் நோய்வாய்ப்பட்டு மரிக்கும் தருணத்தில் இருக்கும் பொழுது அவனை கங்கையாற்றுக்குத் தூக்கிக் கொண்டு போய் வைத்து ஹரிபோல் ஹரிபோல், போல்ஹரி அதாவது ஹரி என்று சொல். ஹரி என்று சொல், சொல்ஹரி என்று வற்புறுத்திச் சொல்லச் செய்து

குளிப்பாட்டுவார்கள். இவ்வித செயலின் போது தண்ணீரிலேயே உயிர் பிரிந்து விடும். சிலர் கரையேறிய சிறிது நேரத்தில் மரித்துப் போவார்கள். பின்னும் சிலர் மரியாமல் கஷ்ட வேதனைக்குள் இருந்தாலும் அவர்களை வீட்டுக்குக் கொண்டு செல்லும் வழக்கம் இல்லாததால் அவ்விடத்திலேயே கிடக்கச்செய்து மரிக்க விட்டு விடுவார்கள். இக்கொடும் பாதகச் செயலை அரசாங்கம் சட்ட பலத்தால் திட்டமிட்டு 1831 ம் ஆண்டு அறவே நிறுத்திவிட்டது.

### மகா பிரஸ்தானம்

நீரிலாவது, நெருப்பிலாவது தானகவே விழுந்து உயிரை இழப்பதே மகா பிரஸ்தானம் என்னும் பலி. இவ்வித நிலையில் உயிர் இழப்போர் முக்தி சேர்வார்கள் என்ற பொய் நம்பிக்கையால் இவ்வித பாதகச் செயல்களை புரிந்து வருவது வழக்கமாயிருந்தது. மிருகச் சடிகள் என்ற நாடகத்தை எழுதிய சூத்திரகன் என்னும் அரசன் இவ்வித மகா பிரஸ்தானத்தினலேயே உயிரை இழந்தான். சூத்திர, நுத்திர, விஷ்ட என்னும் வார்த்தை மிருகச் சடிகள் என்னும் நாடகத்தில் இருக்கிறது. இப்பாழ் நம்பிக்கையும் அரசாங்கச்சட்டத் தால்நிறுத்தப்பட்டது. சிதம்பரநடராஜக்ஷேத்திரத்தில் நந்தனர் நெருப்பிற்குதித்து உயிரிழந்ததும், மகாபிரஸ்தானம் என்னும் ஏமாற்று வழியில் நிறைவேற்றி முடித்த கொலையாகும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

### சதிதகனம்

சதிதகனம் என்பது உடன்கட்டை ஏறுதல் என்பதாம். புருஷன் மரித்ததும் அவன் மனைவியையும் அவனோடு சேர்த்து தீயிலிட்டு தகனிப்பது இப்பழக்கமாகும். இப்பயங்கர பாதகசெயல் பாரத நாடெங்கும் பஞ்சில் தீ பட்டது போல் தீவிரமாய் பரவி எண்ணற்ற சௌந்தரியமுள்ள இளம் பெண்களை கொலை செய்து அறிந்தது மனு முதலானோர் எழுதிய சுருதிகளிலோ, இந்து சமய வேதங்களிலோ இப்பாதகச் செயலிற்கு இவர்கள் சரியான ஆதாரம் காட்ட முடியாவிட்டாலும் பௌத்தர்கள் அழிவுக்குப்பின் இது கள்ளக்குருக்கள் சூழ்ச்சியாக ஏற்பட்ட கபடமாகத் தெரிகிறது. இவ்வித தீத்தகனிப்புக்குள்ளான பெண்கள் கற்புடன் தன் புருஷனோடு சொர்க்கலோகம் சேருவாள் என்று ஏற்படுத்திய வஞ்சகக் குருக்கள் கட்டுக் கதையால் ஆயிரமாயிரமான பெண்கள் தீக்கிரையாக்கப்பட்டு மண்ணறைக்குச் சென்றுர்கள். இவ்வித பயங்கர தீச்சுவாலையில் தகனிக்கப்பட்டுக் கொல்லப்படும் பெண் தீச்சுவாலையில் வேதனை சகிக்க முடியாமல் அலறி கூவிக் குதித்து வெளியேற வகைபார்த்து அங்குமிங்குமாக அலையும் போது சுற்றிலும் சூழ்ந்து வளைந்து நின்று தகனிப்போர் கொஞ்சமும் இரக்கமின்றி தங்கள் கையிலுள்ள ஈட்டி போன்ற கூர்தடியால் அப்பெண்ணைக் குத்தி புரட்டி சுவாலித்து எரிகிற தீயின் மத்தியில் திரும்பத் தள்ளுவார்கள் இச் கொடும்பாதகச் பெருஞ்செயலை தன் கண்ணிற்கெதிரே காட்சியாய்க் கண்ட திரு. ராஜாராம் மோகன்ராய் என்னும் அறிஞர் தன் மதத்தை விட்டு பிரம்ம சமாஜம் என்னும் தனி மதத்தை ஸ்தாபித்தார். இவர் தன் சகோதரன் மனைவிக்கு இவ்விதம் ஏற்பட்ட அநியாயமான மரணத்தைப் பற்றி பின்வருமாறு கூறியிருக்கிறார்.

'என் சகோதரன் இறந்து போனன். இந்துக்களின் மத வழக்கப்படி உடன் கட்டை ஏறுவதற்கு இளம் பெண்ணை அவர் மனைவி முதலில் ஒப்புக்கொள்ளவில்லை. புரோகிதர்களின் பிடிவாதத்தினல் ஒரு வகையில் அவள் ஒப்புக் கொண்டு சுடுகாட்டிற்குச் சென்றுள். எரிகிற நெருப்பைக் கண்டதும் அவ்வேழை இளம் பெண் தன் உயிர் போய் விடுமே என அஞ்சி அழத்தொடங்கினள். ஆனலும் அவள் புரோகிதர் கூட்டத்திற்கு பின்னும் கீழ்ப்படிந்து நெருப்பில் குதித்தாள். அங்கு

அவள் பட்ட பாடு என்றால் சொல்ல இயலாது பொறுக்க முடியாத சூட்டினால் அவ்வேழைப்பெண் எரிகிற நெருப்பில் புரண்டு கூவும் போது புரோகிதர்களின் கட்டளைக்கேற்ப எதிர்நகர்கள் போன்ற சில வேலைக்காரர்கள் கூர்மையான மூங்கில் தடியால் குற்றுயிருடன் நெருப்பில் கிடந்து பரிதவிக்கும் அவ்விளம் பெண்ணை பல தரம் குத்திக்குத்தி நெருப்பில் தள்ளி வதைத்து எரித்தார்கள்' என்பதே. இப்பெரும் பாதகச் செயலை ஆங்கில கவர்னர் 1841-ம் ஆண்டில் அரசாங்கச் சட்டம் இயற்றி நிறுத்தினார்கள். இந்து மதம் தழைக்கிறது என்று சொல்லி மறுபடியும் இதைக் கொண்டுவர மனச்சாட்சியுள்ள இந்துக்கள் எண்ணுகிறார்களோ!

## பரகுத் தன்னம்

பரகுத்தன்னம் என்பது கங்கா சுவாமிக்குத் தங்கள் அருங் குழந்தைகளை எறிந்து விட பிரார்த்தனை. பெற்றோர் தங்களுக்கு சந்தான விருத்தி உண்டாக தெய்வ பிரார்த்தனை செய்து கொண்டு பிள்ளை பிறந்து யௌவன பருவம் அடைந்ததும் பெற்றோர் தன் பிள்ளைகளிடம் இப்பிள்ளைகள் பிறக்கும் முன் செய்து கொண்ட தெய்வ பிரார்த்தனை, கட்டளைகளை இப்பொழுது நிறைவேற்ற வேண்டுமென்று சொல்லுவார்கள். பெற்றோர் ஆணைக்கு கட்டுப்பட்டு வளரும் அப்பிள்ளைகளும் தெய்வ நாமத்தில் பழி சுமத்தி கிரண, சதகுடா முதலிய மலைக்கு மேல் ஏறி அங்கிருந்து தாழக்குதித்து பெற்றோர் பிரார்த்தனையை நிறைவேற்ற தங்கள் ஜீவனை இழந்து மாண்டு மடிவார்கள். இதையும் அரசாங்கத்தார் பின்னும் ஒரு போதும்தலைகாட்டாமல் சட்டமிட்டு அறவே ஒழித்தனர். சுமார் 120 வருஷங்களுக்கு முன் பாரதத்தின் முக்தி வழிபாடு காட்டும் பக்தி எவ்வளவு பயங்கர கொலைக் காட்சிக்குள் போய்க் கொண்டிருந்தது என்பதை தெளிவாய் வாசிப்போர் விளங்கிக் கொள்ளவும்.

## நரமேதம்

பரந்த இப்பாரத நாடெங்கும் பக்தியின் பெயரால் இப்படிகொலை நடந்தேறி வந்தது. இப்பொழுதும் இரகசியமாக நரபலி நடக்கிறது. இது இந்து சமய வேதங்களில் நியமிக்கப்பட்ட பல யாகங்களில் ஒன்று. இதற்கு கட்டளை பிரமாணமாக ரிக் வேதத்திலுள்ள சுனசேத சித்தம் காட்டப்பட்டு வந்தது. யாகக் காலங்களில் வெளியூரிலிருந்து வந்த அந்நியனாயினும், ஏழையாயினும் அகப்பட்டால், அவனை இலகுவாய் வசப்படுத்தி உள்ளே அழைத்துக் கொண்டுபோய் யாகத்துப் பசுவாக்கி தூணில் கட்டிக் கொலை செய்து யாகத்தை முடிப்பது வழக்கம். இந்த அநியாயக்கொலைச் செயலை அரசாங்கம் 1845-ம் வருஷம் 21-வது சட்டப்படி அறவே நிறுத்தினது.

## கங்கா பிரவாக பாதனம்

பெற்றோர் தங்கள் சந்ததி பெருகி வாழ தங்கள் இஷ்ட தேவனுக்கு பிரார்த்தனை செய்து கொள்வார்கள். தங்களுக்குப் பிறக்கும் தலைப்பிள்ளையை ஆணாயினும், பெண்ணாயினும் சுவாமிக்கு பலியாக அர்ப்பணம் செய்து விடுவோம் என்பது பொருத்தனை. குழந்தை பிறந்ததும் தான் செய்து கொண்ட பிரார்த்தனையின்படி தலைச்சன் பிள்ளையை சுவாமிக்குக் காணிக்கையாகக் கொடுத்து விடுவார்கள். தங்கள் மத போதக விசுவாசத்தின்படி தங்கள் தெய்வங்களாயும் கங்கை நதியில் இருக்கிற தெய்வங்கள் யாவரும் கங்கை நதியில் இருப்பார்கள் என்ற நம்பிக்கையில் கங்கை நதி கடலில் சேருகிற இடமாகிய கங்கா சாகர சங்கமம் என்னுமிடத்தில் நீர்பெருகி நிற்கும் ஆழத்தில் தங்கள் அரும் இளம் குழந்தைகளை தங்கள் தேவனுக்கு காணிக்கையாகக் கடலில் எறிந்து விடுவார்கள். பக்தியின் பெயரால் நடந்து வந்த இந்த இரக்க மற்ற கொலைச் செயலை அரசாங்கம் சட்டமியற்றி இது கொடுங் கொலை என்று விளக்கிக்

காட்டி இவ்வகை மூட பக்தியை 1835-ம் ஆண்டில் அறவே நிறுத்திவிட்டார்கள்.

### அம்மனுக்கு விடுதல்

பெண் தேவதைகளின் பெயரால் அம்மனுக்கு விடுதல் என்று குடும்பங்களில் ஒரு பெண் பிள்ளையை மாரி அம்மனுக்கு நேர்ந்து விடுவார்கள். இவ்விதப் பழக்கம் தென்னிந்தியாவில் பல பாகங்களில் காணலாம். இப்பெண்கள் பருவமடைந்ததும் சில சடங்கு முறைகளைச் செய்து பொட்டுத் தாலி கட்டி அம்மன் கோவிலின் பொது மகளாய் அதாவது வேசித்தனஞ் செய்ய விட்டு விடுவார்கள். இப்பெண் தனக்கோர் புருஷனை மணந்து தனிக்குடும்ப வாழ்க்கை செய்தால் திருப்தியாகாதென்பது பொய் நம்பிக்கையாகையால், கண்ட கண்ட ஆணெவருக்கும் பொது மகளாய் பாவத்தில் ஈடுபட்டு, பிள்ளைகள் பல பெற்று தன் நாட்களை முடிப்பாள். நற்புருஷனை மணஞ்செய்து வாழவேண்டிய கற்பு நிலையிலுள்ள பெண் மக்களை தேவதைகள் பெயரால் பகிரங்க விபசாரியாக்கி தேவன் வெறுக்கும் பாவத்திற்குள்ளாக்குவது தேவன் ஏற்றுக்கொள்ளும் பலி காணிக்கையாகுமோ? இது சரியோ? தேவன் பாவிகளை நரக தண்டனைக்குள்ளாக்குவார் என்ற நம்பிக்கைக்கு இந்து வேதத்தில் இடமில்லை. இது பகிரங்க விபசாரமாகும். பக்தி மார்க்கத்துக்கு அருவருப்பானதென்று போதித்து, எச்சரித்து மெய்பக்தியில் திருப்ப மெய்க்குருக்கள் உண்டா? இல்லையே. இவ்வித கொடுஞ்செயலை பக்தி பிரார்த்தனை புண்ணியக்கிரியைகள் என்று நினைத்தால் மக்களில் மெய்பக்தி உண்டாவது எங்கே? பக்தியின் பெயராலும் தெய்வத்தின் பெயராலும் பல ஆபாச செயல்கள் நடத்தி கோடிக்கணக்கான மக்களை சொற்குருவான பொய்க்குருக்கள் தங்கள் மாறாட்ட பாதக செயலால் பழி வாங்கியதை அரசு சட்டம் இல்லாமல் மீட்டு விட முடியுமா? இல்லையே இன்று வரை எத்தனை கோடி மக்கள் பொய் தேவ நம்பிக்கைக்கா மடிந்து மண்ணுக்கிரையாகச் சென்றிருப்பார்கள், சென்று கொண்டிருக்கிறார்கள்!

### பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள்

பொய் மதங்கள் போதனை செய்
பொய்க் குருக்களை புத்திச் சொல்லி
நன்னெறியில் போக விரும்பும்
மெய் மதத்தான் இன்னதென்று
மேக விளம்பும் மெய்க்குருவின்
பாதம் போற்றி ஆடாய் பாம்பே

### பொருள்

பொய்யான மதப்பிரச்சாரம் செய்யும் பொய்க்குருக்களை திருத்தி நற்போதனை தந்து இன்னதுதான் மெய் ஞானமார்க்கமென்று விளக்கிக் காட்டி மெய்வழியில் நடத்தும் சற்குருவாகிய பராபர வஸ்துவின் பாதத்தைத் தொழுது கொள் என்பதாம்

### பேரின்ப மணிமாலை

"வேதமறியாதவரை குருவென்றெண்ணி
விணிலவர் பாதம் பணிந்து ஞான
போதகத்தையருளுமென்று தலைகுனிந்து
புல்லரிவார் பல சமயத்து தொடவோ
தம்மை
பாதங்கள் தவிர்க்கும் பராபரவஸ்து தானே
பாருலகில் காரண சற்குருவாய் வந்து
மாதவங்கள் செய்து கழிவரவே சத்திய
மறைநெறி இதென்று மதிவழுத்துவாரே"

சமீப காலத்தில் தமிழ்நாட்டில் அரசகவியாக இருந்த கவி கண்ணதாசன் சொன்னதை நினைப்பூட்டுகிறேன். நம்மெல்லோருக்கும் இந்து மதமே ஏற்றது. ஏக பத்தினி விரதம் ஒருவன் காக்க வேண்டுமென்றால் ராமனைக் கும்பிட வேண்டும். இரண்டு பெண்டாட்டிக் காரனாயிருக்க வேண்டுமென்றால் முருகனை கும்பிடவேண்டும். பல மனைவியோடு சரச சல்லாபம் செய்ய வேண்டுமென்றால் கிருஷ்ணனைக் கும்பிட வேண்டும். நான் கிருஷ்ணனைத்

தான் நம்பிடுகிறேன் என்பதே. "இது தான் இந்து மதம்" என்று சொல்ல இந்து மதத்திற்கு ஒன்றும் கிடையாது. இது தான் என்று சொன்னால் அது இந்து மதம் அல்ல. அனைவருடைய அவனவன் மனம் போன படி வாழ்ந்து ஜீவித்துக் கொண்டிருப்பதே இந்து மதம் என்று சொல்வதால் அங்கே சத்தியம் இல்லை, தேவன் இல்லை; அங்கே பரிசுத்தம் இல்லை.

"மனுஷ ஜாதியான சகல ஜனங்களையும் அவர் ஒரே இரத்தத்தினாலே தோன்றப் பண்ணி, பூமியின் மீதெங்கும் குடியிருக்கச் செய்தார் " அப். 17:26.

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

### எண்ணாகமத்தின் பொருளடக்கம்:-

II வனாந்தர பிரயாணம் ஆரம்பம் (புறப்படுதல்) எண். 10:1 முதல்.

a] 1. புறப்பட்டுப் போகும்படி கட்டளை (10:1 35).
2. முறையிடுதல் (Complaints] (11:11-12:16).
3. வேவுகாரர்களை கானானுக்குள் அனுப்புதல் (13:1-33).
4. ஜனங்களுடைய முறுமுறுப்பு, பின்மாற்றம் அதினால் மேற்கொண்டு 40 வருஷம் அலைதல் (11:1-45).

b] வனாந்திரத்தில் நடந்த சம்பவங்களில் சில (15:1 முதல்)

1. வாக்குத்தத்த தேசத்தில் கைக்கொள்ளவேண்டிய சட்டங்கள் (15:1-41).
2 வனாந்திரத்தில் துரோகம் செய்தல், எதிர்த்து நிற்றல் (16:1-16).
3. வனாந்திரத்தில் அற்புதம் (17:1-12).
4. வாக்குத்தத்த தேசத்தில் இன்னும் கட்டளைகள் கொடுக்கப்பட்டன (18:1-19:23).
5. வனாந்திரத்தில் இன்னும் அதிசயங்கள் (20:1-13).
6. வனாந்திரத்தில் மேலும் நடந்த சம்பவங்கள் (2014-21 அதி.).
7. ஏதோம் வழியாக நடந்துபோக அனுமதி மறுத்தது (20:14-21).
8. மறுபடியும் இஸ்ரவேலர்கள் கலகம் பண்ணி கொள்ளிவாய்ச் சர்ப்பங்கள் அவர்களைக் கடித்ததும் (21:1-20).

III யுத்தங்கள்: அதற்கு ஆயத்தம் எண். 21 முதல்

a] 1. சீகோன் அல்லது ஓக் [21:21-35. ]
2. பாலாமுடைய எதிர்ப்பு [22:1-24:25].
3. தவறான ஆராதனையும், தண்டனையும் [25:1-18].
4. இரண்டாவது முறையாக இஸ்ரவேலர்கள் எண்ணப்படுதல் [26:1-65].
5. செலோப்பியாத்தின் குமாரத்திகளுடைய முறையீடு [27:1-11].

6. யோசுவா தேர்ந்தெடுக்கப்படுதல் மோசேயின் இடத்தில் [27:1 முதல்].
7. பண்டிகைகள், பலி, சட்டம் [28:1-30:15].
8. மறுபடியும் மீதியானியருக்கு விரோதமாய் யுத்தம் [31:1-54].

b) வாக்குத்தத்ததேசத்தில் வாழ்வதற்கு ஆயத்தம் பண்ணுதல் (எண். 32:1-36:13).

1. ரூபன், காத், மனாசேயின் பாதிக்கோத்திரம் யோர்தானுக்கு இக்கரையில் குடியேற மோசே அனுமதி கொடுத்தது.
2. பிரயாண விவரம் [33:1-49].
3. எல்லைக்கோடுகள் [33:50-34:29].
4. லேவியருடைய நகரங்கள், அடைக்கலப்பட்டணங்கள் [35:1-34].
5. செலோப்பியாத்தின் குமாரத்திகளுடைய விவாகம் [36:1-13].

## எண்கள் (Numbers)

70 (எழுபது): இது முழுமை என்பதைக் குறிக்கிறது. இஸ்ரவேலரின் எழுபது மூப்பர்கள், இயேசு கிறிஸ்து 70 சீஷர்களை அனுப்பினது, மத். 18:22 ல் எழுெழுபது தரம் மன்னிப்புக் கேட்கிறவனுக்கு மன்னிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது.

666 [அறுநூற்றறுபத்தாறு): யூதர்களுடைய ஒரு சாஸ்திரத்தின் படி எழுத்தட்டவணையில் ஒவ்வொரு எழுத்தும் ஒரு இலக்கத்தைக் குறிக்கிறது. இதன்படி நேரோ [Nero] ராயன் என்னும் ரோம ராயனுடைய பெயரில் அடங்கிய எழுத்துக்களின் தொகை அறுநூற்றறுபத்தாறு. ஆதலால், மிருகத்தின் இலக்கமான 666 நேரோ ராயன் என்பவனைக் குறிக்கலாம். [வெளி. 13:18].

140 (நூற்று நாற்பது ): நூற்று நாற்பது, அல்லது 1,44,000 என்கிற நம்பர் அநேகம் என்பதைக் குறிக்கும். பரலோகத்தில் 1,44,000 பேர் நிற்கக் கண்டேன் என்று வெளி. 14 ம் அதிகாரத்தில் எழுதப்பட்டிருக்கிறது. ஆனபடியினால் எண்கள் ஒவ்வொன்றும் முக்கிய கருத்துடையவைகளாய் யூதர்களால் உபயோகிக்கப்பட்டன எனலாம்.

எண்ணாகமப் புஸ்தகம் எண்களினால் நிரம்பியிருக்கிறது எண்ணிக்கையிட்டதால் அதற்கு எண்ணாகமம் என்று பெயர் சூட்டப்பட்டிருக்கிறது.

[தொடரும்.]

"... இஸ்ரவேல் புத்திரருடைய தொகைக்குத்தக்கதாய், சர்வ ஜனங்களின் எல்லைகளைத் திட்டம் பண்ணினார்" உபா. 32:8.

# நிறைவடையப் பண்ணும் இறை நியமம்.

மனந்திரும்பி ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தஆவியும் பெற்று தேவனுடையபிள்ளைகளாக மறுபிறப்பை பெற்றுக் கொண்ட பற்பல சபைகளிலுள்ள விசுவாசிகளை சந்தித்து பேசுகையில் விளங்கிக் கொண்ட தான காரியம் யாதெனில், அவர்கள் ஜலத்தினாலும் ஆவியினாலும் மறுபடியும் பிறந்து பல ஆண்டுகள் கழிந்த பின்பும், அவர்கள் இன்னும் ஆவிக்குரிய வளர்ச்சியில் குழந்தைகளாகவே இருப்பது தெரிய வந்துள்ளது.

ஒரு சகோதரன் என்னிடம் வந்து தன்னுடைய ஆவிக்குரிய காரியங்களை விவரித்தார். அவர் இறைவனிடம் எவ்வளவு அன்பு வைத்துள்ளார் என்பது விளங்கினது. கர்த்தர் செய்த நன்மைகளை நினைந்து, நன்றி பெருக்கால் பரவசமடைந்தார். அவர் கிறிஸ்தவனான விதம், அவருக்கு வேலை கிடைத்த விதம், வேறு ஜாதியில் பெண்கிடைத்த விதம், திருமணமான அதிசய ஆசீர்வாதங்களை எல்லாம் மிகவும் உருக்கத்தோடே பேசி, தேவனை மகிமைப்படுத்தினார். பொறுமையோடே கேட்டுக் கொண்டிருந்து விட்டு, மிகவும் சந்தோஷம் Brother, சரி. கர்த்தர் உங்களோடு பேசுகிறாரா? அதாவது எவர்கள் தேவ ஆவியினால் நடத்தப்படுகிறார்களோ அவர்கள் தேவனுடைய புத்திரராயிருக்கிறார்கள் (ரோ. 8:14), ஏதோ ஒரு சொப்பனம், ஏதோ ஒரு சத்தம் என்கிறதைச் சொல்லவில்லை, தொடர்ந்து உங்களோடே உறவாடுகிறாரா? என்று கேட்டதும் அவர் உற்சாகமெல்லாம் பக்கென்று அமர்ந்தது. பாருங்கள் சிறு குழந்தை, தன் நண்பனிடம், எங்கப்பா சாக்லேட் தந்தாங்க இந்த கலர் சட்டை வாங்கித்தந்தாங்க, ஷூ (Shoe) வாங்கி தந்தாங்க, பெல்ட் வாங்கி தந்தாங்களே, எங்கப்பா தான் நல்ல அப்பா என்று தன் தந்தையை புகழ்வது போல் இவ்வளவு நேரம் உங்கள் பரம தகப்பனைப் புகழ்ந்தீர்கள். நீங்கள் வளர்ச்சியடைய வேண்டும். வளர்ந்த பிள்ளைகளிடத்திலே தான் தகப்பனார் தனது இரகசியங்களைச் சொல்வார், எந்த Bank ல் எவ்வளவு பணம் இருக்கிறது, எந்தெந்த இடத்தில் தனக்கு சொத்துக்கள் இருக்கிறது, எப்படி தொழில் நடத்த வேண்டும் என்று சொல்லித் தருவார். அந்த பிரகாரம் நீங்கள் ஆவிக்குரிய அறிவை அடைய, அடைய இறைவன் உங்களிடம் பேசுவார், தமது வேதத்தின் மகத்துவங்களை வெளிப்படுத்துவார், முத்திரைகளை உடைத்து பரம பொக்கிஷங்களை காண்பிப்பார் என்று சொன்னதும், நான் நீண்ட ஜெபம் பண்ணி வருகிறேன் என்றார். சரி, வளர்ச்சியடைய இறைவன் வைத்திருக்கிற நியமம் என்ன? என்று கேட்டேன். ஒழுங்காக வேதம் வாசிக்க வேண்டும், நன்றாக ஜெபம் செய்யவேண்டும், ஆலயத்துக்கு ஒழுங்காய் போக வேண்டும் என்றார். இதைத் தவிர நீங்கள் வளரும்படி இறைவன் வைத்துள்ள நியமம் என்ன தெரியுமா என்றேன் தெரியாதென்றார்.

ஒரு பெரியவரை இரயில் பிரயாணத்தின் போது சந்தித்தேன். அவர் ரோமன் கத்தோலிக்க மார்க்கத்திலிருந்து விலகி, ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவி பெற்று Assemblies of God சபையில் உறுப்பினராக இருப்பதாக சொன்னார். அவரிடம் ஐயா, நீங்கள் கர்த்தரின் மீது வாஞ்சையாக இருப்பது நல்லது தான், ஆனால் ஆவிக்குரிய ஜீவியத்தில் நீங்கள் வளர்ந்து இறைவனுடைய சாயலை அடைய வேண்டுமே, தேவன் உங்களை எதற்காக முன் குறித்தார் தெரியுமா? தேவன் எவர்களை முன் குறித்தாரோ அவர்களை தமது குமாரனுடைய சாயலுக்கு ஒப்பாக இருக்கும்படி முன் குறித்திருக்கிறார் (ரோ. 8:29). அந்த நிலையை அடைய வழி என்ன? என்று கேட்டேன்

அவர் பிரதியுத்தரமாக நான் கிராம ஊழியங்களுக்கெல்லாம் போகிறேன் என்றார். இரைசாயலை அடைவதற்கும் கிராம ஊழியங்களுக்கு போவதற்கும் என்ன சம்பந்தம்? அவருடைய பேதமையை விளங்கிக் கொண்டு, இறை சாயலை அடைய இறைவன் வைத்துள்ள ஏற்பாடு என்ன தெரியுமா? என்றேன் விழித்தார். விவரித்தேன்.

இன்னொரு பக்தியுள்ள சகோதரியிடம் பேச நேர்ந்தது. அந்த சகோதரி சொன்னது, நான் ஆவிக்குரிய ஜீவியத்தில் வளர வேண்டும் என்று அதிகம் விரும்பி, ஜெபம் பண்ணுகிறேன், ஆனால் ஒரு படி முன்னேறினால், இரண்டு படி இறங்குகிறேன், என்னால் முடியவில்லையே என ஏங்கினது. நீங்கள் ஆவிக்குரிய ஜீவியத்தில் வளரும்படி கர்த்தர் செய்து வைத்திருக்கிற ஏற்பாடு என்ன தெரியுமா? என்றேன். சொல்லுங்கள் என்று பணிவாய் கேட்டுக் கொண்டார்கள்.

உங்கள் பிள்ளையின் அறிவு வளர்ச்சியடையும் படி எப்படிப்பட்ட பள்ளியில் (School)சேர்க்க விரும்புவீர்கள்? இருக்கிறதிலேயே உயர்ந்த பள்ளிக்கு அனுப்புவேன். நல்ல உயர்தர பள்ளி (Best School). என்றால் அங்கே தேர்ச்சி பெற்ற ஆசிரியர்கள் இருக்க வேண்டும். ஆங்கிலப் பாடத்துக்கு ஆங்கில ஆசிரியர், கணக்கு பாடத்துக்கு கணிதத்துறையில் தேர்ச்சிபெற்றவர், விஞ்ஞான பாடத்துக்கு விஞ்ஞானத் துறையில் தேர்ச்சி பெற்றவர், தமிழ்ப் பாடத்துக்கு தமிழில் பாண்டித்தியம் பெற்றவர் ஆசிரியராக இருக்க வேண்டும் பாடத்திட்டங்களும், ஒழுக்க முறைகளும் உயர்நிலையில் இருக்கவேண்டும். இப்படி இருந்தால் உங்கள் பையன் எல்லா பாடங்களிலும் நிறைவான அறிவடைந்து, எல்லா பாடங்களிலும் முழு அறிவுள்ளவனாக விளங்குவான். ஊரில் பல பள்ளிக்கூடங்கள் உண்டு. சில பள்ளிகளில் ஒரு பாடத்துக்கு ஆசிரியர் இருப்பார், இன்னொரு பாடத்துக்கு ஆசிரியர் இருக்க மாட்டார். அப்படியே இருக்கிற ஆசிரியர்களும் தரத்தில் குறைந்தவர்களாயும், பண்பில்லாதவர்களாயும் இருப்பார்கள். இப்படிப்பட்ட பள்ளிக்கூடங்களிலும் படிப்பவர்கள் ஏராளம் உண்டு. ஆனால் அவர்கள் என்ன தான் பிரயாசப்பட்டாலும் எல்லா பாடங்களிலும் நிறைவான, முழு அறிவையும் அடைய முடியாது.

இதே வண்ணமாய் நாம் இன்னும் குழந்தைகளாயிராமல் அன்புடன் சத்தியத்தைக் கைக்கொண்டு, தலையாகிய கிறிஸ்துவுக்குள் எல்லாவற்றிலேயும் நாம் வளருகிறவர்களாயிருக்கும் படியாக அப்படிச் செய்தார் (எபே. 4:14,15). எப்படிச் செய்தார்? நாம் ஆவியில் வளர்ந்து இரைசாயலை அடைய, சரியாக முன்னேற, இறைவன் வைத்துள்ள ஏற்பாடு என்ன? அவருடைய நியமம் தான் என்ன?

நாம் அனைவரும் தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டவர்களாகி, கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சியின் அளவுக்குத்தக்க பூரண புருஷராகும் வரைக்கும், பரிசுத்தவான்கள் சீர் பொருந்தவும், சுவிசேஷ வேலைக்காகவும், கிறிஸ்துவின் சரீரமாகிய சபையானது பக்தி விருத்தி அடைவதற்காகவும், அவர்

சிலரை அப்போஸ்தலராகவும்,
சிலரை தீர்க்கதரிசிகளாகவும்,
சிலரை சுவிசேஷகராகவும்,
சிலரை மேய்ப்பராகவும், போதகராகராகவும் ஏற்படுத்தினார்.

நாம் வளர்ச்சி அடைய தேவன் செய்துள்ள ஏற்பாடு இதுவே, நியமம் இதுவே.

நீங்கள் ஒரு சபைக்குத்தான் போகிறீர்கள், அந்த சபையிலே இப்படிப்பட்ட ஆவிக்குரிய உபாத்தியாயர்கள் உண்டா? இல்லை என்றால் நீங்கள் ஒரு போதும் வளர்ச்சியடைய முடியாது.

உங்கள் பிள்ளைகள் பூரண அறிவுள்ளவர்களாகும் படி THE BEST SCHOOL ல் சேருங்கள். நீங்கள் ஆவிக்குரிய பூரண அறிவடையும் படி THE BEST CHURCH ல் சேருங்கள், மெய்யான திருச்சபையாம், புதிய எருசலேம் சபையில்,

தேவனால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலர் உண்டு.
உங்களை சீர்படுத்தும் வல்லமையுள்ள தீர்க்கதரிசிகள் உண்டு.
தேவ அன்பினால் நெருக்கப்படும் சுவிசேஷகர்கள் உண்டு.
உங்கள் ஆத்துமாவுக்கு உத்தரவாதிகளாய் விழித்திருக்கிற மேய்ப்பருண்டு.
போதகர்களுண்டு.
வாருங்கள். வந்து நிறைவடையுங்கள்.

"அன்புடன் சத்தியத்தைக் கைக்கொண்டு, தலையாகிய கிறிஸ்துவுக்குள் எல்லாவற்றிலேயும் நாம் வளருகிறவர்களாயிருக்கும் படியாக அப்படிச் செய்தார்" எபே. 4:15.

சுவிசேஷம்

# மனிதனே உன்னை யாருக்கு ஒப்புக் கொடுக்க விரும்புகிறாய்?

ஒரு வாலிபனை நான் அறிவேன். அவன் மிகவும் அழகுள்ளவன். அதிகம் படித்தவன். அவன் பெற்றோர் உயர் குடும்பத்திலுள்ள ஐசுவரியமுள்ளவர்கள், மிகவும் மதிப்புக்குரியவர்கள், அந்தஸ்துள்ளவர்கள். ஊர் மக்களால் மிகவும் கௌரவமாய் எண்ணப்படுகிறவர்கள். பையனின் அழகும், படிப்பும், குடும்ப பண்பும், மேன்மையும் அநேகரால் பாராட்டப் பட்டபடியால், அதே போன்ற அழகும், அந்தஸ்தும், செல்வமும் உள்ள நற்குண பெண் பிள்ளையை அவனுக்கு விவாகம் முடித்து கொடுக்க பலர் விரும்பினர். அப்படிப் பட்ட பெண்களில் ஒருத்தியை அந்த வாலிபன் மணந்திருப்பானானால் அவனுடைய அந்தஸ்து மேன்மை, கௌரவம் இரட்டிப்பாயிருக்கும். வாழ்வெல்லாம் மகிழ்ச்சியும் சமாதானமும் நிறைவாய் இருந்திருக்கும்.

ஆனால் அந்த வாலிபன் செய்த காரியம் என்ன தெரியுமா? இவன் தன்னுடைய அலுவல் நிமித்தமாய் வெளியூரில் தங்கி இருக்கையில், பக்கத்து வீட்டில் வேலைக்காரியாக இருந்த ஒரு அசிங்கமான, தரங்கெட்ட பெண் விரித்த வலையில் விழுந்தான். அவளிடத்திலிருந்த அசுத்த ஆவியால் இவனும் பிடிக்கப்பட்டான். இவனுடைய மேன்மையை எல்லாம் அவள் தின்று விட்டாள். எல்லாம் போய்விட்டது. அவளும் போய் விட்டாள். மிஞ்சியது கண்ணீரும், அவமானமும் துக்கமுமே. அந்த வாலிபன் தீமைக்குத் தன்னை ஒப்புக்கொடுத்தான். நலமானதை இழந்தான். காரணம் நன்மைக்கும் தீமைக்கும் உள்ள மகாபெரிய வித்தியாசத்தை இவனால் உணர முடியவில்லை இதைப் போன்றே தேவனுடைய காரியத்துக்கும் பிசாசுகளுடைய காரியத்துக்கும் உள்ள வித்தியாசத்தை அறியாமலிருக்கிறபடியால் அநேகர் தேவனை பற்றிக்கொள்ளாமலிருக்கிறார்கள். எப்படி இறைவன் இருக்கிறாரோ, அப்படியே பிசாசும் இருக்கிறான். எப்படி நன்மை இருக்கிறதோ அப்படியே தீமையும் இருக்கிறது. எப்படி பகல் இருக்கிறதோ அப்படியே இருளும் இருக்கிறது. எப்படி பரலோகம் இருக்கிறதோ, அப்படியே நரகமும் இருக்கிறது. எப்படி

களிப்பும் சமாதானமும் இருக்கிறதோ, அப்படியே அழுகையும் பற்கடிப்பும் இருக்கிறது.

காணப்படாத தேவ ஆவியானவர் ஒருவனை ஆட்கொள்கிறார், அடிமைப்படுத்துகிறார், அவனைக்கொண்டு தமது விருப்பத்தை நிறைவேற்றி மகிழுகிறார். அவன் தேவ மனிதன். தேவ ஆவியானவர் அவனை இயக்கி ஏவ அவன் ஏழைக்கு இரங்குகிறான், தேவ ஆவியானவர் அவனை இயக்கி ஏவ அவன் ஜெபம் பண்ணுகிறான், தேவ ஆவியானவர் இயக்கி ஏவ தேவ காரியங்களில் ஈடுபடுகிறான், பரவசமாய் சங்கீதம் பாடுகிறான், வல்லமையாய் தேவ செய்தி பகிர்ந்தளிக்கிறான், நொறுங்குண்டவர்களை ஆறுதல் செய்கிறான். காணப்படாத தேவனின் செய்கைகள் காணப்படுகிற தேவமனிதனிடம் காணப்படுகிறது. தேவன் அவனை உயர்த்தி முடிவிலே நித்திய மகிழ்ச்சிக்குள் (பரலோகம்) சேரப்பண்ணுகிறார். ஆனந்தம், சதா ஆனந்தம்.

இதைப் போலவே அசுத்த ஆவி [பிசாசு, சைத்தான், பேய்] யும் ஒருவனை ஆட்கொள்கிறான், கீழ்ப்படுத்துகிறான், அவனைக்கொண்டு பிசாசு தனது விருப்பத்தை நிறைவேற்றி அவனும் மகிழ்கிறான் [II தீமோ. 2:26]. அவன் பேலியாளின் [பிசாசின்] பிள்ளை. அசுத்த ஆவி அவனை இயக்கி ஏவ சாராயக் கடைக்கு போகிறான். அசுத்த ஆவி அவனைத் தூண்ட பரஸ்திரீயை நோக்குகிறான், அசுத்த ஆவி அவனைத் தூண்ட ஊர்வம்பிலே நுழைகிறான். பிசாசு அவனைத் தூண்ட களியாட்டிலே [சினிமா, கூத்து] ஈடுபடுகிறான், மற்றவர்களுக்கு வேதனையையும், துன்பத்தையும், நாசத்தையும், மோசத்தையும் பகிர்ந்தளிக்கிறான். பிசாசு அவனைத் தாழ்த்தி முடிவிலே நித்திய அக்கினிக் கடலிலே [நரகம்] தள்ளுகிறான். அங்கே அழுகையும், பற்கடிப்பும் தீராவேதனையும் இருக்கும்.

பாவம் செய்கிற மனிதனே, [மனுஷியே] உனக்கு பின்னணியில் கிரியை செய்கிற மனித கொலை பாதகனாகிய பிசாசையும், நீ அடையப்போகும் உனது கிரியைகளின் பலனையும் நீ காணும் படி உன் கண்கள் திறக்கப்படுவதாக. சாத்தானுடைய அடிமைத்தனத்தில் பிடிபட்டிருக்கிற உன்னை மீட்க, விடுவிக்கும் விலைக்கிரயமாய் சிலுவையில் சிந்தின தமது மாசற்ற இரத்தத்துடன் உனக்கு முன் நிற்கும் இயேசு கிறிஸ்துவை கவனிக்கும்படி உனக்கு உணர்வு உண்டாவதாக.

நான் முன்பு சொன்ன அந்த வாலிபன் தன்னை மயக்க வருகிற ஸ்திரீயைத் தொடர்ந்து வருகிறதான தீங்கை கவனித்திருப்பானானால், சீ போ என்று சொல்லி இருப்பானல்லவா? உன்னை பாவம் செய்யவைத்து அழிக்க உன்னைத் தூண்டும் சாத்தானுடைய செய்கைகளையும் அதன் முடிவையும் நீ உணர்கிறாய் என்றால் சீ போ என்று சொல். நீ எதற்கு ஒப்புக்கொடுக்க விரும்புகிறாய் சைத்தானுக்கா? தேவனுக்கா? யாருக்கு ஒப்புக்கொடுக்கிறாயோ அவனுக்கே [அவருக்கே] நீ அடிமை.

ஆதி மனிதன் (ஆதாம்) தேவனால் தேவசாயலில் உருவாக்கப்பட்டு தேவனோடு சஞ்சரித்தான். சாத்தான் விரித்த வலையிலே விழுந்து தேவ மகிமையை இழந்து சாத்தானுடைய அடிமைத்தனநுகத்திலே மாட்டிக் கொண்டான். ஆதாமின் மூலம் உருவான மனித சமுதாயம் முழுவதும் ஆதாமுக்குள் பிசாசுக்கு அடிமைகளே. ஆகவே தான் மனிதர்களை பிசாசு ஆட்கொண்டு அவர்கள் மூலம் பற்பல பாவங்களை செய்ய வைத்து தனது இச்சையை நிறைவேற்றுகிறான். மனிதர்கள் பாவத்தை விட்டுவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள், ஆனால் முடியவில்லை. நன்மை செய்ய விரும்புகிறார்கள்; ஆனால், விரும்பாத தீமையையே செய்கிறார்கள் [ரோம. 7:19]. எந்த மனிதனும்

தனது சொந்த முயற்சியால் பாவத்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற முடியாது. அடிமை, எஜமானுக்கு வேலை செய்ய மாட்டேன் என்று எதிர்த்து நின்று பின்னர் எஜமானின் ஆளுகையின் அதிகாரத்தால் கீழ்ப்படுத்தப்படுகிறது போல, சிலர் பாவத்தை எதிர்த்து கொஞ்சம் போராடி கொஞ்ச காலம் பாவம் செய்யாமலிருக்கிறார்கள். ஆனால் சடுதியில் பாவத்திற்குள் மறுபடியும் விழுகிறார்கள். அல்லது ஒரு பாவத்தை விட்டால் இன்னொரு பாவத்தைச் செய்வார்கள். ஜெய ஜீவியத்திற்கு வாய்ப்பே இல்லை. விழுந்து போன ஆதாமின் சந்ததியில் பிறந்த எவனும் வெற்றி அடைய வழியே இல்லை. வெற்றி பெற வேண்டுமானால் அவன் மறுபடியும் பிறந்தேயாக வேண்டும். பாவமற்ற மனிதனாய் வந்த பிந்தின ஆதாமாகிய இயேசு கிறிஸ்துவுக்குள் மறுபடியும் பிறந்து, இயேசு கிறிஸ்துவின் சந்ததியாகிறவன் அடிமைத்தனத்திலிருந்து விடுதலையாகிறான். பாவம் செய்யாதிருக்க அவனுக்கு வாய்ப்பு உண்டாகிறது, ஜெயம் பெற வழி பிறக்கிறது. விழுந்த ஆதாமின் சந்ததியாருக்கு விரும்பினாலும் பாவத்தை ஜெயிக்க வழியே இல்லை. பிந்தின ஆதாமாகிய இயேசுவின் சந்ததியாருக்கு பரிசுத்தமாயிருக்க விரும்பினால் பாவம் செய்யாமலிருக்கலாம். பாவம் செய்ய விரும்பினால், பாவம் செய்து முந்தின ஆதாமின் அடிச்சுவடை பின்பற்றலாம்.

மறுபடியும் பிறக்கவேண்டும். ஜலத்தினாலும் ஆவியினாலும் மறுபடியும் பிறக்க வேண்டும் (யோவா. 3:5) அதாவது மறுஜென்ம முழுக்கினாலும் (ஞானஸ்நானத்தினாலும்) பரிசுத்த ஆவியின் புதிதாக்குதலினாலும் (பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தினாலும்) மறுபடியும் பிறந்து அடிமைத்தனத்திலிருந்து மீட்கப்படலாம்.

அடிமை செத்த பின்பு எஜமான் வேலை வாங்க முடியாது. செத்தவன் அடக்கம் பண்ணப்படுகிறான். தான் செய்த அக்கிரம அநியாயத்திற்காய் பாவத்திற்காய் மனஸ்தாபப்பட்டு, இனிமேல் பாவம் செய்ய மாட்டேன் என்று மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, பாவ மன்னிப்பிற்காய் ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று இயேசுவின் அடிமையாய் ஜீவிக்க தன்னை ஒப்புக் கொடுக்கிறவன் பாக்கியவான். இயேசு அவனை விடுவிக்கிறார், இயேசு இரட்சிக்கிறார், இயேசுவின் மூலம் மீட்பு உண்டு. அவன் அது முதற்கொண்டு தேவ ஆவியால் ஆட்கொள்ளப் படுவதற்கேதுவான கிருபா பாத்திரம்.

நீ யாருக்கு உன்னை ஒப்புக்கொடுக்க விரும்புகிறாய்? தேவனுக்கு அடிமையாகவா? பேய் பிசாசுக்கு அடிமையாகவா? மெய் தேவனும் இயேசுவுக்கு உன்னை ஒப்புக்கொடு. அப்பொழுது நீ பிழைப்பாய். உனக்கு ஆசீர்வாதமும் மிகுந்த நன்மையுமுண்டாகும். வா இயேசுவண்டை.

"... எதற்குக் கீழ்ப்படியும்படி உங்களை அடிமைகளாக ஒப்புக் கொடுக்கிறீர்களோ, அதற்கே கீழ்ப்படிகிற அடிமைகளாயிருக்கிறீர்கள்" [ரோ. 6:16].

31. 8. 1992 அன்று பம்பாய் தலைமை சபையில் 2 பேர் ஞானஸ்நானம் ★ பெற்று திருச்சபையின் அங்கமானார்கள். ★

சிறுவர் பகுதி

# கனிமரம்

பிள்ளைகளே,

புதிய எருசலேம் செய்தியிலே சிறுவர் பகுதி என்ற பகுதியை நமக்குத் தந்த தேவனை ஸ்தோத்தரிப்போம். சிறுவர் பகுதியில் இன்று கனி தரும் ஜீவியம் பற்றி பார்ப்போமா?

கனிகளில் பல வகையான கனிகள் உண்டு. வாழைக்கனி, மாங்கனி பலாக் கனி, கொய்யாக்கனி, திராட்சைக்கனி இப்படிப் பல. அதுபோலவே ஆவியின் கனியோ ' அன்பு, சந்தோஷம், நீடிய பொறுமை, நற்குணம், சாந்தம், தயவு, நல்விசுவாசம், இச்சையடக்கம் ஆகிய இவைகளாகும். இவைகளை நாம் பெற்றிருக்கவேண்டும் அந்தந்த மரம் அதனதன் கனியினால் அறியப்படும். மரம் நல்லதென்றால் அதன் கனியும் நல்லதென்று சொல்லுங்கள். ஆம், நம்முடைய வாழ்க்கை இறைவனுக்குப் பிரியமாயிருந்தால் நம்முடைய கிரியையும் [கனி] நல்லதாகவே இருக்கும். கெட்டமரம் கெட்டகனி கொடுக்கும்.

நற்கனி கொடுக்கும் மரத்தைத் தேடி பறவைகள் வருவது இயற்கையே. நம்முடைய நற்கிரியைகள் மூலம் அநேகர் நம்மை நாடி வருவதும் இயற்கையே. கனியுள்ள மரம் தான் கல்லெறியும் வாங்கிக் கொண்டு கல் எறிகிறவர்களுக்கும் கனி கொடுக்கும். நம்முடைய வாழ்க்கையும் அப்படியே இருக்க வேண்டும். கனியுள்ள மரம் தாழ்ந்து வளைந்து பணிவுடன் நிற்கும். நாமும் அப்படியே பரிசுத்தவான்களுக்குப் பணிந்து இருக்க வேண்டும். அத்திமரத்தில் தேவன் கனியை எதிர்பார்த்தார். அவ்விதமாக நம்மிடத்திலும் தேவன் கனியை எதிர்பார்க்கிறார். நாமும் அநேகர் ஆண்டவர் இயேசுவைக் காண உதவி செய்வோமாக. ஆலயத்திற்கு அழைப்போம். அரசாங்கம் அறிவிக்கிறது 'மரம் வளர்ப்போம் மழை பெறுவோம்' என்று. ஆனால், நாமோ 'மரம் வளர்ப்போம் நல்ல கனி பெறுவோம்' என்று சொல்லலாம். நல்ல கனி கொடுப்போம், நல்லகனி கொடுக்கும் நல்ல மரமாவோம்.

''சகலவித நற்கிரியைகளுமாகிய கனிகளைத் தந்து, கர்த்தருக்குப் பிரியமுண்டாக நடந்துகொள்ளுங்கள்'' கொலோ.1:10.

# சாட்சி

கர்த்தருக்கு ஸ்தோத்திரம். நான் இந்து சமுதாயத்தை சேர்ந்தவன். எனது குடும்பத்தார் யாவரும்இந்து சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். இந்து முறையின்படி வளர்க்கப்பட்டேன். எனது சொந்த ஊர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள வள்ளியூர் என்ற இடம். இந்து முறையின்படி திருமணம் செய்து வைத்தார்கள். எனக்கு ஒரு பையனும், ஒரு பெண்ணுமாக இரண்டு குழந்தைகள் இருக்கிறார்கள்.

இந்துதெய்வங்களையேவணங்கி, அநேக இந்து ஸ்தலங்கள் சென்று இந்து தெய்வங்களே உயர்ந்த தெய்வம் என எண்ணி எனது வீட்டில் ஏராளமான இந்து படங்கள் பிரேம் பண்ணி, அதற்கு தினமும் புஸ்பம் போட்டு, கற்பூரம், பத்தி கொழுத்தி அதை வழிபட்டு வந்தேன். காலை,

நாலே வெள்ளியூர் இந்து கோவிலுக்கு தினமும் போய் வருவேன் இப்படியாக நான் ஒரு வைராக்கியம் உள்ளவனாக இருந்து வந்தேன். இப்படியிருக்க என்னுடைய உடம்பில் கழுத்து பக்கமாக ஒரு புற்று மாதிரி ஒன்று வளர ஆரம்பித்தது அதை இந்துக்கள் ராஜபிளவை என்று சொல்லுவார்கள். மற்றும் எனது மார்பில் ஒரு காற்று பிடி ஒன்று உற்பத்தியாகியது. அடிக்கடி அந்த வலி மாரடைப்பு மாதிரி வந்து மிகவும் கஷ்டப்பட்டேன். உயிர் போய்விடும் போல் வரும் அப்போது டாக்டரிடம் காண்பித்து வருவது வழக்கம். ஆனால் குணம் கிடைப்பது இல்லை. தோளில் உள்ள புற்றும் எத்தனையோ தடவை ஆபரேஷன் செய்தும் அதுவும் மாறுவதாக இல்லை. டாக்டரிடம் காண்பித்து பணம் எவ்வளவோ செலவு செய்தும், இன்னும் நாட்டு வைத்தியம் செய்தும் எதற்குமே சுகம் கிடைக்கவில்லை. இதினால் நான் செய்து வந்த தொழிலிலும் கஷ்டம் வந்து நஷ்டம் ஏற்பட்டது. உடம்புபலவீனம் அடைந்து மெலிந்து எலும்புகள் முழுவதும்தெரியும்படி இருந்ததாலும் தொழில் நஷ்டத்தாலும் மனம் நொந்து தற்கொலை செய்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் உருவாகியது. மனச் சமாதானம் இல்லாமல் வீட்டுக்கும் போகாது 10 நாட்களாக வெளியில் இந்துக் கோயில் மண்டபத்தில் எனது சில நாட்களை கழித்து வந்தேன்.

அப்பொழுது நான் வணங்கி வந்த தெய்வங்கள் ஒன்றும் எனக்கு எந்த மாறுதலும் தரவில்லை. இவைகள் எல்லாம் கற்பனையே மனிதனின் கைவேலையான சிற்பங்கள், வெறும் கல் என்று எண்ணி அந்த தெய்வங்களை வெறுத்தேன். இந்து கோவிலுக்கு போவதை நிறுத்தி வெறுமையாக அலைந்து திரிந்தேன். மேலும் இந்து தெய்வங்களை தெய்வம் என எண்ணினவர்கள் எனது ஊரில் அநேகர் வீடு இழந்து பலவீனப்பட்டு பைத்தியமாக மாறி மரணம் அடைந்து குடும்பங்களும் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதை நான் பார்த்து மனம் உடைந்தேன். கெட்ட பழக்கங்களை கைக்கொண்டவனாக இருந்து வந்தேன். மேலும் எனது உடம்பில் உள்ள பலவீனம் மாறும்படி இந்து தெய்வங்களுக்கு நேர்ந்தது உண்டு அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை. இப்படியிருக்கும் போது எனது பையன் கோவையில் பட்டப்படிப்பு படித்துக்கொண்டு இருந்தான். அந்த சமயம் கல்லூரியில் சில கிறிஸ்தவ நண்பர்களுடன் பழகி இயேசுவை ஏற்றுக் கொண்டு, ஞாயிறு தோறும் ஆராதனைக்கு போவதாக நான் கேள்விப்பட்டேன். இப்படியாக எனது பையன் கிறிஸ்துவை ஏற்று கிறிஸ்தவனாக மாறியிருந்தான்.

அந்நாட்களில் கல்லூரி விடுமுறைகளில் ஊர் வரும்போது இயேசுவைப்பற்றி என்னிடம் அடிக்கடி சொல்வது உண்டு. ஆனால் அந்த சமயம் நான் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ள மனது இல்லாதிருந்தேன். காரணம், எங்கள் மதம், ஜாதி பற்று என்னிடம் அதிகமாக இருந்து. ஆனால் எனது பாவத்தின் காரணமாகவும், என்னுடைய அவல நிலையையும் நான் பார்த்து எனது பையன் நிலைமையையும் அறிந்து நானும் இயேசுவை அறிய எண்ணங்கொண்டேன். அந்த சமயம் எனது பையன் லீவில் வந்து இருந்தான். நான் வீடு சென்றேன் அவன் என்னைப் பார்த்துக்கலங்கிநீங்கள் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளுங்கள் அவர்தான் உண்மையான தெய்வம் எனக்கூறிபுதிய ஏற்பாடு ஒன்றை என்னிடம் தந்து படிக்க ஏற்பாடு செய்தான். நான் படிக்கும் பொழுது எனது உள்ளத்தில் ஒரு உணர்வு ஏற்பட ஆரம்பித்தது. என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே தள்ளுவதில்லை என்ற வசனமும் (யோ. 6:37), பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் (I தீமோ. 1:15.) என்ற வசனமும் உள்ளத்தை அதிகமாக

'தேவன் ஒருவரே . . .'

# THERE IS ONE GOD...

Regd No 040088/84
Postal Regd No MH BY NE-94/83
Tamil Monthly Magazine

தொட்டது. அப்பொழுது நான் எவ்வளவு பெரிய பாவி என உணர்ந்தேன். அன்று முதல் இயேசுவை தெரிந்து கொள்ள ஆவல் உள்ளவளாக இருந்தேன். பின்பு வள்ளியூர் புதிய எருசலேம் சபையின் ஆலய பிரதிஷ்டையன்று, புதிய எருசலேம் சபையின் தலைமை மேய்ப்பர் அவர்கள் மூலமாக நான் ஞானஸ்நானம் பெற்றேன். அது முதல் என் வாழ்க்கையின் பலவீனங்கள் மாறியது. உடம்பில் இருந்த வியாதியும் முற்றிலுமாக மாறி சுகத்துடன் இருக்க கர்த்தர் கிருபை செய்தார். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி; அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்ற திருவசனம் எனது குடும்பத்தில் நிறைவேறவும் கிருபை செய்தார். எனது இரண்டு பிள்ளைகளுக்கும் திருச்சபையிலேயே திருமணம் நடந்துள்ளது.

இன்று எனது குடும்பம் முழுவதும் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாக உள்ளது. தற்சமயம் நான் சென்னையிலுள்ள என்னூர் அனல் மின் நிலைய காம்பவுண்டில் இருந்து வருகிறேன். எனது பையன் அனல் மின் நிலையத்தில் பொறியாளராக இருந்து வருகிறான். நாங்கள் முழுக் குடும்பமாக கர்த்தருக்கு ஊழியம் செய்து வர கர்த்தர் ஆசீர்வதித்துள்ளார். நான் பெற்றுக்கொண்ட இந்த இரட்சிப்பை, நீங்களும் பெற்றுக்கொள்ள கர்த்தருக்குள் வேண்டிக் கொள்கிறேன்.

சகோ. அருணாசலம் என்ற மீகா
சென்னை-கினை.

---

"நீங்கள் அஞ்ஞானிகளாயிருந்தபோது ஏவப்பட்டபடியே ஊமையான விக்கிரகங்களிடத்தில் மனதைச் செலுத்தினீர்கள்"
I. கொரி. 12:2.

---

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   12 [திங்கள்] அக்டோபர் 1992
   10 [செவ்வாய்] நவம்பர் 1992
   10 [வியாழன்] டிசம்பர் 1992
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி

   **CHIEF PASTOR N LAZAR**
   **"NEW JERUSALEM CHURCH"**
   **CHURCH LANE, TILAK NAGAR,**
   **DARGA ROAD, BHANDUP,**
   **BOMBAY-400 078 INDIA**
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 104 - OCT./NOV. '92

## "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ரா)ன் என்று நீங்கள் அறியீர்கள்...
விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்
கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

– மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கேற்ப்பான பூரண வளர்ச்சியான பரிமாணப்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியான பரிமாணப்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7 நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே ...

# ஆசிரியர் உரை

மனித ஜாதியை பிடித்துள்ளது பாவம். எந்த மன அடக்கமோ, பக்தியோ நிறைவேற இயம நியமங்களை (ஒழுக்கக் கட்டுப்பாடு) கடைபிடிக்க வேண்டும். இல்லாவிட்டால் எந்த யோகமோ சைதனியங்களோ உதவாது. எவ்வளவுதான் மனதை கட்டுப்படுத்தினாலும் ஆழ்மனதில் பாவம் இருக்கிறது. அது காலாகாலங்களில் மனிதனிலிருந்து வெளிப்படுகிறது. பாவம் என்றால் என்ன? பாவம் என்றால் எது பாவம்? எவைகள் பாவம்? என்ற அறிவே பிறமதங்களுக்கு சரியாகத் தெரியாது. தனக்கு ஒரு நீதி, பிறருக்கு ஒரு நீதியாக வாழ்கிறார்கள். தனக்கு லாபமாகத் தோன்றுகிற விஷயத்தில் மனிதனின் மன சாட்சி செத்துவிடுகிறது. மனிதனை, மனிதன் தீழ்ப்பானவன் என்று எண்ணுகிறான். ஆனால் மிருகங்களுக்கு கனம் கொடுக்கிறான், அதற்கு பாதுகாப்பு கமிட்டி அமைக்கிறான். அவைகளை நேசிக்கிறாள். அவனே தன் மதத்தை மெச்சிக் கொள்கிறான். ஜாதி இல்லையென்பான், அவனே தன் ஜாதிக்கு தலைவனாவான். ஆக மொத்தத்தில் மனிதன் மறுபடியும் பிறக்கவேண்டும், கல்வாரி சிலுவையில் உயர்த்தப்பட்ட இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறதினால் மனிதனுடைய அகக்கண்கள் திறக்கும். மறுபிறப்படைவான். பாவம் எது என்பதும், புண்ணியம் எது என்பதும் தெரியும். பரிசுத்தமடைவான், சித்தியடைவான், சித்தி (பக்குவம்) அடைந்தவனே மனிதன், இயேசுவால் மனிதன் மனிதனாகலாம்; இயேசுவாகிய கிறிஸ்துவானவர் அதை அருளுவார். கிறிஸ்தவத்தின் மேன்மை இனி சிறக்கும். கிறிஸ்துவினால் உண்டாகும் மகாபெரிய விடுதலையும், தெய்வீக ஐக்கியமும், தூய ஆவியின் அபிஷேகமும் அதன் நிறைவும், மனிதன் இந்த உலகத்தில் ஆற்றக்கூடிய நற்கருமங்களும் மனிதனுக்கு இலகுவாகக் கிடைக்கின்றன. தேவனே மனிதனை ஆளும் நிலைதான் கிறிஸ்தவம். மனிதன் தெய்வத்தோடு ஐக்கியமாகி, தெய்வத்தால் ஆட்கொள்ளப்பட்டிருக்கிறதே மேன்மையும் உயர்வுமான நிலை. இந்நிலையில் குற்றமில்லை.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் இந்த நல் நிலையை தேவன் நம்மெல்லோருக்கும் பூரணமாய் அருளுவாராக!

கிறிஸ்துவுக்குள்

N. Lazar

CHIEF PASTOR N. LAZAR

# கிருபை வரங்கள் (தொடர்ச்சி)

## III வல்லமையின் வரங்கள்

### 1. விசுவாசம்

II. தெய்வீகக் கிரியைகள் நடப்பித்தல்

எலியா தீர்க்கதரிசி, ஆகாப் அரசன் பாகால் தீர்க்கதரிசிகளுக்கு முன்பு அக்கினியினால் உத்தரவு அருளும் தெய்வமே தெய்வம் என்று சவால் விட்டார். அந்த விசுவாசத்தை எலியா கிரியைகளின் மூலம் வெளிப்படுத்தினார். பலிபீடத்தைச் சுற்றி வாய்க்கால் வெட்டி அவ்வாய்க்காலும், பலிபீடமும், விறகும் தண்ணீரினால் நனையும்படிச் செய்தார். விசுவாசத்தினிமித்தம் தேவக்கிரியை அங்கே நடைபெற்றது. வானத்திலிருந்து அக்கினி கீழே இறங்கிற்று. எலியாவின் தேவன் உண்மையான தேவன் என்பது புலனாயிற்று. இதுவே விசுவாச மென்னும் வரத்தின் வெளியரங்கமான கிரியை (I இரா. 18:17:39).

III. விசுவாசத்தினால் அவர்கள் சிங்கங்களின் வாய்களை அடைத்தார்கள், அக்கினியின் உக்கிரத்தை அவித்தார்கள் (எபி. 11:33.34]

தானியேல், சாத்ராக், மேஷாக், ஆபேத் நேகோ என்பவர்களைப் பற்றிய செய்தியாகும் இது. தானியேலை சிங்கக் கெபியில் போட்டனர். ஆனால், அவரில் காணப்பட்ட விசுவாசம் அவரைத் தைரியப் படுத்திற்று. அவ்விசுவாசம் சிங்கங்களின் வாய்களை அடைத்தது. சாத்ராக், மேஷாக், ஆபேத் நேகோ என்னும் மூவரையும் எரிகிற அக்கினிச் சூளையில் போட்டனர். ஆனால் அவர்களிலிருந்த விசுவாசம் அவர்களை தைரியப்படுத்தினது. அந்த விசுவாசமானது அக்கினியின் உக்கிரத்தை அடக்கிவிட்டது, அவித்துப்போட்டது. இது விசுவாசம் என்னும் வரத்தின் வெளியரங்கமான கிரியை என்று சொல்லலாம்.

இவ்வாறு விசுவாசம் என்னும் வரம் இயற்கைக்கு அப்பாற்பட்ட தெய்வீக விசுவாசத்தின் கிரியையை நடப்பிக்கின்றது. இந்த விசுவாசவரம் உடையவர்கள் தேவ ஆவியானவருடைய தூண்டுதலின் பிரகாரம் எந்த அற்புதங்களையும் அதிசயங்களையும் நடப்பித்துக் காண்பிக்கலாம்.

### 2. அற்புதங்கள்

இயற்கையின் சாதாரண கிரியைகளிலுள்ள இயற்கைக்கப்பாற்பட்ட நிகழ்ச்சி. இயற்கையின் சாதாரண கிரியைகளுக்கு ஒரு சட்டம் உண்டு. அது உலகில் ஒழுங்காக தொடர்ந்து வருகிறது. ஆனால், சில சமயங்களில் இயற்கையின் விதிக்கு மாறாக சில காரியங்கள் நடைபெற தேவன் அனுமதி யளிக்கிறார். அவ்விதமாக நடைபெறும் கிரியைகளுக்கு அற்புதம் என்று பெயர் இவ்வித அற்புதங்களை நடப்பிக்கும் வரங்களை ஆவியானவர் சில தேவ மக்களுக்குக் கொடுக்கிறார் II இரா. 20:1–11ல் உள்ள சம்பவங்களைக் கவனியுங்கள்: எசேக்கியா ராஜா வியாதிப்பட்டு மரணத்தறுவாயில் இருக்கையில் தேவ ஏவுதலினால் அங்கு சென்ற ஏசாயா தீர்க்கதரிசி, அரசன் சுகமடைவான் என்றும், மூன்றாம் நாளில் ஆலயம் செல்லத்தக்கதாக சரீரம் குணமடையும் என்றும் கூறினார். சொன்னபடி நடைபெறும் என்பதற்கு ஒரு அடையாளத்தை அரசன் எதிர்பார்க்க, சாயை பத்துப்பாகை முன்னிட்டு போக வேண்டுமோ பத்துப்பாகை பின்னிட்டு திரும்ப வேண்டுமோ எனத் தீர்க்கதரிசி கேட்டார், அதற்கு எசேக்கியா அரசன் சாயை பத்துப்பாகை முன்னிட்டுப்போவது இலேசான காரியம் அப்படி வேண்டாம் சாயை பத்துப் பாகை பின்னிட்டுத் திரும்பும்படிச் செய்யும் என்று பதில் கொடுத்தான். ஒரு கடிகாரத்தில் அதின் முள் முன்னிட்டுப் போகிறது இயற்கை அது அற்புதமாகாது.

ஆனால், கடியாரத்தின்முள் பின்னிட்டுப் போகிறது சாதாரண சட்டத்திற்கும், ஒழுங்கிற்கும் முரணானது. அப்படி நிகழ்வது தான் அற்புதம். அன்று அங்கே நடைபெற்றது அற்புதமே. அதாவது இயற்கையின் சாதாரண ஒழுங்கிற்கு மாறாக, இயற்கைக்கப்பாற்பட்ட நிகழ்ச்சி ஏற்பட்டது. இவ்வரம் எந்தெந்தத்துறைகளில் கிரியை செய்கிறது என்பதைக் கவனிப்போம்.

I. இழந்ததை திரும்பப்பெற.

மரம் வெட்டிக் கொண்டிருந்த ஒருவனின் கோடரி தண்ணீரில் விழுந்து விட்டது. இயற்கையின் நியதிப்படி அது நீரில் அமிழ்ந்து விட்டது. கோடரி போன்ற பழுவான பொருள் நீரில் விழுந்து விட்டால் அது அமிழ்ந்து போவது இயற்கையே. அது அற்புதமாகாது. ஆனால் தீர்க்கதரிசியாகிய எலிசா அங்கே சென்று ஒரு மரக்கொம்பை வெட்டி அது விழுந்த இடத்தில் எறிந்தார். அப்பொழுது அந்த இரும்புக் கோடரி தண்ணீரில் மிதக்க ஆரம்பித்தது. இது இயற்கைக்கு முற்றிலும் முரண்பட்ட செயலாகும். இது தான் அற்புதம். அற்புதங்களின் வரம் இங்கே கிரியை செய்தது [II இரா. 6:1 7].

II. சேவையில் உதவ.

எலியா கேரீத்திலிருக்கையில் காகத்தாலும், சாறிபாத்திலிருக்கையில் விதவையின் மூலமும், போஷிக்கப்பட்டார். அப்பத்தை காகம் திருடிச்செல்லுமெனில் அது இயற்கை. ஆனால் காகம் அப்பத்தைக் கொண்டுவந்து ஒருவருக்குகொடுத்ததெனில் இயற்கைக்கு முரண்பட்ட செயலே. அது அற்புதமே. பானையிலிருந்து மாவையும், கலயத்திலிருந்து எண்ணெயையும் எடுத்தால் பாத்திரத்தில் பொருள் குறைவு படுவது இயற்கையே யாவரும் எதிர்பார்ப்பது இது தான். பொருட்குறைவு ஏற்படுவது வழக்கம். ஆனால், எடுத்த பொழுதும் பானையில் மாவும், கலயத்தில் எண்ணெயும் பெருகினது என்றால் அது இயற்கையின் சட்டத்திற்கு முரண்பட்டதாகும். நிச்சயமாக அது அற்புதமே.

தெய்வீகக் கிரியையில்லாமல் அது அப்படி நடைபெற முடியாதே. சாறிபாத் விதவையின் குறிப்பில் அது நிகழ்ந்தது. கர்த்தர் தேசத்தின் மீது மழையைக் கட்டளையிடும் நாள் மட்டும் பானையில் மாவு குறைந்து போவதுமில்லை, கலயத்தில் எண்ணெய் குறைந்து போவதுமில்லை என்று எலியா கூறினார். அப்படி அவர் கூறும்பொழுது தான் பெற்றிருந்த அற்புத வரத்தை உபயோகித்தார் என்பதாம் [I இரா. 13:1–16].

III. இயற்கையின் மீது அதிகாரம் செலுத்துவது:-

இயேசுவானவர் தண்ணீரின் மேல் நடந்தார் [மத். 14:22–34]. தண்ணீரினூடே நடப்பது என்றால் அது அற்புதமாகாது. ஒருவர் தண்ணீரில் மூழ்கிவிட்டார் என்றால் அது அற்புதமாகாது, அது இயற்கையே. ஆனால், ஒருவர் தண்ணீரின் மேல் நடக்கிறார் என்றால் அது அற்புதமே. ஏனெனில் அது இயற்கையின் விதிக்கு முரணான செய்கையாகும். இவ்விதமே அன்று நடைபெற்றது. இயேசு தண்ணீரின் மேல் நடந்தார். சிறிது நேரத்திற்குப் பின்னர் தமது சீஷனையும் நடக்கும்படி பணித்தார். அங்கு நடந்தது அற்புதம் செய்யும் வகையை கலந்ததாம். இவ்வாறு சாதாரண இயற்கைக்கப்பாற்பட்ட தெய்வீகக் கிரியைதான் அற்புதங்கள் என்பதாகும்.

## 3. குணமாக்கும் வரங்கள்

நோய்களிலிருந்து இயற்கைக்கப்பாற்பட்ட முறையில் விடுதலை பெறுவது தெய்வீக சுகம். வெவ்வேறு விதங்களில் வியாதிகளிலிருந்து சுக விடுதலை ஏற்படுகிறது. மனித சிகிச்சையின்றி தேவன் மேலுள்ள பற்றுதல், விசுவாசம் இவைகள் மூலம்

பெறும் விடுதலையை தெய்வீக சுகம் என்கின்றனர். அவ்வாறு நடைபெற ஆவியானவர் சிலரை ஏவுகின்றார். அதற்கான வரத்தையும் அவர்களுக்கு கொடுக்கின்றார். இதுவே நோய்களை குணமாக்கும் வரங்கள். வியாதி என்பது உலகப்பிரகாரமானது. சாதாரணமாக எல்லோரையும் தாக்கக்கூடியது. தெய்வீக சுகம் என்பது எல்லோரும் எதிர்பார்க்க கூடியதொன்றாகும் தெய்வீக சுகத்தைக் குறித்துத் தப்பான அபிப்பிராயங்கள், சந்தேகங்கள் உண்டாக வாய்ப்பு உண்டு. அவ்வாறு ஏற்படவும் செய்கிறது. ஆகவே அதன் கிரியைகளை நாம் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும்.

எந்த விசுவாசியும் வியாதியஸ்தருக்காக ஜெபிக்க உரிமையுண்டு. சரீர சுகமடைவது தேவ வாக்குத்தத்தங்களுக்குட்பட்டதொன்றும். சுகம் பெறுதலைக் குறித்து வாக்குத்தத்தம் உண்டு [யாத்.15:26] விசுவாசத்தின் மூலம் நடைபெறும் அற்புத அடையாளங்கள் இதைச் சார்ந்ததுவே [மாற். 16:18]. வியாதியஸ்தருக்காக ஜெபம் செய்வது ஒரு சபை ஊழியரின் கடமைகளில் ஒன்று [யாக். 5:14]. இவைகள் எல்லாம் சாதாரணமாக நடைபெறும், நடக்கவேண்டியதுமான காரியங்களாகும். எந்த விசுவாசிக்கும் ஜெபிக்க உரிமையுண்டு என்பதுமாகும். ஆனால், இதிலிருந்து முற்றிலும் வேறுபட்ட நிலையில் நோயாளிகளுக்காக ஜெபித்து அவர்களுக்கு விடுதலையுண்டு பண்ணும் ஒரு பிரத்யேக வரம் ஆவியானவர் சில ஆட்களுக்கு கொடுக்கிறார். அதுதான் குணமாக்கும் வரம்.

வரம்: இயற்கைக்கு மாறாக உண்டாகும் விடுதலையைத் தான் குணமாக்குதல் என்று நாம் அறியவேண்டும். அதுவே மனித சிகிச்சையாதுமின்றி ஏற்படும் விடுதலை. ஜெபித்த உடனே பூரணவிடுதலை கிடைக்கவில்லையெனில் அது தெய்வீக சுகமாகக் கருதாதவர்களுண்டு. உடனே நாம் பெறுவது இயற்கைக்கப்பாற் பட்ட செய்கை, அது அற்புதம் எனப்படும். மனித சிகிச்சை ஒன்றுமில்லாமல் இயற்கைக்கப்பாற்பட்ட முறையில்பெற்றுக்கொள்வதே தெய்வீக சுகமாகும். எந்தெந்த வகையில் குணமாக்குதலைப் பெற்றுக் கொள்ளலாம் என்று சிந்திக்குங்கால் இவ்வரம் கிரியை செய்யும் முறையையும் அறிந்து கொள்ளலாம்.

1. மாற். 8:23-25: இயேசு ஒரு குருடனை குணப்படுத்தியதைக் காண்கிறோம். ஆரம்பத்தில் அந்த மனிதனுக்கு, மனிதர்களை மரங்களை போலக் காண்பதற்கான விடுதலை மட்டும் கிடைத்தது. திரும்பவும் கர்த்தர் அவன் மேல் கைவைத்தார். அப்பொழுது அவன் பூரண விடுதலை பெற்றான். இது படிப்படியான குணப்படுத்தலாகும்.

2. யோ. 9:6,7 ல் இயேசு வேறொரு குருடனை குணப்படுத்துவதை வாசிக்கிறோம். அவனுடைய கண்கள் சேறு பூசியபின் சீலோவாம் குளத்தில் சென்று கழுவும்படி கூறினார். அந்தக் குருடன் இயேசுவானவரின் நிபந்தனைப்படி சென்று கழுவின பின் குணமடைந்தான். குளத்தில் போய் கழுவுக என்பதை அவன் மறுத்திருந்தால் அவனுக்கு விடுதலை கிடைத்திருக்காது என்பது திண்ணம்.

நாகமானின் விடுதலையும் நிபந்தனையுடையதாயிருந்தது [II இரா. 5:1-14]. யோர்தான் நதியில் ஏழுதடவை மூழ்க வேண்டியதே அந்த நிபந்தனை. அந்த நிபந்தனைக்கு அவன் கீழ்ப்படிந்தபோது குணமடைந்தான். நிபந்தனைக்குக் கீழ்ப்படியாதவனாயிருந்திருப்பானெனில் அவன் நோயாளியாகவே இல்லம் திரும்பியிருப்பான். ஆகவே' இது நிபந்தனையோடுள்ள குணமாதல். இங்கே, நோயாளி செய்ய வேண்டிய ஒரு காரியத்தின் அடிப்படையிலேயே விடுதலை கிடைக்கிறது.

3. நிபந்தனைகளில்லாமல்: ஒரு முறை

தொடர்ச்சி 9ம் பக்கம்

# இந்து மதம் (தொடர்ச்சி)

இமயம் முதல் குமரி வரை இந்து தேசத்தின் சர்வ எல்லையிலும் உலகில் எங்கும் காணக்கூடாதஜாதிப் பிரிவினையும், ஒரு தேசத்திலும் காணக்கூடாத அளவு கொடுமையும் பலமாய் காணப்படுகிறது. கல்வி, செல்வம், பட்டம், பதவி சிறப்பால் புகழ் மணம் வீசி வாழ்வோர் ஒரு சாரார் இருக்க வறுமையும், சிறுமையும் வாதை நோய்போல் வாட்டிவதைத்தாலும் பெரிதும் குலப்பெருமை, குடும்பப்பெருமை பேசிதாங்களே உயர்குலத்தோர் என பிறவிப்பெருமை பேசி நடப்போர் இந்த தேசத்திலே உண்டு. இது இந்து மதத்தின் அஸ்திபாரமாகும்.

மக்கள் பிறப்பை உயர்வு தாழ்வு என பிரித்து பெருமை பாராட்டும் துர்ப்பழக்கம் மனித சமுதாயத்தில் பெரிதும் பிளந்து சமத்துவமின்மையையும், சமாதானகேட்டையும் உண்டாக்கி, அன்பற்ற மனப்பான்மையை மக்கள் உள்ளத்தில் உருவாக்கி தம்மைப் போன்ற பிறரை இழிகுலத்தோர் என்று இகழ்ந்து ஏளனம் பேச காரணமாயிருப்பது இந்து மதம். இது அல்லாது பிறரை நாயினும் கடையாய் மதித்து தங்களை பொன்சட்டியும், பிறரை மண்சட்டியுமாய் நிறையிட்டு, நரகலை நக்கித் தின்னும் நாய், பன்றியை தொட்டாலும் தொடுவோர் பிறரைத் தொட்டால் தீட்டென கூறி தலைமுழுகுவர். இந்து தேசத்தின் எல்லை சமூலமும் இப்பழக்கம் பயங்கரமான ஒரு பரம்பரை தொற்று நோய் போல் வேரூன்றி பரவிப்படர்ந்து ஈடு செய்ய முடியாத சமத்துவமின்மையையும் இழிவையும் மனித சமுதாயத்தில் உருவாக்கி இருக்கிறது. நவீன இந்து தேசத்தில் ஜாதி இல்லை என்று சொல்லி அவர்கள் பிதற்றிக் கொண்டாலும் ஜாதி இல்லையென்று சொல்கிறவர்கள் இச்ஜாதியில் பெலமாய் இருக்கிறதை அவர்கள் ஜீவியமும் நடைமுறையும் பெலமாய் நிரூபிக்கிறது.

இந்துசாஸ்திர வேத புராண காவியங்களில் மனிதனில் ஜாதி உற்பவ வரலாற்றை விபரீதமாக பொருத்தமற்ற முறையில் எழுதியிருக்கிறதைக் காணலாம். இந்த ஜாதி என்று சொல்லுகிற பிரிவினையானது மனிதர்களிலிருந்து ஆரம்பமாகவில்லை, தேவர்களிலிருந்தே ஆரம்பமாயிருக்கிறது என்பதை இந்து வேதங்கள் ஆதாரப்பூர்வமாக விளக்கிக் காட்டுகின்றன. பிர்மாவின் நான்கு வித்தியாசப்பட்ட இடங்களிலிருந்து பிராமணரும், சத்திரியரும், வைசியரும், சூத்திரரும் தோன்றினதாக எழுதியிருக்கிறது. அதில் விசித்திரம் என்னவென்றால் பிர்மாவின் சரீரத்தில் நான்கு வித்தியாசப்பட்ட இடத்திலும் இந்த நான்கு ஜாதிகளும் பிறக்க நான்கு யோனிவாய்கள் இருந்ததாக அவர்களின் அந்த வேதங்களில் எழுதப்படவில்லை. அப்படியிருக்க எப்படி விசித்திரமாய் முகத்திலிருந்தும், மார்பிலிருந்தும், புஜங்களிலிருந்தும், வயிற்றிலிருந்தும், தொடையிலிருந்தும், கால் பாதங்களிலிருந்தும் ஜாதிகள் உண்டாயின என்று தெரியவில்லை. இன்று ஒரு அந்தணக் குடும்பத்தில் நான்கு பேர் பிறக்கிறார்கள் என்றால் ஒரு பையனை பிராமணனாக, இன்னொருவனை சத்திரியனாக, இன்னொருவனை வைசியனாக, இன்னொருவனை சூத்திரனாக அவர்கள் ஒப்புக் கொள்கிறதில்லை. ஆனாலும் ஜாதி உண்டென்று அவர்கள் பலமாய் நம்புகிறார்கள். அது நிலைத்தோங்குகிறது. வெவ்வேறு நான்கு விதமான தொழில்கள் என்றாலும், ஒரு குடும்பத்தில் நான்கு பிள்ளைகள் பிறக்கிறார்கள் ஒருவர் கோவிலில் பூசாரியாய் இருக்கிறார், ஒருவர் மருத்துவத் துறையில் வேலை செய்கிறார், இன்னொருவர் விவசாயத் தொழிலில் பெரிய பண்ணையாராய் இருக்கிறார், இன்னொருவர் அட்சிபீடம் ஏறி மந்திரியாக பணிபுரிகிறார் என்று வைத்துக் கொண்டால் அது நான்கு ஜாதியாகி

விடுமா? அப்படியும் இல்லை; ஜாதி மனிதர்களில் மாத்திரம் இல்லை. அந்த தேவர்களிலும் ஜாதி உண்டு. அதை இந்துக்கள் உணர்ந்து கொண்டாலும் ஜாதி என்பதை இந்துமதத்திலிருந்து ஒழிக்க முடியாதென்பதை அவர்கள் விளங்க வேண்டும். இந்து மதம் ஒழியாத வரை ஜாதி ஒழியாது. ஏனென்றால், தேவர்களிலேயே ஜாதி இருக்கும் போது ஜாதி ஒழிவது எப்படி?

சிவனை அந்தணகுலம் என்றும், விஷ்ணுவை சத்திரியகுலம் என்றும், பிர்மாவை வைசிய, வணிககுலம் என்றும், தேவேந்திரனை சூத்திரக் குலம் என்றும், தச்சபிரபாபதியின் மகளும் காசிப ரிஷியின் பதின்மூன்று மனைவிகளில் ஒருத்தியுமாகிய அதிதியின் புத்திரராகிய முப்பதுமுக்கோடி தேவர்களை சத்திரியகுலமென்றும், அசுவினிதேவர்களை சூத்திரகுலமென்றும், ஜாதி வகுப்பால் பிரித்துக் காட்டியிருக்கிறது. பிந்தின பிரிவில் ஸ்ரீ அரியை பிராமணகுலமென்றும், சிவனை வணிக குலமென்றும் சொல்லி அவர்களுடைய ஒவ்வொரு வேதத்திலும் ஜாதிப் பிரிவு அமைக்கப்பட்டிருக்கிறது. இதுவுமல்லாமல் அந்தந்த குலத்தவர் அந்தந்த குலதெய்வத்தை வணங்கி ஆராதிக்க வேண்டுமென்பது இந்துக்களுடைய வேதத்தின் மாருத பிரமாணம். ஆனாலும் இந்த வகையிலும் இந்துக்கள் பலர் மீறி ஒரு குடும்பத்தில் ஒருவர் சிவனையும் மற்றொருவர் முருகனையும், விஷ்ணுவையும் ஆராதிக்கிறார்கள். வேறெந்த விதிமுறைப்படி இவர்கள் ஆராதிக்கும் தேவனை இன்ன ஜாதியானென்று சரிவர அறிந்து கொள்ளமுடியாததால் அப்படி செய்கிறார்களோ என்னவோ தெரியவில்லை. சிவஞான சித்தியாரின் சுபக்கம் என்னும் சைவ சித்தாந்த நூலில் தேவர்களின் பூர்விக ஜாதி வரலாற்றை விவரித்துள்ளதை ஆங்கிலத்திலும் தமிழிலும் அறிவுள்ளவர்கள் படித்துப்பார்க்கவும்.

ஜாதி உற்பத்தியைப் பற்றிப் பார்க்கையில் ஜாதிப்பிரிவினையை பிர்மா, தான் பெற்ற நான்கு பிள்ளைகள் மூலம் நான்கு ஜாதிகளையும் உண்டாக்கியதாக தெரிகிறது. பிர்மாவின் மகன் மனு மகாபாரதத்தில் எழுதியுள்ளதை சுபக்கம் 48-ம் பக்கம் விளக்கியிருப்பதும் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லாதது. பெருங்குழப்பமாய்த் தெரிகிறது ஆகவே, இந்த தெய்வமெல்லாம் உண்மையான, ஆதி அந்தமில்லாத அநாதி அரூபியும், சோதி சுயம்பும், ஒளியுமாய் விளங்குகிற பராபரவஸ்துவாகிய தேவனுக்குச் சமமானவர்கள் அல்ல, தேவர்களும் அல்ல என்பதை நாம் திட்டமாய் அறிந்து கொள்ளலாம்.

ரிஷிகளெல்லாம் பெரும்பாலும் பிராமணர்களே. ஒரு சிலர் மற்றவர்களும் உண்டு. பிராமணர்கள்தான் சாஸ்திரங்களை எழுதினதாகவும், இந்தக் கலைகளுக்குத் தலைவர்கள் என்றும் போதிக்கப்பட்டிருக்கிறது. சிவன் முதல் மற்ற எல்லா தேவர்களுமே சுக்கில சுரோனித விருத்தியா உண்டான மனித குலத்தோர் என்று விளங்குகிறது. ஜாதிப்பிரிவினை, இவ்விதமாய் உருவாக்கப்பட்ட தேவர்களாலும் மனிதர்களாலும் உண்டாக்கப்பட்ட வேதாந்த ஆதாரமற்ற மனித சமுதாயத்தை பிளவுபடுத்தும் அஞ்ஞான தடைவேலி என்பதைக் கண்டறிந்த ஞானிகள் இதைத்தவறு என்று பிரித்துக் கண்டித்து விளக்கியுள்ளதைக் காணலாம்.

குதம்பைச் சித்தப் பாடல்

ஆதிப் பரப்பிரம்ம மாக்கு மக்காலையில்
ஜாதிகள் இல்லையடி குதம்பாய்
ஜாதிகள் இல்லையடி;
பார்ப்பார்கண் மேலென்னும்
பறையோர்கள் கீழென்னும் தீம்ப்பாய்
சொல்வதென்ன குதம்பாய்
தீம்ப்பாய்ச் சொல்வவென்ன
பார்ப்பாரே கர்த்தர் பறையோரைப்
போலவே
தீம்ப்பாய் படைத்தோரோடி குதம்பாய்
தீம்ப்பாய் படைத்தோரோடி

பற்பல ஜாதியாய் பாரில் பகுத்து
கற்பனையாகுமோயடி குதம்பாய்
கற்பனையாகு மோயடி
ஜாதி வேறென்றே தரம் பிரிப்போர்க்கு
ஜோதி வேறுகுமோடி குதம்பாய்
ஜோதி வேறுகுமோடி;
ஜாதி என்றுமில்லை சமயம் என்றுமில்லை
என்றுமில்லை எனும் ஜோதி
உணர்ந்தறி நீ குதம்பாய் ஒதி
உணர்ந்தறி நீ.
ஆண்ஜாதி பெண்ஜாதியாகும் இருஜாதி
விண்ஜாதி மற்றதெல்லாம் குதம்பாய்
விண்ஜாதி மற்றதெல்லாம்.

ஔவை வெண்பா

ஜாதி இரண்டொழிய வேறில்லை தாரணியில்
நீதி வழுவா நெறிமுறைமை மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதோர் இழி குலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி.

முச்சுடர் அகஸ்தியர் பாடல்

முச்சுடருமொன்றுகுமோ மும்மூர்த்தியல்ல
மூவருமே யாதொருவமென்றே யாகும்
அச்சுதா இவர்களுமே ஆண் பெண்ணல்ல
அரனுமல்ல லிங்கமல்ல அநாதியான
சச்சிதானந்தனையே வணக்கஞ்செய்து
சற்குருவை தரிசித்து பாதம் போற்றி
எச்சரிக்கைக் கொண்டு நடவப்பா வப்பா
எண்ணிலா முக்தி வழி எய்தலாமே

கௌதமநாயனர் கவி.

ஜாதியே பெருமையாக சாற்றினபேர்களுக்கு
வாதைகள் மெத்த உண்டு
மறுமையிம்மை யொன்றில்லை ஜோதியே
பெருமையாக சொல்லிய ஞானிகளுக்கு
நீதியாம் பேருமுண்டாம்
நிகருமில்லாமுக்திசேருவார்

பத்திரகிரியார் புலம்பல் 126-ம் பாடல்

"ஆதிக்கபிலர் சொன்ன ஆகமத்தின் சொற்படியே
ஜாதி வகையில்லாமற் சஞ்சரிப்ப தெக்காலம்?"

மாடு ஆடுகள் சிங்கத்தையும், சிங்கம் மாடு ஆடுகளையும் கூடிப்புணர்வது போல் உயர்குலத்தோர் இழிகுலத்தோரைக் கூடிப் புணர இன்பமற்றிருந்தாலல்லவோ மனித இனத்தை பல ஜாதிகளாகப் பகுத்துப் பிரிக்கலாம். இன்றைய அனுபவத்தில் மறையோர் முதல் பறையோர் வரை கல்வித்தகுதி பெற்று, பட்டம், பதவி வகுத்து, ஆட்சி பீடத்தில் அமர்ந்து குல வித்தியாசம் பாராது, குல வகையுற்ற கீழ்தர சிப்பந்தியாயினும், தன்னிலும் உச்சபதவியிலுள்ளவரை, அவமதியாது, சகல கண்ணிய மரியாதை செலுத்தி அவருக்கு அடங்கி பணிபுரிந்து வருகிறதை பார்க்கிறோம். பலர் கலப்புத் திருமணத்தில் விருப்பமுற்று, பல ஜாதிகளில் பெண் கொண்டும் பெண் கொடுத்தும் தமிழர், வெள்ளையர், ஜெர்மானியர், ஜப்பானியர், துலுக்கர் என்னும் வித்தியாசமின்றி பிள்ளைகள், பேரப்பிள்ளைகளுடன் பெரும் குடும்பமும் சொத்தையுமுடையவர்களாய், சந்ததியுள்ளவர்களாய் வாழ்வதைப்பார்க்கிறோம்.

ஜாதி என்று சொன்னல் வெவ்வேறு விதமான இனங்களாக அவைகள் இருக்க வேண்டும். ஒன்றை ஒன்று கூடிச்சேர்ந்தால் கருத்தரிக்காது, அதுவே ஜாதி. மனித இனம் ஒரே ஜாதிதான், வேறொரு ஜாதியில்லை. மக்களின் சரீர தோற்றங்களும், ராசதம், தாமதம், சாத்வீகம் என்னும் முக்குணங்களும்; கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்னும் ஆறு சுவைகளும் யாவர்க்கும் வேறுபாடின்றி ஒத்திருப்பதால் ஒருவனை பறையோன் என்றும் ஒருவனை மறையோன் என்றும் மனித இனத்தைக் கூறுபோடுவது மாபெரும் தோஷமாகும், பாவமுமாகும். பசுவின் மலமும் மூத்திரமும், மாட்டின் தசையிலிருந்து ஊறி வெளியான கழிவுகள் பால் என்று அறிந்திருந்தும் அதைக் குடித்தால் தீட்டு நீங்கும் என்று சொன்னல், இவை இரண்

டும் ஊறிக்கிடந்த மாட்டின் இறைச்சியை தின்னும் மனிதனை கீழானவன், இழிகுலத்தவன் என்று எப்படிச் சொல்ல முடியும்? இன்னும் ஜாதி எந்த விதத்தில் பார்த்தாலும் அறிவுள்ளவனுக்கு ஒத்துவராது, உண்மையும் இல்லை. ஜாதிக்கொடுமையால் இந்தியாவில் நடந்து வருகிற அநியாயங்களும் விரோதங்களும் கலகங்களும், தீராத நோயாய்ப் பற்றிப்பிடித்திருக்கிறதைப் பார்க்கிறோம். இது இந்து சாஸ்திரத்தின் தவறால் விளைந்ததாகும். உலகத்தில் எங்குமில்லாத கொடுமையே இது. இவைகள் இயேசு கிறிஸ்துவினால் மாத்திரம் ஒழிந்து ஒரே இனமாகும். ஜாதி இந்து மதத்தின் அஸ்திபாரத்தில் ஒன்று. அதைக் கடைபிடிக்கிற கிறிஸ்தவனும் இந்துவே.

## இந்து தேவர்களின் வரலாறு

பற்பல விகற்பமாய் அருவருப்பான முறையில் இவர்களுடைய பிறப்பின் வரலாறு குறிப்பிடப்பட்டுள்ளது. இந்து மதத்தின் தேவர்கள் உற்பத்தியும், உலக உற்பத்தியையும் படித்தால் நகைப்புக்கிடமான அநேக காரியங்களைக் கண்டு கொள்ளலாம். பூர்வத்திலே தச்சு பிரபாப்திக்கு ஐம்பது பெண்கள் பிறந்தார்கள். அதில் பதின்மூன்று பெண்களை காசிப மகரிஷி கலியாணம் பண்ணிக் கொண்டார். அதிதி என்பவள் முப்பதுமுக்கோடி தேவர்களையும், வாமன் அவதாரமான விஷ்ணுவையும் பெற்றாள். தனு என்பவள் தானவர் முதலானவர்களைப் பெற்றாள். மதி என்பவள் மனிதர்களையும் அவர்களுக்கு இயல்பாகிய வருஷங்களையும் பெற்றாள். சுரதி என்பவள் பசுக்களையும் சராசரங்களையும் பெற்றாள். குரோதவசை என்பவள் கழுதை, கடம்பை, ஒட்டகம் முதலானவைகளைப் பெற்றாள். விமதை என்பவள் காற்று, இடி, மின்னல், அருணன், வருணன், கூகை, பருந்து, பட்சி முதலானவைகளைப் பெற்றாள். தாம்பிறை என்பவள் ஊர்க்குருவி, கௌதாரி, காடை முதலியவைகளைப் பெற்றாள். களை என்பவள் செடிகளையும் கொடிகளையும் பெற்றாள். கந்துருவை என்பவள் பற்பல சிரசுகளையுடைய பாம்புகளைப் பெற்றாள். சுதை என்பவள் ஓனான், உடும்பு, அணில் முதலியவைகளைப் பெற்றாள். அரிஷ்டை என்பவள் ஜலசர முதலியவைகளைப்பெற்றாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் முழு விபரங்களையும் ராமாயண வசன காவியம் ஆரணிய காண்டம் சடாயுவை காணல் 144-ம் பக்கம் பார்க்க.

உலகத்தில் காற்று இல்லையென்றால் ஜீவன் இல்லை. அப்படியிருக்க காற்றும், இடிமின்னல்களும், பெண்ணின் யோனி வழியாய் பெறுவது எப்படி? இவைகளை விளக்க நாளும் போதாது, பக்கமும் போதாது. இந்து தேவர்களின் பிறப்பை விளக்குவது அசிங்கமான காரியம். அதனால் அவைகளை அததற்குரிய புஸ்தகங்களிலிருந்து அறிந்து கொள்ளவும். இவர்கள் தச்ச பிரபாப்தி மூலமோ காசிப மகரிஷி மூலமோ பிறந்தார்கள் என்கிறதைக் காட்டிலும் இன்னும் சில விசித்திரமான கதைகளும் உண்டு. பொதுவாக இவர்கள் மனிதர்களாய்ப் பிறந்து மரித்துப் போனவர்கள் என்பதை மாத்திரம் அறிந்து கொள்ளலாம். அவர்களுடைய ஜீவிய சரித்திரத்திலோ, கிரியைகளிலோ தெய்வீக அம்சம் என்று சொல்ல எதுவுமே கிடையாது.

இன்றைக்கு நவக்கிரகங்கள் என்று சொல்லி இந்த நவீன காலத்திலேயும் அதற்காக பல விதமான சடங்குகளைச் செய்கிற ஜாதி வெறியுடைய மக்களைப் பார்க்கிறோம். சந்திரனுக்கும் பூமிக்கும் மற்றுமுள்ள கிரகங்களுக்கும் பூமிக்கும் இவ்வளவு தூரம் என்று கணித்து, அவைகளுக்குச் செல்ல ராக்கெட்டுகளை அனுப்புகிற இந்தக் காலத்திலும் சந்திர கிரகணமும் சூரிய கிரகணமும் ராகு, கேது என்கிற பாம்புகளினால் உண்டாகிறதென்று சொல்லி அதற்காக தருப்பைப் புல்லைக் கிள்ளி சோற்று பானையிலும், குளம்பு

சட்டியிலும் போடுங்கள். இல்லையென்றால் முழிக்காதோடும் பிளந்த உதடுகளோடும் உங்கள் இருவருடைய பிள்ளை பிறக்கும் என்பது என்னவாயிற்று? ராக்கெட்டுகளை அனுப்பி இந்தக்கிரகங்களை ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். அவைகள் தெய்வங்களல்ல என்று வெளிப்படையாய்த் தெரிந்தும் பொய்க்குருக்கள் தங்களுடைய சடங்குகளையும் தந்திரங்களையும் விடப்போகிறதில்லை. மக்களை வஞ்சித்து வேறுபிரித்து தங்களோடுகூட நரகத்திற்குக் கொண்டு போகும்படியாக நடக்கிறமாயமே இந்துமதத்தில் மிகுந்திருக்கிறது.

[தொடரும்].

"இப்படிப்பட்ட போதனைகள் சுய இஷ்டமான ஆராதனையையும், மாயமான தாழ்மையையும், சரீர ஒடுக்கத்தையும் பற்றியது." கொலோ. 2:23

கிருபை வரங்களின் தொடர்ச்சி . . .

பத்து குஷ்டரோகிகள் இயேசுவிடம் வந்தார்கள் [லூக். 17:11-14]. நீங்கள் போய் ஆசாரியனிடம் உங்களைக் காண்பியுங்கள் என்று அவர் கூறினர். அப்படியே அவர்கள் போகையில் சுத்தமானார்கள். "நீங்கள் ஆசாரியனுக்கு உங்களை காண்பியுங்கள் என்ற நிபந்தனையினாலல்லவா" என்று தோன்றலாம். ஆனால், அது சுத்தமடைவதற்குரிய நிபந்தனையல்ல, விடுதலை பெற்றவன் செய்யவேண்டிய காரியம் ஆசாரியனிடம் தங்களைக் காண்பிக்கும் முன்னரே அவர்கள் சுத்தமானார்கள். முன் சொன்ன இரு சம்பவங்களிலும் கீழ்ப்படிந்த பின்னரே விடுதலை பெற்றுக் கொண்டார்கள். ஆனால், இதுவோ எவ்விதமான நிபந்தனையுமில்லா குணப்படுத்தலின் வழியமாகும். மேலே கூறப்பட்ட நிகழ்ச்சிகளின் மூலம் குணப்படுத்தலின் வரங்கள் எந்த விதங்களில் உபயோகப்படுத்தப் பட்டது என்பதை அறிந்து கொள்வோம்.

இவ்வாறு பற்பல நிலைகளில் நோயாளிக்கு மனித சிகிச்சை ஒன்றும் இல்லாமல் தேவ வல்லமையினால் விடுதலை கொடுப்பதற்காக ஆவியானவர் சில தேவ ஊழியர்களுக்குக் கொடுத்த வரந்தான் குணமாக்கும் வரங்கள். அற்புதங்களின் வரத்தையும், குணமாக்கும் வரங்களையும் ஒன்றாகச் சேர்த்து பலர் எண்ணுகிறார்கள். இதில் குணமாக்கும் வரங்களைக் குறித்து சில தவறான கருத்துக்களும் ஏற்படுகின்றன. இதன் வித்தியாசத்தை அறிவோமெனில் இதைக்குறித்து எந்த விதமான தவறான எண்ணங்களும் ஏற்படாது. ஜெபித்த உடன் விடுதலை, சுகம் கிடைக்க வில்லையெனில் ஜெபம் சரியில்லை என்பது போல் சிலர் குறைகளைக் கூற முற்படுவார்கள். இதில் குறைகூறுதலுக்கும், கருத்துக்களுக்கும் காரணம் இதைக்குறித்த அறியாமையே. உடனே நடைபெறுவது அற்புதம், அது குணமாகுதல் அல்ல. முன் கூறிய வண்ணம் குணமாகுதல் படிப்படியாக அல்லது நிபந்தனையின் படி கிடைக்கும். குணமாக்குதல் இருக்கும் இடத்தில் அற்புதத்துக்கு இடமில்லை. உதாரணமாக(லூக. 5:12,13 ல் இயேசு ஒரு குறிப்பிட்ட குஷ்டரோகியை சொஸ்தமாக்கினர். உடனே சுகமடைந்தான் அங்கே நடைபெற்றது அற்புதம். ஆனால், லூக். 17:11 ல் பத்து குஷ்டரோகிகள் போகையில் சுகமானார்கள். அது குணமாகுதல். லூக். 18:15-41 ல் குருடன் உடனே குணமடைந்தான் அது அற்புதம். மாற். 8:23-25 லும் யோ. 9:6 லும் படிப்படியாக நிபந்தனையின்படி பார்வையடைந்தார்கள் அது குணமாகுதலாகும். விளக்கமாகச் சொன்னால் உடனே பெற்றுக்கொள்வது அற்புதம்; படிப்படியா

கப் பெற்றுக்கொள்வது, குணமாகுதல் தெய்வீக சுகம் இவ்வேற்றுமையை அறிந்துக் கொண்டால் பல சந்தேகங்களும், தவறான எண்ணங்களும் முற்றிலும் மறைந்து விடும். இவ்விரண்டிலும் உள்ள வித்தியாசத்தை அறிந்து கொள்ளாததினால் பலர் விடுதலையைப் பெற்றுக்கொள்ளாமலிருக்கின்றனர். ஒருவரிடத்தில் ஜெபித்த உடனே சுகம் கிடைக்கவில்லையென்று இன்னொருவரிடத்தில் போய் ஜெபிக்கிறது, அவிசுவாசத்துடனிருப்பது போன்ற காரியங்களினால் அவர்கள் யாரிடமும் விடுதலை பெற முடியாமற்போக நேரிடலாம். அவர்கள் எதிர்பார்ப்பது ஜெபம் செய்த உடனேயுள்ள விடுதலை. உடனே சரீரசுகம் ஏற்படவில்லையெனில் ஒன்றும் பெற்றுக்கொள்ளவில்லை என்ற மனப்பான்மையில் மகிழ்ச்சியில்லாமல் திரும்புவார்கள். ஆகவே, அடையும் சுகத்தை அவர்களே நஷ்டப்படுத்திக் கொள்கிறார்கள். இவைகளில் விசுவாசத்தை அறிந்து கொண்டால் அற்புதம் நடைபெறவில்லையென்றாலும் குணமாதலை எதிர்பார்த்து விசுவாசத்தோடு சென்று படிப்படியாக அல்லது நிபந்தனைகளின்படியே குணமடைவீர்கள் என்பதாகும். இயேசுவினால் தெய்வீக சுகமுண்டாகும்.

[தொடரும்.]

"அவரிடத்திலிருந்து வல்லமை புறப்பட்டு எல்லாரையும் குணமாக்கினபடியினாலே, ஜனங்கள் யாவரும் அவரைத் தொடும்படிக்கு வகை தேடினார்கள்"

லூக். 6:19.

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

எண்ணாகமம் 1:1-3: இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் வருஷம் இரண்டாம் மாதம் முதல் தேதியில், கர்த்தர் ஆசரிப்புக் கூடாரத்திலிருந்து மோசேயைக் கூப்பிட்டு இஸ்ரவேல் புத்திரர்களுடைய புருஷர்களாகிய எல்லோரையும் எண்ணித் தொகையேற்றுங்கள். இஸ்ரவேலிலே இருபது வயதுமுதல் யுத்தத்திற்குப் போகத்தகுதியுள்ளவர்கள் எல்லாரையும் அவரவர்கள் சேனைகளின்படி நீயும் ஆரோனும் எண்ணிப்பார்ப்பீர்களாக என்று திருவுளம் பற்றினார். இஸ்ரவேலரில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்திற்குப்போகத்தக்க புருஷர்களின் தொகையை எண்ணும்படியாக கர்த்தர் கட்டளையிட்டார். இது இராணுவ எண்ணிக்கையாகும். இஸ்ரவேலர்களை பல தடவை எண்ணும்படியாகச் சொல்லியிருக்கிறார். ஆசரிப்புக் கூடாரத்திற்கு வேண்டிய வரிப்பணத்திற்காக (Tax) எண்ணும்படி தேவன் சொன்ன சம்பவம் யாத். 30:12-16 முடிய எழுதப்பட்டுள்ளது. அப்படி எண்ணும் பொழுது ஒவ்வொரு தலைக்கும் அரைச்சேக்கல் வரி கொடுக்கவேண்டும் என்று தேவன் கட்டளையிட்டார். ஐசுவரியவான் அதிகம் கொடுக்கவேண்டாம், தரித்திரன் குறைவாக கொடுக்க வேண்டாம். அரைச்சேக்கல் வரி கொடுக்கவேண்டும் என்று கர்த்தர் கட்டளையிட்டார். இது எதைக் காண்பிக்கிறதென்றால் தேவனுடைய பார்வையில் ஐசுவரியவானும், ஏழையும் சமம்; ஆத்துமா என்கிற கணக்கிலே பார்க்கிறார். ஆனபடியினால் மீட்கும் பொருளாக அரைச்சேக்கல் கொடுக்க வேண்டுமென்று தேவன் கட்டளையிட்டார்.

யாத். 12:37ல் இன்னொரு எண்ணிக்கை காணப்படுகிறது அதுவும் புருஷர்களைப்பற்றிய எண்ணிக்கை. அது ஆறு இலட்சம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எகிப்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேலர்களில் ஸ்திரீகள், குழந்தைகள், முதியோர்கள், புறஜாதிகள் இவர்களைத் தவிர புருஷர்கள் மாத்திரம் ஆறுஇலட்சம் பேராயிருந்தார்கள், என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இன்னொரு தடவை இஸ்ரவேல் புத்திரரை தேவன் எண்ணும்படியாகச் சொன்ன சம்பவம், அவர்கள் கானானுக்குள் பிரவேசிக்கும் முன் அவர்களை இருபது வயது முதல் அதற்கு மேற்பட்ட இஸ்ரவேலிலே யுத்தத்திற்குப் புறப்படத்தக்கவர்கள் எல்லாரையும் எண்ணும்படியாகக் கட்டளையிட்டது (எண். 26:2.) எரிகோவின் அருகே யோர்தானுக்கு இப்பாலே மோவாபின் சமனான வெளியிலே இந்த எண்ணிக்கை எண்ணித் தொகையேற்றப்பட்டது. இன்னும் பலமுறை யோசுவாவும், நியாயாதிபதியின் காலத்திலும், சவுலும், தாவீதும், அமத்சியாவும் இஸ்ரவேல் புத்திரரை எண்ணித்தொகையேற்றியிருக்கிறார்கள். ஆனால், இவைகளெல்லாம் இஸ்ரவேலர்கள் எல்லாரும் என்று நாம் கணக்கெடுக்க வேண்டியதில்லை. இஸ்ரவேல் புத்திரரில் இருபது வயது முதல் ஐம்பது வயதுக்குட்பட்ட யுத்தத்திற்குப் போகத் திராணியுள்ள புருஷர்களின் எண்ணிக்கையே வேதாகமத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த எண்ணிக்கை. அந்தந்த கோத்திரத்தாரில் யுத்தத்திற்குப்போகத்தக்க தங்களுடைய பெலன் எவ்வளவு என்று அறிந்து கொள்ளும்படியாக தொகையேற்றப்பட்டது (எண். 2:32). அவரவர்கள் தங்கள் தங்கள் பிதாக்களுடைய வம்சங்களின் படியே தங்கள் தங்கள் கொடிகளின் கீழ் பாளயமிறங்கி பிரயாணப்பட்டுப்போனார்கள் (எண். 2:34).

இந்த எண்ணிக்கையில் சேர்க்கப்படாத ஜனங்களின் கூட்டங்கள்:

1. ஸ்திரீகள்
2. குழந்தைகள்
3. இஸ்ரவேலர் மத்தியிலிருந்த புறஜாதியான ஜனங்கள்
4. வயதான மனிதர்கள்
5. லேவியர்கள்.

இந்தக் கூட்டங்கள் (Groups) மேற்படி எண்ணிக்கையில் சேர்க்கப்படவில்லை. இஸ்ரவேலர்களின் இராணுவ (Army) எண்ணிக்கை இரண்டாம் தடவை எடுக்கும்போது (எண். 26 அதி.) முன்னால் எண்ணப்பட்ட மக்களில், இராணுவ வீரர்களில் யோசுவாவும் காலேபும் தவிர வேறு ஒருவரும் இருக்கவில்லை. முன்னால் இராணுவத்திற்கு எண்ணப்பட்டவர்கள் கடைசி மட்டும் ஆயத்த நிலையில் இல்லை. கானானை சுதந்தரிக்க அவர்கள் கானானுக்குள் பிரவேசிக்கவில்லை. விசுவாசத்தோடும் கீழ்ப்படிதலோடும் ஆயத்த நிலையில் இருந்த யோசுவாவும் காலேபும் பின்னாலிருந்த இராணுவ எண்ணிக்கையோடு கூடச்சேர்ந்து கானானை சுதந்தரித்தார்கள். கானான் என்று சொல்வது கிறிஸ்துவுக்குள்ளான வாழ்க்கையாகும். கானான் மோட்சமல்ல. சிலர் கானானின் வாழ்க்கையை மோட்சம் என்று வர்ணிக்கிறார்கள். அது சரியல்ல. யோர்தானை மரண ஆறு என்றும், யோர்தானைக்கடப்பது மரணத்தைக் கடந்து மறுமைக்குள் பிரவேசிக்கிறது என்றும், வர்ணிக்கிறார்கள். இராணுவ வீரர்கள் யுத்தம் செய்யும் படியாக எண்ணித் தொகையேற்றப்பட்டதும், புறப்பட்டதும் கானானை பிடிக்கும்படியாகவே. இதற்கிடையில் வனாந்திரத்தில் சில யுத்தங்கள் நடந்தன. அவைகளெல்லாம் யுத்தபயிற்சி கொடுக்கும்படியாகவும் இவர்களுக்கு இல்லாத அனுபவங்கள் கிடைக்கச் செய்யும்படியாகவும் தேவன் நடப்பித்த செயலே. உண்மையான யுத்தம் கானானுக்குள் போனபின்பு நடந்ததே. கானானுக்குள் போன பின்புதான் யுத்தம் செய்து அவர்கள் தேவன் காண்பித்த

எல்லை முழுவதையும் பிடிக்கவேண்டும். ஆனபடியினால் பரலோகத்திற்குப் போன பின்பு யாதொரு யுத்தமோ, பின்மாற்றமோ, சிறைப்போதலோ, சாவோ, மரணமோ கிடையாது. எனவே, ஆவிக்குரிய ஜீவியத்தில், கிறிஸ்தவ ஜீவியத்தில், கிறிஸ்துவை சுதந்தரிக்கிறதில் தான் நம்முடைய ஆத்மீக யுத்தம் இருக்கிறது. கானான் கிறிஸ்துவுக்குள்ளான ஜீவியத்தைக் குறிப்பிடுகிறது. கிறிஸ்துவுக்குள்ளாக நாம் எவ்வளவு விசுவாசத்தோடும், தேவனுடைய உதவியோடும் தேவனுடைய உடன்படிக்கையை, கற்பனையைக் கைக்கொண்டு நம்முடைய சத்துருக்களையெல்லாம் முறியடித்து அந்த எல்லைகளையெல்லாம் சுதந்தரித்து அனுபவிக்கமுடியும் என்பதை வேதாகமம் நமக்குக் காண்பிக்கிறது. ஆனால் யுத்தத்திற்கு ஒப்புக்கொடுத்து ஆரம்பித்தவர்கள் இடையில் விபசார, வேசித்தன பாவஞ்செய்ததினாலும், அவிசுவாசத்தினாலும், தேவனுக்கு விரோதமாய் முறுமுறுத்ததினாலும், கீழ்படியாமையினாலும், உடன்படிக்கையை மீறினதினாலும், விக்கிரகாரதனை செய்ததினாலும் மேலும் பலகாரணங்களினாலும் அவர்கள் கானானை அல்லது கிறிஸ்தவ வாழ்க்கையை முழுவதும் அனுபவிக்கவிடாதபடி தேவன் வழியிலே அவர்களை முடித்து விட்டார்: அவர்களுடைய சவங்கள் வனாந்திரத்தில் விழுந்தது.

இப்பொழுது முதலாவது எண்ணிக்கையையும் இரண்டாவது எண்ணிக்கையையும் அவைகளின் மூலமாக தேவன் நமக்குப் போதிக்கிறநீதி இன்னதென்பதையும்பார்ப்போம். தேவனுடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரமுண்டாவதாக.

## இஸ்ரவேல் சேனைகளின் எண்ணிக்கை (Numberings of Isral Armies)

## இரண்டு எண்ணிக்கைகள் (Two Numberings) [எண்.1:20,21-46;26:1-51)

| கோத்திரம் | முதல் எண்ணிக்கை (FIRST) | இரண்டாம் எண்ணிக்கை (SECOND) | வித்தியாசம் (DIFFERENCE) |
| --- | --- | --- | --- |

தடவை எண்ணப்படும்பொழுது அதிகமானவர்கள் இருந்ததாகப் பார்க்கிறோம். சிலக் கோத்திரங்களில் முதல் தடவை எண்ணப்பட்டதிலிருந்து இரண்டாந்தடவை எண்ணப்பட்டபொழுது குறைந்திருந்ததாகப் பார்க்கிறோம். அப்படியானால் சிலக் கோத்திரங்களில் குறைவு அதிகமாக இருக்கிறது. ஆனபடியினால் வழியில் வாதையில் செத்தவர்கள் இந்தக் கோத்திரங்களில் அதிகமானபேர் இருக்கிறார்கள் என்று தெரிய வருகிறது. சிமியோன் கோத்திரத்தில் 37,100 பேர் குறைந்திருப்பதாக எழுதப்பட்டுள்ளது. எண். 25-ம் அதிகாரத்தில் இஸ்ரவேல் புத்திரர்கள் மோவாபிய, மீதியானிய பெண்களோடு விபசாரம் செய்தார்கள் என்று சொல்லி எழுதியிருக்கிறது. அப்படி விபசாரம் செய்ததில் சிமியோன் கோத்திரம் முன்னணியில் இருந்தது என்று நமக்குத் தெரியவருகிறது. இஸ்ரவேல் புத்திரர் எல்லாருடைய கண்காண, சிமியோன் கோத்திரப் பிரபுவாகிய சிம்ரி எனப்பட்டவன் மீதியான் தேசத்தாளான கஸ்பி எனப்பட்ட ஸ்திரீயை பாளயத்திற்கு அழைத்துக் கொண்டுவந்து அவளோடு வேசித்தனம் பண்ணும் போது ஆசாரியனாகிய பினெகாஸ் எழுந்து, ஒரு ஈட்டியைப் பிடித்துக் கொண்டு போய் அவர்கள் இருவருடைய வயிறும் ஊடுருவிப் போகத்தக்கதாக குத்திக் கொன்று போட்ட சம்பவம் எழுதப்பட்டுள்ளது. அந்த ஸ்திரீயின் பெயர் கஸ்பி என்றும், அவள் சூரின் குமாரத்தி என்றும், அந்த சூர் மீதியானுடைய தகப்பன் வம்சத்தாரான ஜனங்களுக்குத் தலைவனாயிருந்தானென்றும் எண். 25:15 ல் எழுதியிருக்கிறது. இந்த சிம்ரி எனப்பட்டவன் சிமியோனின் வம்சத்தில் ஒரு பிரபுவாயிருந்தானென்று எண். 25:14 ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆனபடியினால் விபசாரபாவத்தினால் அப்பொழுது வாதையால் செத்தவர்கள் 24,000 பேர் என்று எண். 25:9 லும், ஒரே நாளில் இறந்தவர்கள் 23,000 பேர் என்று I கொரி. 10:8 லும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதிலுள்ள எண்களின் வித்தியாசம் என்னவென்றால் ஒரே நாளில் வாதையினால் செத்தவர்கள் 23,000 பேர். தொடர்ந்து வாதை கிரியை செய்து அந்த வாதையினால் செத்த 1,000 பேரையும் சேர்த்து 24,000 பேர் என்று எண். 25:9 ல் குறிப்பிடப்பட்டுள்ளது. I கொரி. 10:8 ல் ஒரே நாளில் 23,000 பேர் என்றும், எண். 25:9 ல் அந்த வாதையால் செத்தவர்கள் 24,000 பேர் என்றும் எழுதப்பட்டுள்ளது சரியே. ஆனபடியால் வேசித்தனத்தினால் மிகுதியாய்ச் செத்தவர்கள் சிமியோன் கோத்திரத்தார் என்றும் அறிகிறோம். மற்ற கோத்திரத்தாரும் சம்பந்தப்பட்டிருந்தார்கள் அவர்களில் வேசித்தனம் பண்ணினவர்களும் செத்தார்கள். ஆக மொத்தம் செத்தவர்கள் 24,000 பேர். இதில் எண். 11:1-3 லும் எண். 11:33-ம் வசனத்திலேயும் தேவனுடைய சிட்சையினால், வாதையினால் செத்தவர்கள் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். மேலும், எண். 21-ம் அதிகாரத்தில் தேவனுக்கும், மோசேக்கும் விரோதமாக பேசினதினிமித்தம் இஸ்ரவேல் ஜனங்களைக் கடிக்கும்படி தேவன் கொள்ளிவாய்ச் சர்ப்பங்களை அனுப்பினார். அந்த வாதையினாலும் அநேகர் செத்தார்கள் (எண். 21:8).

இவ்விதமாக, இப்படிப்பட்ட வாதைகளினாலும் அநேகர் செத்தார்கள் என்று அறிகிறோம். அவர்களுக்கு அப்படி சம்பவித்தது. நாமும் அப்படிப் பாவம் செய்தோமென்றால் இப்படி நமக்கும் சம்பவிக்கும். கிறிஸ்தவ ஜீவியத்தை அனுபவிக்க முடியாது. கானானை சுதந்தரிக்க முடியாது. முழுக்கானானையும் சுதந்தரித்து அதனுடைய பலன்களை அனுபவிக்கமுடியாது என்று பரிசுத்த ஆவியானவர் நமக்குப் போதிக்கிறார்.

இஸ்ரவேலர்களைப் போல பாவஞ்செய்கிற ஒருவரும் கிறிஸ்துவுக்குள்ளான ஜீவியத்தின் முழு ஆசீர்வாதங்களையும், அனுபவங்களையும் அடைவதில்லை. அவர்களுடைய சவங்கள் வனாந்தரத்தில் விழும். அவர்களுடைய ஆவிக்குரிய ஜீவிய ஓட்டமானது இடை

பாயில தளை படும். அவர்கள் மேல் தேவன் பிரியமாயிருப்பதில்லை. அவர்கள் நித்திய இளைப்பாறுதலுக்குள்ளும் பிரவேசிப்பதில்லை என்று கர்த்தர் சொல்கிறார். ஆகையால் அந்தத் திருஷ்டாந்தத்தின்படி ஒருவனாகிலும் கீழ்ப்படியாமையினாலே விழுந்து போகாதபடிக்கு நாம் இந்த இளைப்பாறுதலில் பிரவேசிக்க ஜாக்கிரதையாயிருக்கக்கடவோம் [எபி. 4:1-11].

இன்னொரு ஆவிக்குரிய கருத்தும் இவைகளின் மூலமாகத் தெரியவருகிறது [எபி. 3:18] பின்னும் என்னுடைய இளைப்பாறுதலில் பிரவேசிப்பதில்லை என்று அவர் யாரைக்குறித்து ஆணையிட்டார். கீழ்ப்படியாதவர்களைக் குறித்தல்லவா? ஆதலால் அவிசுவாசத்தினாலே அவர்கள் அதில் பிரவேசிக்கக் கூடாமற்போனார்கள் என்று பார்க்கிறோம். இதன்மூலமாக தேவனை முழுவதுமாக விசுவாசித்துக் கீழ்ப்படியாத மக்கள் கானானுக்குள் பிரவேசிக்க முடியாமற் போனது போல முக்தியிலேயும் பிரவேசிக்க முடியாது. கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படமுடியாது என்பதும் நமக்கு அறிவிக்கப்படுகிறது [எபி. 4:6]. ஆனபடியினால், இந்த ஆவிக்குரிய யுத்தத்தில் இறங்கியிருக்கிற நாம் யுத்தம் செய்து சத்துருக்களை விரட்டி விட்டு, தேவன் நமக்கு வாக்கருளியிருக்கிறதை சுதந்தரித்துக் கொள்ள ஜாக்கிரதையாயிருந்து எல்லாவற்றையும் சுதந்தரித்துக் கொள்வோமாக. நித்திய ராஜ்யத்துக்குள்ளும் பிரவேசிப்போமாக! ஆரம்பித்த அநேகர் முடிவெய்தவில்லையென்று நாம் உலகத்திலே கிறிஸ்தவ வாழ்க்கை அரம்பித்தவர்களைக் குறித்துப்பார்க்கிறோம். முடிவு பரியந்தம் நிலை நிற்பவனே இரட்சிக்கப்படுவான் [மத். 24:13].

ஆனபடியினால் தேவனுடைய ஜனங்கள் எல்லோரும் ஆயத்தமாய் முன்னேறி சுதந்தரிப்போமாக! முன்னுக்கு நிற்கிறவர்கள், ஆயத்தமாய் நிற்கிறவர்கள் புருஷர்கள். கிறிஸ்தவ ஜீவியத்தை சுதந்தரித்து அதிலே மற்றவர்களும் பங்கு பெறும்படியாய் இடத்தை விசாலப்படுத்துவோமாக! நம்முடைய குழந்தைகளும், சகோதரிகளும், தாய்மார்களும், தகப்பன்மார்களும், நம்மோடுகூடச் சேர்ந்தவர்களும், லேவியர்களும் கானானை சுதந்தரித்துக் கொள்வார்கள். அதற்காக முன்னணியில் நின்று யுத்தஞ்செய்வதும், அந்த யுத்தத்தை நடப்பிப்பதும் ஆசாரியர்களுடைய, போர் வீரர்களுடைய கடமையாகும். இனி பாளயம் புறப்படும் விதத்தையும், அதற்கான ஏற்பாடுகளையும் தொடர்ந்து கவனிப்போமாக!

[தொடரும்.]

"சீனாய் வனாந்திரத்தில் இஸ்ரவேல் புத்திரரை எண்ணும் போது இருந்தவர்களில் ஒருவரும் இவர்களுக்குள் இல்லை" எண். 26:64

பரிசுத்தவிவாகம்

சுவிசேஷம்

# ஆத்தும ஜீவன்

'நானே அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும் அது பரிபூரணப்படவும் வந்தேன்' (யோ. 10:10). ஜீவனை எடுக்க வந்தவர்கள் அநேகர் இருக்கிறார்கள். ஆனால் இயேசுவோ ஜீவனுடையவர்களாயிருக்க ஜீவன் அருளும்படி வந்தார்.

ஜீவன்: நடமாடுகிறதினாலும், சுவாசிக்கிறதினாலும் ஜீவன் அறியப்படும். பச்சை மரத்திற்கும் பட்ட மரத்திற்கும் வித்தியாசம் இருந்தும் அதற்கு ஜீவன் இல்லை. மனுஷர், மிருகங்கள், பட்சி, பறவைகள், மச்சங்கள், பிராணிகளுக்கே ஜீவன் உண்டு என்றும், ஜீவனுக்கு இரத்தம் இருப்பிடமென்றும், வேதாகமம் குறிப்பிட்டுள்ளது. ஆனபடியினால் இரத்தத்தைச் சாப்பிடக்கூடாது என்று வேதத்தில் சொல்லி இருக்கிறது (லேவி. 3:11;7:26; I சாமு. 14:33; யோபு 14:7; ஏசா. 1:11; அப். 17:25). ஜீவன் உடையவனாயிருக்கிறது மனிதனுக்கு உத்தம பாக்கியம்; மரணமோ அவனுக்குக் கேடு (உபா. 30:4; சங். 34:12). ஜீவனைக் கண்டடைவது பிழைத்திருப்பதையுமல்லாமல், கடவுளுக்குக் கீழ்ப்படிந்து நீதி, நியாயமாய் பரிசுத்தமாய் நடப்பதையுங் குறிக்கும் (நீதி. 3:18;8:35). இயேசுவானவர் வந்து ஆடுகளுக்கு நித்திய ஜீவனைக் கொடுக்கிறார். அந்த ஜீவன், ஆவிக்குரிய ஜீவனாகும். இங்கே ஆடு என்பது உத்தமமான ஆத்துமாக்களை, மனிதர்களை குறிப்பிடுகிறது.

ஜீவன் பெற இயேசுவண்டை வர வேண்டும். கிறிஸ்து அருளும் ஜீவன் நித்திய ஜீவனானதால் அது எப்பொழுதும் சன்மார்க்கத்தையே நாடும் [ரோ. 8:4-6]. கடவுள் ஜீவன் அருளுகிறவரானதால் அவருக்கு ஜீவனுள்ள தேவன் என்று ஒரு பெயருமுண்டு.

அது நித்திய ஜீவன். இறைவனோடு வாழும் வாழ்வு. இங்கே அது ஆரம்பமாகி மறுமையில் இறைவனோடு நீடுழி வாழ்ந்து சுகித்திருப்பதாகும். இதுவே வேதாகமம் காண்பிக்கும் முக்தி நிலை.

இன்று பல மதங்கள் மக்களுக்கு மரணத்துக்கான வழிகளை போதிக்கின்றன. சுபாவ மனிதனுக்கு விரோதமான தீமை செய்யும்படி அவனுக்கு மதவெறியைத் தூண்டிவிடுகின்றன. நீதி நியாயமோ, பரிசுத்தமோ, இறைவனோடு வாழும் வாழ்வோவல்ல, பேயின் 'கிரியையைச் செய்யும் படியும், பொய்சொல்லும் படியும் படிப்பிக்கின்றன. இப்படியாக ஆத்துமாக்களை அழிக்கின்றார்கள். இங்கேயே அவர்களுக்கு சமாதானக்கேடு உண்டாகும். அங்கேயோ நித்திய தண்டனை எரிகிற அக்கினியாகிய நரகம் லபிக்கத் தூண்டுகின்றன. ஆனபடியால், இயேசு சொல்கிறார்: ஜீவன் பெற என்னிடத்தில் வர உங்களுக்கு மனதில்லையோ என்று கேட்கிறார் (யோ. 5:40], இந்த உலகத்தில் ஆத்மீக ஜீவனைப் பெற்று, அருமையான வாழ்வு வாழ, வல்லமையுடையவர்களாயிருக்க சமாதானமுடையவர்களாயிருக்க இந்த உலகத்தில் எதிலும் ஜெய வாழ்க்கை வாழ இயேசுவாகிய ஜீவனை நிறைவாய் பெற்றுக் கொள்ளும்படியாய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அழைக்கிறார்.

''திருடன் திருடவும், கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான். நானோ அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன்'' என்று இயேசுவானவர் திருவுளம் பற்றுகிறார். இயேசுவினால் நித்திய ஜீவன் பெற்று முக்தியடையலாம் என்பது அனுபவமாகும்.

இந்த முக்தியானது இங்கே இறைவ ேனுடுகூட ஐக்கியம் ஆரம்பமாகி இறைவ னோடு வாழ்கிற வாழ்க்கையாகும். அது முடிவிலே அழிவில்லாத சரீரத்தை அவர் களுக்கருளி ஆத்துமாவும், ஆவியும் சரீர மும் பரிபூரண நிலையை அடைந்து அவர் கள் முக்தியடைவதே மனிதனைக்குறித்துத் தேவனுடைய திட்டம். ஜீவன் உண்டாக, ஜீவனைப்பெற்றுக் கொள்ள, அது நிறை வடைய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வும், தொடர்ந்து அவரோடுகூட திருச்சபையோடுகூட ஐக்கியமாயி ருந்து பூரணப்படவும் இயேசுவின் நாமத்தில் உங்களை அழைக்கிறோம்.

"நானே உயிர்த்தெழுதலும், ஜீவனுமா யிருக்கிறேன்; என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான்" யோவா. 11:25.

சிறுவர் பகுதி

# விலையுயர்ந்த காணிக்கை

### கர்த்தருக்குக் காணிக்கை செலுத்துதல்

தேவ மகிமையால் தேவாலயம் நிறைந்திருந்தது. தேவன் தமது தயவுள்ள சித்தத்தை, அவ்வருடத்திற்கான வாக்குத்தத் தத்தை திருச்சபையின் பரிசுத்த மேய்ப்பர் மூலமாக திருவுளம் பற்றினார். புத்தாண்டு ஆராதனை மிகவும் ஆசீர்வாதமாக அன்று நடந்து முடிந்தது. கடந்த ஆண்டு முழு வதும் தாங்கள் சேமித்த பணத்தை, தேவ சமுகத்தில் காணிக்கையாக ஒவ்வொருவ ரும் செலுத்தினார்கள். எட்டாம் வகுப் புப்படிக்கும் ஏழைச் சிறுவனான தானி யேலுக்கோ இருபது ருபாய் கூட சேமிக்க முடியவில்லை. கர்த்தருக்கென்று காணிக் கைசெலுத்துவதற்கு கண்கலங்கிய அவனை சபையின் மேய்ப்பர் ஆறுதல் படுத்தினார் "சகோதரனே! ஒருவனுக்கு மனவிருப்ப மிருந்தால், அவனுக்கு இல்லாததின்படி யல்ல, அவனுக்கு உள்ளதின்படியே அங்கீகரிக்கப்படும்"; [2 கொரி. 8:12].

### தானியேலின் ஜெபம்

தானியேல் அன்று இரவில் தேவனி டம், 'வானத்திற்கும், பூமிக்கும் ஆண்ட வரே வெள்ளியும் என்னுடையது, பொன் னும் என்னுடையது, அதை எனக்கு சித்த மானவனுக்குகொடுப்பேன் என்று சொன் னீரே, உமக்கு காணிக்கை செலுத்தும்படி யாக உமது அடியானுக்கு நீர் தரவேண் டுமே, மறைவிடங்களில் இருக்கிற பொக் கிஷங்களையும் எடுத்துத் தந்தருளும்" என்று கூறி விசுவாசத்துடன் மிக ஊக்கமாக ஜெபம் செய்தான்.

### தானியேலுக்கு வைரமோதிரம் கிடைத்தல்

ஒரு நாள் பள்ளியிலிருந்து நேரங் கழித்து தானியேல் வீடு திரும்பிக்கொண் டிருந்தான். பொழுது சாய்ந்து மெல்ல இருட்டத் தொடங்கியது அப்பொழுது வழியினருகே 'வைர மோதிரம்' ஒன்று மின் னிக்கொண்டிருந்தது. அதைக் கையில் எடுத்தான். அவனுடைய ஜெபம் அவ னுக்கு நினைவில் வந்தது. "கர்த்தாவே, உமக்கே மகிமையுண்டாவதாக! ஏழையின் ஜெபத்தைக் கேட்டீரே. நீர் உமது அடி யானுக்குக் கொடுத்த இந்த வைர மோதி ரத்தை இப்பொழுதும் உமக்குக் காணிக் கையாகச் செலுத்துகிறேன்" என்று கூறி தானியேல் கர்த்தருக்குக் காணிக்கை செலுத்தினான்.

### தானியேலுக்கு கிடைத்த பொக்கிஷம்

மற்றொரு நாள் மாலையில் தானியேல் வீடு திரும்பிக்கொண்டிருந்தபோது ஒரு சிறிய தந்தப்பேழை தென்பட்டது. அதை எடுத்துத் திறந்து பார்த்தான், விலையுயர்ந்த நவரத்தினக் கற்கள் ஜொலித்துக் கொண்டிருந்தன. 'பரலோகத்திலே உங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்து வையுங்கள்' [மத். 6:20] என்று அப்பொழுது வானத்திலிருந்து ஒரு குரல் ஒலித்தது. தேவ வசனத்திற்குக் கீழ்ப்படிந்த தானியேல், தேவனுடையதை தேவனுக்கே செலுத்துவேன் என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டு நேராக தேவாலயம் சென்றான். கர்த்தர் தனக்குத்தந்தருளின விலையுயர்ந்த அப்பொக்கிஷத்தைக் காணிக்கையாகச் செலுத்தினான்.

## தானியேலும் முத்துவும்

மாதங்கள் சில கழிந்தன. அன்று பள்ளியில் ஏதோவொரு காரணத்தால் காலை பதினொருமணிக்கெல்லாம் விடுமுறை என்று அறிவிக்கப்பட்டது. தந்தபேழை கிடைத்த இடத்திற்கு அருகில் தானியேல் வந்து கொண்டிருந்தான். அங்கே முத்து என்ற வாலிபன் பசியினாலும், தாகத்தினாலும் மயக்கமுற்றுக் கிடந்தான். அவனுக்கு தானியேல் தான் வைத்திருந்த உணவையும் தண்ணீரையும் கொடுத்துதவினான். முத்து தானியேலிடம் தான் வாழ்க்கையில் பட்ட துன்பங்களையும், தனக்கு ஆதரவளிக்க, தன்னைக் காப்பாற்ற யாருமேயில்லை என்று கூறி புலம்பினான். வருந்த வேண்டாம், நீங்களும் ஆண்டவருடைய பிள்ளையாக வாழ்ந்தால் உங்களுடைய துன்பமெல்லாம் நீங்கிப் போகும், ஆண்டவர் உங்களை பாதுகாத்துக் கொள்வார் என்று தானியேல் முத்துவை சமாதானப்படுத்தினான். ஆண்டவரா! அவர் யார்? அவருடைய பிள்ளையாக ஆகிறதற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்று முத்து தானியேலிடம் கேட்டான். இயேசு கிறிஸ்துவைப் பற்றியும், அவர் தனக்கு செய்த எல்லா நன்மைகளைப் பற்றியும் முத்துவிடம் தானியேல் விளக்கமாக எடுத்துச் சொன்னான். பின்பு முத்துவை தேவாலயத்திற்கு அழைத்துச்சென்று, போதகர் ஐயாவிடம் அவனை தானியேல் அறிமுகப்படுத்தினான். மேய்ப்பரின் அருட்செய்தி முத்துவின் உள்ளத்தைத் தொட்டது, இயேசுவின் அன்பால் ஈர்க்கப்பட்டான், தேவ வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து, முத்து தன்னை முழுமையாக தேவனுக்கு ஒப்புக் கொடுத்தான்.

## தானியேலுக்கு தேவன் தரிசனமாதல்

அன்றிரவில் தேவன் தானியேலுக்குத் தரிசனமாகி அவனோடு பேசினார்: "மகனே பிரியமான தானியேலே, நீ எனக்குச் செலுத்திய இம்மூன்று காணிக்கைகளுள் மூன்றாவதாக செலுத்தியதே விலையுயர்ந்த காணிக்கையாகும். அதுவே எனக்கு பிரியமானதுமாகும். இப்பொழுதும் நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன் நீ ஆசீர்வதிக்கப்பட்டவன் எல்லாநன்மையும் உனக்கு உண்டாயிருப்பதாக" என்று சொல்லி தேவன் தானியேலை ஆசீர்வதித்தார்.

## ஆத்தும இரட்சிப்பு

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, நாம் தேவனுக்கு காணிக்கை செலுத்த வெள்ளியோ, பொன்னோ, வைர மோதிரமோ, மிகுந்த பணமோ ஒரு வேளை நமக்கு கிடைக்காமலிருக்கலாம். மனித ஆத்துமா இவையெல்லாவற்றிலும் விலையேறப்பெற்றது. ஆதலால், இதுவரையிலும் இரட்சிக்கப்படாத நமது நண்பர்களுக்கு, உற்றார் உறவினர்களுக்கு, மற்றவர்களுக்கு இயேசு கிறிஸ்துவை, அவரால் கிடைக்கும் இரட்சிப்பை அன்புடன் அறிவிக்க வேண்டும். அவர்களும் விரைவிலே ஆத்தும இரட்சிப்பை பெற்றுக் கொள்ளும்படி அவர்களுக்காக நாம் ஜெபிக்கவேண்டும். இது தேவனுக்குப் பிரியமானது.

'தேவன் ஒருவரே..'

# THERE IS ONE GOD...

Regd. No 040088/84
Postal Regd No MH BY NE-94/83
Tamil Monthly Magazine

பிள்ளைகளே உங்கள் நண்பர்களுக்கு இயேசு கிறிஸ்துவை தெரியுமா? ஏனெனில் எல்லா மனுஷருக்கும் இரட்சிப்பை அளிக்கத்தக்க தேவ கிருபையானது பிரசன்னமாகியிருக்கிறது [தீத். 2:11]: இயேசு கிறிஸ்து பிரசன்னமாயிருக்கிறார் இயேசுவைப்பற்றி மற்றவர்களுக்குச் சொல்லுங்கள்.

"ஆத்துமாக்களை ஆதாயப்படுத்திக் கொள்ளுகிறவன் ஞானமுள்ளவன்"
[நீதி. 11:30].

யோவான் 6:27.

அழிந்துபோகிற போஜனத்திற்காக அல்ல நித்தியத்தில் பலனுண்டாகும்படியே ஒவ்வொரு கிரியையும் செய்யுங்கள் என்றார் இயேசுவானவர். நாம் செய்யும் ஒவ்வொரு கிரியையும் நித்தியத்தை மனதில் வைத்து அழியாத கிரியை செய்ய வேண்டும். உங்கள் கிரியையில் நித்தியநோக்கம் இருக்கட்டும்.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

   10 [வியாழன்] டிசம்பர் 1992

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00
   அனுப்ப வேண்டிய முகவரி

   CHIEF PASTOR N LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078. INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 105 - DEC. '92



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவார்(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் நான் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

# ஆசிரியர் உரை

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரமுண்டாவதாக! ஓர் ஆண்டின் இறுதியை நெருங்கிக் கொண்டிருக்கின்றோம். ஆண்டை ஆசீர்வாதமாய் கர்த்தர் முடித்துத்தருவாராக. புத்தாண்டு ஆரம்பமாகிறது. இயேசு கிறிஸ்துவினுடைய வருகை நெருங்குகிறது. தேவ ஜனங்கள் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறது மாத்திரமல்ல, அவரில் வேர் கொண்டு, போதிக்கப்பட்டபடியே கிறிஸ்துவுக்குள் ஸ்தோத்திரத்தோடு வளருவீர்களாக. கிறிஸ்தவ வாழ்க்கை என்று சொல்லப் படுகிறது மகா மேன்மையான வழியாகும். அது உன்னதத்தை நோக்கும் வழியாகும். "நீதிமானுடைய மார்க்கம் வர, வர நடுப்பகல் வரைக்கும் வல்லமையாய் பிரகாசிக்கிற சூரியனைப்போல் இருக்கிறது. தேவனுடைய கிருபையினால் நாம் இரட்சிக்கப்பட்டிருக்கிறோம், தேவனுடைய கிருபையினால் நாம் வளர்ந்து கொண்டிருக்கிறோம், தேவனுடைய கிருபையினால் நாம் பூரண நிலையை அடைவோம். கிறிஸ்தவ மார்க்கம் தேவனுடைய கிருபையே. மனிதன் முயற்சியினாலும், பிரயாசத்தினாலும், தன்னுடைய திறமையினாலும் வெற்றியடையலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கும் இந்த நாட்களிலே தேவனுடைய கிருபையை நாம் அதிகமாக ஸ்துதிக்கிறோம். கிறிஸ்தவ மார்க்கத்தில் எல்லாம் கிருபையே என்று நாம் அறிந்திருக்கிறோம். ஒருவர் நிலைநிற்கிறார் என்றால் கிருபை அவரைத்தாங்குகிறது என்று அர்த்தம்; ஒருவர் விழுந்து விட்டார், பின்மாறுகிறார் என்றால் கிருபை அவரை கைவிட்டு விட்டது என்று அர்த்தம். அவர் கிருபையை பற்றிக்கொள்ளவில்லை, தேடவில்லை, நாடவில்லை என்று அர்த்தமாகும். 1993-ம் புத்தாண்டிலே தேவ கிருபையை அதிகமாய் பெற்று வெற்றியடைவோம், தேவனுக்காய் பெரிய காரியங்களைச் செய்வோம், சத்துருக்களை முறியடிக்கவும் ஆயத்தப்படுவோமாக.

தேவ கிருபை நம்மோடிருக்கும். ஆமென்!

கிறிஸ்துவுக்குள்;

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிருபை வரங்கள்

(தொடர்ச்சி)

வரங்கள் கிரியை செய்யும் விதம்:

வரங்களைக் குறித்து நாம் ஆராயும் போது அவைகள் எவ்விதம் கிரியை செய்கிறது என்பதையும் மிக முக்கியமாக கவனிக்க வேண்டும். தன்னிடத்திலுள்ள வரங்களை எவ்வாறு பயன்படுத்த வேண்டுமென்று தெரியவில்லையெனில் அந்த வரத்தால் பிரயோஜனமும், பக்திவிருத்தியும் உண்டாகிறதற்குப்பதிலாக வருத்தமும் எதிர்ப்புகளும் உண்டாகும். ஆகையால் விசுவாசிகள் யாவரும் குறிப்பாக ஆவியின் வரத்தைப் பெற்றிருப்பவர்கள் வரங்களின் கிரியைகள் எம்முறையில் இருக்க வேண்டும் என்ற தெளிவுடையவர்களாக இருக்க வேண்டும். பிறரின் பக்திவிருத்திக்காக வரங்கள் கொடுக்கப்படுகின்றன [I கொரி. 14:26].

சபை, மற்றவர்கள் பக்தி விருத்தியடைய எல்லா வரங்களிலேயும் நிறைவுடையதாக இருக்கவேண்டும். கிருபை வரங்களின் முக்கிய நோக்கம் மற்றவர்களுடைய பக்திவிருத்திக்கு பயன்படவேண்டும் என்பதே. பக்தி விருத்திக்கு பயன்படாத யாதொன்றும் ஆவியானவரின் வரங்களின் கிரியையல்ல. சுயநலமும், கலக மனப்பான்மையும் அங்கு வெளிப்படக்கூடாது. கிருபை வரங்களைப் பெற்றவர்கள் அவைகளை உபயோகிக்கும் போது இந்தக் காரியத்தை மனதில் வைத்து கொள்ளவேண்டும்.

தன்னடக்கம் தேவை

நாம் கவனிக்கவேண்டியது, கிருபை வரங்களைப் பெற்றவர்கள் அதைக் கட்டுப்பாடோடு உபயோகிக்க வேண்டும். திருவசனப்போதகப்படி அது உபயோகப் படுத்தப்பட வேண்டும். வரங்களைக் கொடுப்பதும் அதை உபயோகப்படுத்த ஏவுகிறதும் ஆவியானவரே. ஆனால், அதை திருவசனத்தின்பிரகாரம் பொது உபயோகத்துக்காக கட்டுப்படுத்த வேண்டியது அந்த மனிதனுடைய கடமையாகும். அதற்குரிய ஞானத்தை தேவன் அருளுவார். ஆவியானவர் அருளுவார். தீர்க்கதரிசிகளுடைய ஆவி தீர்க்கதரிசிகளுக்கு அடங்கியிருக்கிறதே [I கொரி. 14:32]. வரங்களை உடையவர்கள் இவ்வாறு கட்டுப்படுத்தவில்லை யென்றால் பொதுவான பக்திவிருத்திக்குப் பதிலாகப் பொதுப்படையான கலக்கமும், கலகமும் உண்டாகும். இக்கட்டுப்பாடு சுயவிருப்பத்தின்படியோ அல்லது அபிப்பிராயத்தின்படியோ அல்லது மனித கொள்கைக்குட்பட்டோ இருக்கக் கூடாது. இக்கட்டுப்பாடு எங்ஙனம் இருக்க வேண்டும் என்பதும் திருவசனத்தில் சொல்லியிருக்கிறது[I கொரி. 14:21-23].

பொதுக் கூட்டங்களில் இவ்வனுபவங்கள் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டும். அந்நிய பாஷையில் பேசுகிறதானால் இரண்டு மூன்று பேர்கள் மட்டும் பேசலாம். எல்லாரும் ஒரே சமயத்தில் முயலக் கூடாது. இது ஒவ்வொருவராய் எழுந்து நின்று அந்நியபாஷை பேசுவதாகும். ஒருவர் பேசும் போது மற்றவர்கள் மொழிபெயர்க்க அங்கு வியாக்கியானம் உண்டாக வேண்டும். அப்படியென்றால் அப்படிச் செய்யலாம். இல்லையென்றால், எல்லோரும் ஆவியில் நிரம்பி எல்லோரும் அமைதியாகி விட வேண்டும். ஒருவரே அந்நியபாஷை பேசிக் கொண்டிருக்கக் கூடாது. மொழிபெயர்க்கிறவன் இல்லாவிட்டால் தனக்கும் தேவனுக்கும் தெரிய பேசக்கடவன் [I கொரி 14:13]. வியாக்கியான வரத்திற்காக ஜெபிக்க வேண்டும்.

அடுத்தப்படியாக தீர்க்கதரிசனம் சொல்லுகிறவர்கள் தங்களை கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். தீர்க்கதரிசிகள் இரண்டோ மூன்றோ பேர் பேசலாம். மற்றவர்கள் நிதானிக்க

லாம். கேட்கிறவர்கள் நிதானிக்கும் வகையில் தீர்க்கதரிசனம் உரைக்க வேண்டும். ஒன்றிற்கு மேற்பட்டவர்கள் ஒரே சமயத்தில் தீர்க்கதரிசனம் சொல்லிக்கொண்டிருக்கக் கூடாது. அது சரியாக புரிந்து கொள்ளவோ, நிதானிக்கவோ முடியாது. எல்லாரும் கற்கிறதற்கும், எல்லாரும் தேறுகிறதற்கும் நீங்கள் அனைவரும் ஒவ்வொருவராய் தீர்க்கதரிசனம் சொல்லலாம். ஒரு சமயத்தில் ஒருவர் மட்டுமே தீர்க்கதரிசனம் உரைக்க வேண்டும். அது சபையிலுள்ள எல்லாரும் தெளிவாய்க் கேட்கும்படி இருக்கவேண்டும்.

மற்றவர்கள் அதை நன்றாய்க் கவனித்துக் கற்கவும், தேறவும், சுயமாக தியானிக்கவும் வேண்டும் அப்பொழுது மற்றவனுக்கு ஏதாவது வெளிப்படுத்தப்பட்டால் முந்திபேசினவன் பேசாமலிருக்கக்கடவன். வேறொருவனுக்கு அது வெளிப்படுத்தல் உண்டாகிறது என அறிந்தால் முதலில் பேசினவன் அமைதியாய் இருந்து கொண்டு மற்றவன் தீர்க்கதரிசனம் உரைக்க தருணம் கொடுக்க வேண்டும். தீர்க்கதரிசிகளுடைய ஆவிகள் தீர்க்கதரிசிகளுக்கு அடங்கியிருக்கிறதே என்பதினிமித்தம் சகலமும் நல்லொழுக்கமும், கிரமமுமாய் செய்யப்படவேண்டும் என்பதை அறிந்து கொள்கிறோம்.

## ஆவிக்குரிய தேர்ச்சி

சரீரமண்டலத்தைப் போன்றே ஆவிக்குரிய மண்டலத்திலும் சிறப்பாக, ஆவிக்குரிய வரங்களை உபயோகிப்பதிலும் முதிர்ச்சியற்ற அனுபவம் நீக்கப்படவேண்டும். முதுமை நமக்குத் தேவை முதிர்ச்சி இல்லாத அனுபவமே முதிர்ச்சியை உண்டு பண்ணுகிறது. இதைக் குறித்து போதிய அளவு அறிந்து கொள்ள முதிர்ச்சியற்ற அனுபவத்தை தவறாக கேவலமாகக் கருதி அதைத்தள்ளி விட வேண்டாம். வெற்றியடையாதவன் தேர்ச்சிக்காக முயற்சி செய்ய வேண்டுவது இருப்பதைப் போன்றே ஒருவர் தேர்ச்சியற்ற அனுபவத்தைக் கேவலமாக எண்ணித் தள்ளிவிடாமல் பொறுமை, சாந்தம், அன்பு இவைகளின் மூலம் அவர்கள் ஆவியில் தேர்ச்சியடைய உதவி செய்யவேண்டும். இரண்டு வயதுடைய குழந்தையின் நடத்தைகள் 20 வயது வாலிபனுடையதைப் போல இருக்காது. அதைப்போன்றே 20 வயது வாலிபனுடைய நடத்தைகள் 2 வயது குழந்தையைப்போல் இருக்கக் கூடாது. புரிந்து கொள்ளுதலில் தவறான எண்ணங்களும் இன்னல்களும் உண்டாகும்.

ஆகவே ஆவிக்குரிய வரங்களைக் குறித்துப் படிக்கும் போது இந்த அவசியத்தை அறிந்து கொள்ளவேண்டும். தேர்ச்சியற்ற அல்லது குழந்தையைப் போன்ற அனுபவம் இவ்வரங்களில் கிரியை செய்கின்றன. 'நான் குழந்தையாயிருந்தபோது குழந்தையைப்போலப் பேசினேன், குழந்தையைப் போல சிந்தித்தேன், குழந்தையைப்போல யோசித்தேன்; சகோதரரே நீங்கள் புத்தியிலே குழந்தைகளாயிராதேயுங்கள், புத்தியிலே தேறினவர்களாயிருங்கள் [I கொரி. 13:11;14:20]. இங்கு குழந்தையைப்போலப் பேசினேன், குழந்தையைப் போல சிந்தித்தேன், குழந்தையைப் போல யோசித்தேன் என்று மூன்று அனுபவங்களைக் கவனிப்போம்.

எல்லோரும் கற்கிறதற்கும் தேர்ச்சியடைவதற்கும் ஒவ்வொருவராய்த் தீர்க்கதரிசனம் சொல்லலாம். சபையில் அவர்கள் இவைகளை உபயோகித்து, அடங்கியிருந்து தலைமை வகிக்கிறவர்களுடைய ஆலோசனைக்குட்பட்டு அவர்கள் தேர்ச்சியடைய வேண்டும். நாம் தீர்க்கதரிசனம் சொல்லுவதும் குறைவுள்ளது (I கொரி. 13:8). வளர்ச்சியடையும் போது குழந்தைக்கேற்றவைகள் ஒழிந்து போய்விடும். வளர்ச்சியடைய உதவி செய்யுங்கள். வளர்ச்சியடைய வேண்டியவர்களாய் நாம் இருக்கிறோமென்பதை எண்ணிக் கொள்ளுங்கள்.

[தொடரும்.]

---

"அன்பை நாடுங்கள், ஞானவரங்களை விரும்புங்கள்" I கொரி. 14:1.

---

# நன்மை செய்யுங்கள்

அவனவன் தனக்கானவைகளையல்ல, பிறனுக்கானவைகளையும் நோக்குவானாக. நாமெல்லோரும் கிறிஸ்தவர்கள். அட்! அவர்கள் கிறிஸ்தவர்களாயிருக்கும் என்பது ஆச்சரியமான சொல். கிறிஸ்தவர்கள் என்றால் நல்லவர்கள், பிறர் சிநேகம் உள்ளவர்கள், சுத்தமானவர்கள் என்று அர்த்தம். பொதுவாக உலகத்தில் தன்னயமும், நான் என்ற அகங்காரமும் பெருகி கிரியை செய்கிற காலமாக இருக்கிறது. நான் என்ற அகங்காரமும், தன்னயமும் சகல பாவத்திற்கும் அடிப்படையாயிருக்கிறது.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் வந்து இந்த 'நான்' என்கிற அகங்காரத்தையும், தன்னயத்தையும் சிலுவையில் அறைந்தார். கிறிஸ்தவர்கள் பொதுவாக எல்லாரிடத்திலும் அன்புடையவர்களாக நடந்துகொள்ளவேண்டும். உங்கள் வெளிச்சம் அவர்கள் முன்பாகப் பிரகாசிக்கக்கடவது [மத். 5:16] விசேஷமாய் ஒருவருக்கொருவர் நமக்குள் மிகவும் அன்புள்ளவர்களாயும் சகித்துப் போகிறவர்களாயும், விட்டுக் கொடுக்கிறவர்களாயும் இருக்கவேண்டும். பிறருக்குப் பிரியமாய் நடந்து கொள்கிறவர்களாய் இருக்க வேண்டும்.

அவனவன் தனக்கானவைகளையல்ல பிறனுக்குப் பிரியமானவைகளையும் செய்யக்கடவன். நாம் நமக்கே பிரியமாய் நடக்கக் கூடாது. நம்மில் ஒவ்வொருவனும் பிறனுடைய பக்திவிருத்திக்கேதுவான நன்மையுண்டாகும்படி அவனுக்குப் பிரியமாய் நடக்கக்கடவன் (ரோ. 15:2). கிறிஸ்தவ ஜீவியம் செலவு செய்வதும், பணிபுரிவதுமே. அதிலே தான் மெய்யான இன்பம் இருக்கிறது. சேவை புரிவதில் தன்னை தியாகம் செய்கிறவனே மெய்யான ஊழியக்காரன். கிறிஸ்தவர்கள் ஒவ்வொருவரும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மாதிரியைப் பின்பற்ற வேண்டியவர்களாயிருக்கிறோம். நானோ உங்கள் மத்தியில் பணிவிடைக்காரனைப் போல் இருக்கிறேன் என்று இயேசு கிறிஸ்து திருவுளம் பற்றினார் [லூக். 22 27]. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நமக்கு மாதிரியைக் காண்பித்து பின் வைத்துச் சென்றுள்ளார். நான் உங்களுக்குச் செய்ததுபோல நீங்களும் செய்யும்படி உங்களுக்கு மாதிரியைக் காண்பித்தேன் [யோ. 13:15].

பிறனுக்கு வருத்தமுண்டாகப் புசிப்பதில் கூட நாம் நம் இஷ்டப்பிரகாரம் நடக்கக் கூடாது. மாமிசம் புசிக்கிறதும், மதுபானம் பண்ணுகிறதும் மற்றெதையாகிலும் செய்கிறவன், சகோதரன் இடறுகிறதற்காவது, தவறுகிறதற்காவது, பெலவீனப்படுகிறதற்கேதுவாக இருந்தால் அவைகளில் ஒன்றையும் செய்யாமல் இருப்பதே நன்மையாக இருக்கும் என்று நாம் வாசிக்கிறோம். இதில் முக்கியமான சத்தியம் என்னவென்றால் நாம் பிறருடைய இரட்சிப்புக்கு இடறலான எந்தக் காரியத்தையும் செய்யக்கூடாது. புசிப்பதிலேயும், மாம்சம் புசிக்கிறது இடையூறாய் இருக்கிறதென்றால் அதைப் புசிக்காமல் இருக்கிறது நல்லது. தன்மட்டில் விசுவாசம் இருந்தால் தனியாக புசித்துக் கொள்ளலாம்.

எனவே, ஒவ்வொருவரும் தன்னுடைய சுய பிரயோஜனத்தை தேடாமல் அநேகருக்குப் பிரயோஜனமுண்டாக, பிறருக்குப் பிரியமாக நடந்து, அவர்கள் இரட்சிக்கப்படும்படியாக முயற்சி பண்ண வேண்டும். அப்படியே சபையிலும் நாம் பிறருக்குப் பிரியமாக நடந்துகொள்ள வேண்டும். சபைகளில் ஆராதனையிலும், பாட்டிலும், எல்லாவற்றிலும் தேவன் மகிமைப்பட வேண்டுமென்பதே நம்முடைய நோக்கமாயிருக்க வேண்டும். "ஆகையால் நீங்கள் புசித்தாலும், குடித்தாலும், எதைச் செய்தாலும்,

எல்லாவற்றையும் தேவனுடைய மகிமைக்கென்று செய்யுங்கள்; நான் சுயபிரயோஜனத்தைத்தேடாமல், அநேகருடைய பிரயோஜனத்தைத்தேடி, அவர்கள் இரட்சிக்கப்படும்படிக்கு, எவ்விதத்திலும் எல்லாருக்கும் பிரியமாய் நடக்கிறதுபோல [I கொரி. 10.31-32] என்று அப். பவுல் சொல்லியிருக்கிறார்.

1. பிறனுக்கு நன்மை செய்ய வேண்டும் [மத். 5:16].

நம்மாலான நன்மை பிறருக்கு செய்ய வேண்டும். நம்முடைய எதிரி அபத்தில் சிக்கியிருக்க கண்டால் அவனை விடுவித்துவிட வேண்டும்; நன்மை செய்ய வேண்டும், இது நம்முடைய கடமையாகும். கூடுமானவரை தேவனுடைய பிள்ளைகளுக்கு நம்மாலான நன்மை செய்வதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அது கிறிஸ்துவுக்குச் செய்கிறதாகும்.

2. நம்முடைய விருப்பங்களை விட்டுக் கொடுக்கவேண்டும்.

"போஜனத்தினாலே உன் சகோதரனுக்கு விசனமுண்டாக்கினால் நீ அன்பாய் நடக்கிறவனல்ல. அவனை உன் போஜனத்தினாலே கெடுக்காதே, கிறிஸ்து அவனுக்காக மரித்தாரே" என்று எழுதப்பட்டுள்ளது. நம்மட்டில் நாம் செய்கிறது சரி என்று நமக்கு தோன்றலாம். ஆனால் பிறருக்கு அது வருத்தமுண்டாக்குமானால் அதை நாம் விட்டுக் கொடுக்கவேண்டும். நாம் அன்பாய் நடந்து கொள்ள வேண்டும். நாம் செய்கிறது நமக்குச் சரியென்றால் அது எல்லாருக்கும் சரியாகப் படும் ஆனால் நான் கடவுளுக்கு முன்பாக சரியாகத்தானிருக்கிறேன் என்று சொல்கிறதைக்காட்டிலும் எல்லாருடைய பார்வையிலும் நன்மையானதையே செய்யவேண்டும். மற்றவர்கள் குற்றம் குறை என்று சொல்லுகிறதை விட்டு ஒதுங்கவேண்டும்.

3. பிறருக்குப் பிரியமாய் நடந்து கொள்ளவேண்டும்.

நம்மில் ஒவ்வொருவனும் பிறனுடைய பக்திவிருத்திக்கேதுவான நன்மையுண்டாகும்படி அவனுக்குப் பிரியமாய் நடக்கக் கடவன் [ரோ. 15:2]. பிறருக்குப் பிரியமாய் நடந்து கொள்ளவேண்டும். மற்றவர்கள் தேவனைப்பற்றி அறிந்து கொள்ளவும் தேவனுக்குப் பயப்படவும், அவர்களில் தேவபக்தி வளர்கிறதற்கேதுவான காரியங்களைச் செய்ய வேண்டும். நாம் நம்முடைய பெருமையை, தன்னயத்தை, சுபாவத்தன்மையைக் காட்டிக் கொள்ளாதபடி கிறிஸ்துவின் சுபாவம் நம்மில் இருந்து வெளிப்பட வேண்டும். பிறர் பக்தி விருத்தி அடைவதற்கேதுவாக நன்மையுண்டாக அவர்களுக்குப் பிரியமாக நடக்க வேண்டும் என்று எழுதப்பட்டிருக்கிறது. நாம் செய்கிற நன்மை அவர்களுக்கு பக்திவிருத்தியுண்டாக்கட்டும்.

4. நாம் செய்கிற எதிலும் பிறர் இடறுகிறதற்கேதுவான எத்தக்கிரியையும் இல்லாதபடி நாம் கவனமாய் இருக்க வேண்டும்.

மாம்சம் புசிக்கிறதோ, மற்றெதையாகிலும் செய்கிறதோ உன் சகோதரன் இடறுகிறதற்காவது, தவறுகிறதற்காவது, பெலவீனப்படுகிறதற்காவது ஏதுவாயிருந்தால் அவைகளில் ஒன்றையும் செய்யாமலிருப்பதே நன்மையாயிருக்கும் [ரோ. 14:21] என்று எழுதியிருக்கிறது. சில ஆகாரங்கள் சிலருக்கு அருவருப்பாயிருக்கும். சிலருக்கு அது பிரியமாக இருக்கும். தனக்குப் பிரியமாயிருக்கிறது பிறருக்கு அருவருப்பாயிருக்கிறதென்றால் அவர்கள் முன்னால் சாப்பிடாமல் இருக்கிறது ஒரு நல்ல பண்பாகும். பூர்வீகமாக சைவ ஆகாரம் சாப்பிட்டு வந்தவர்கள் திடீரென்று அசைவத்தைச் சாப்பிடக் கட்டாயப்படுத்தக்கூடாது. அசைவம் சாப்பிடுகிறதுதான் கிறிஸ்தவம் என்று

போதிக்கக் கூடாது. கிறிஸ்தவம் என்று சொல்லப்படுகிறது. இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, அவர் மூலமாய் உண்டாகிற இரட்சிப்பைப் பெற்றுக் கொண்டு நீதி நெறியில் வாழ்வதே. அந்தந்த நாட்டு அந்தந்த ஜனங்களின் பழக்க வழக்கப்படி சில காரியங்கள் அவர்களுக்கு பழக்கமாயிருக்கலாம். ஆனால் பிறர் இரட்சிக்கப்படுகிறதற்கு இடையூறாயிருந்தால் அந்த பழக்கவழக்கங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். அவ்விதமாய் புசிக்கிற காரியங்களிலேயும் நாம் நடந்து கொள்ள வேண்டும்.

5. பிறருடைய பாரத்தை சுமக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

"ஒருவர் பாரத்தை ஒருவர் சுமந்து இப்படியே கிறிஸ்துவின் பிரமாணத்தை நிறைவேற்றுங்கள்" பிறருடைய பாரத்தை சுமக்கக் கற்றுக் கொள்கிறது என்பது பிறருக்கு உண்டாகிற துன்பம், துக்கம், நெருக்கடியில் நாம் கொஞ்சம் பகிர்ந்து கொள்ளவேண்டும். ஒருவரே அவருடைய காரியத்தை சரி செய்யட்டும் என்று நாம் இருக்கக் கூடாது அவர்களுக்கு கொஞ்சம் இலகு உண்டாக்க வேண்டும்.

உலகத்திலே மனிதர்களுக்கு உதவி செய்கிறவர்கள், கை கொடுத்துத் தாங்கக் கூடியவர்கள் இல்லாததினாலே அநேகர் வறுமையடைந்து பிச்சைக்காரர்களாகக் கூட போய்விடுகிறார்கள். ஆனால், தேவ ஜனங்களில் அப்படி நடக்ககூடாது; அப்படி ஆகிறதும் இல்லை. உலகத்திலே பிச்சைக்காரர்கள் அதிகமாக இல்லாதது கிறிஸ்தவத்தில் மாத்திரம் தான். இந்துக்களிலோ, முஸ்லீம்களிலோ யாசகம் எடுக்கிறவர்கள், பிச்சைக்காரர்கள், குருடர்கள் ஏராளம் பேர்கள். அவர்கள் தங்களுடைய தெய்வங்களின் பேரைச் சொல்லி இரந்துண்டு திரிகிறார்கள். ஆனால், இயேசு கிறிஸ்துவின் பேரைச் சொல்லி இரந்துண்டு திரிகிறவர்கள் மிக அபூர்வமாக இருக்கலாம். ஆனால், பிச்சைக்காரர்கள் கிறிஸ்தவத்தில் கிடையாது. ஏனென்றால், கிறிஸ்தவர்கள் ஒருவருக்கொருவர் நன்மை செய்து கை தூக்கி விடுகிறவர்களாகும். இவ்விதமாய் நாம் செய்ய வேண்டும்.

6. பிறருக்கானவைகளையும் நாம் தேடவேண்டும்.

"அவனவன் தனக்கானவைகளையல்ல பிறருக்கானவைகளையும் நோக்குவானாக"

பிறருக்கானவைகளையும் நோக்கவேண்டும். எப்பொழுதும் தன்னயமுடையவர்களாய் நம்மைப்பற்றியும், நம்முடைய குடும்பத்தைப் பற்றியும் கவலைப்பட்டுக் கொண்டிராமல் பிறரைப் பற்றிக் கவலைப்படவேண்டும் ஆகாரமில்லாதவர்களுக்கு ஆகாரத்தைப் பகிர்ந்து கொடுக்கிறதும், வஸ்திரம் இல்லாதவர்களுக்கு வஸ்திரம் கொடுக்கிறதும், ஆதரவற்றவர்களைச் சேர்த்துக்கொண்டு ஆதரவு செய்கிறதும் தேவனுடைய கட்டளையாக இருக்கிறது. தேவ பக்தி என்று சொல்லப்படுகிறது வெறும் வாயளவில் அல்ல செயலளவில் காண்பிக்கப்பட வேண்டும் நாம் அதிகமாய் செய்ய முடியாவிட்டாலும் நம்மால் இயன்ற சிறுசிறு உதவிகளை செய்கிறதின் மூலமாக அநேகர் கிறிஸ்துவைக்கண்டு கொண்டு கிறிஸ்துவின் அன்பினால் இழுக்கப்படுவார்கள். ஆனபடியினால், பிறருக்கானவைகளையும் நாம் தேடவேண்டும்.

7. எல்லாவற்றிலும் தேவனே மகிமைப்படும்படியாக கிரியை செய்ய வேண்டும்.

ஆகையால் நீங்கள் புசித்தாலும், குடித்தாலும், எதைச்செய்தாலும், எல்லாவற்றையும் தேவனுடைய மகிமைக்கென்று செய்யுங்கள் (I கொரி. 10:31). நாம் செய்கிற எதுவும்தேவனுக்கு மகிமைகொண்டுவருமா? அதினாலே தேவன் மகிமைப்படுவாரா? அதினாலே பிறர் தேவனை அறிந்து கொண்டு விசுவாசித்து இரட்சிக்கப்பட முடியுமா,

இதனை நான் செய்கிறேன் இதின் மூலம் தேவன் மகிமைப்படுவாரென்று நாம் சொல்லக்கூடுமா? சொல்ல முடியாதே. பொதுவாக, சினிமாவுக்குப் போகக்கூடாது, பீடி சிகரெட் குடிக்கக் கூடாது, வெற்றிலைப் பாக்கு போடக்கூடாது என்று பைபிளில் எங்கே எழுதியிருக்கிறது என்று கேட்கிற அநேகர் இருக்கிறார்கள். தேவ ஜனங்கள் சிந்திக்க வேண்டிய காரியம் என்னவென்றால் இவைகளைச் செய்கிறதினால் தேவன் மகிமைப்படுவாரா? அதனாலே தேவனுக்கு மகிமை, ஸ்துதி உண்டாகுமா? பிறர் தேவனை அறிந்து இரட்சிக்கப்படுவார்களா என்று பார்த்தால் நாம் செய்கிறவைகளைக் குறித்து நாமே வெட்கப்படுவோம்.

I தெச. 5:21ல் எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து நலமானதைப் பிடித்துக் கொள்ளுங்கள்; பொல்லாங்காய்த் தோன்றுகிற எல்லாவற்றையும் விட்டு விலகுங்கள் [வச. 22]. பொல்லாங்கு என்பது பாவம். இது பாவமோ பாவம் இல்லையோ என்கிற சந்தேகமே வந்துவிட்டால் அது பாவம் தான். அதை விட்டுவிட வேண்டும். பாவம் இல்லையென்றால் அந்த சந்தேகம் வராது. உலகத்தார் அவைகளை பாவம் என்று எண்ணாமல் சாதாரணமாக எண்ணலாம் நமக்கு அது பாவந்தான். ஆனபடியினால், எல்லாவற்றிலேயும் தேவன் மகிமைப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடே நாம் வாழ்வோமாக.

எனவே, நன்மை செய்ய வேண்டியதில் நன்மை செய்வதும், விட்டு விட வேண்டியதை விட்டு விடுவதுமே கிறிஸ்தமாகும். அப்படிச் செய்து கிறிஸ்துவின் பிரமாணத்தை நாம் நிறைவேற்றுவோமாக. நீங்கள் ஒவ்வொருவருமே கிறிஸ்துவின் பிரமாணத்தை நிறைவேற்றுகிறவர்களாக இருக்க வேண்டும் என்றே தேவன் விரும்புகிறார். ஆனபடியினால் இந்தக் கிறிஸ்தவ வாழ்க்கையிலே, நாம் தியாகம் செய்கிறதும், நன்மை செய்கிறதும், பிறருக்குப்பிரியமாய் நடந்து அவர்கள் இரட்சிக்கப்படவும், பக்தி விருத்தியடைவதற்கேதுவாக வாழ்கிறதுமே ஒரு மகத்துவமான வெற்றி வாழ்க்கையாகும். இப்படி நாம் எல்லாரும் வாழ்ந்து கிறிஸ்துவை மகிமைப்படுத்துவோமாக. ஆமென்!

"ஆகையால் நீங்கள் புசித்தாலும், குடித்தாலும் எதைச் செய்தாலும், எல்லாவற்றையும் தேவனுடைய மகிமைக்கென்று செய்யுங்கள்." கொரி. 10:31.

கிறிஸ்மஸ் செய்தி

# இறைவன் பிறந்து விட்டார்!

"அவள் ஒரு குமாரனைப் பெறுவாள் அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக. ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார் என்றான்" மத். 1:21.

உலகத்தில் எத்தனையோ கோடிக்கணக்கான குழந்தைகள் பிறக்கிறார்கள். அவர்கள் மத்தியில் ஓர் குழந்தை. முந்தின காலங்களில் தீர்க்கதரிசிகளால் முன்னறிவித்தபடி இஸ்ரவேல் தேசத்திலே தாவீது அரசன் சந்ததியில் இதோ ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள் அவர் இறைவன் [ஏசா. 7:14; 9:6] என்ற வேத மொழியின்படி விவாகமாகாத புருஷனை அறியாத ஒரு பரிசுத்த ஸ்திரீ பரிசுத்த ஆவியால் கர்ப்பவதியாகி காணப்படுகிறாள். அவளை விவாகம் பண்ணும்படி நிச்சயத்திருந்த யோசேப்பு கலக்கமடைகிறார். அப்பொழுதுதான் தேவ

தூதன் இந்த வாக்கை யோசேப்புக்குச் சொல்லுகிறார் [மத் 1:18-21]. சிலருக்கு இது எப்படி என்று திகைப்பும், சந்தேகமும் மாறுபாடான எண்ணங்களும் உண்டாகலாம் நிரீச்சரவாதிகளுக்கு விகற்பமாகக் கூடக் காணப்படலாம். அது இயற்கை தான்.

எல்லாம் இயற்க்கையாய் வந்து விட்டது. ஒன்றிலிருந்து ஒன்று தோன்றிவிட்டது அதிலிருந்து இது வந்தது இதிலிருந்து இது வந்தது கடைசியில், குரங்கிலிருந்து மனிதன் வந்தான் என்று சொல்லுகிறவர்களுக்கு இது நம்பமுடியாத காரியமாக இருக்கலாம். ஆனால், ஆத்திகர்களுக்கோ இது விகற்பமான காரியமில்லை. மெய் ஞானிகளுக்கு, இறைபக்தியுடையவர்களுக்கு இது இயல்பான காரியந்தான். தேவனால் எல்லாம் கூடும் என்பதை அவர்கள் நம்புகிறார்கள். அது மாத்திரமல்ல, அது உண்மை என்பதை அந்த தெய்வீக குழந்தையின் பிறப்பிலும், வளர்த்தியிலும், அதனுடைய முடிவிலும் இருந்து அறிந்து கொள்கிறார்கள்.

ஆணும், பெண்ணும் சேர்ந்தால் குழந்தை பாக்கியம் உண்டாகும். அந்தக் குழந்தை அதன் பெற்றோர்களின் இயல்புடையதாய், பாவக் கல்மிசம் உடையதாய் உலகில் காணப்படுகின்றன. மற்றமத தெய்வங்களும் அவர்கள் சிரேஷ்டர்களும் இந்தப்பட்டியலில் அடங்குகிறார்கள். ஒரு சிலர் பாவிகளாய் உலகத்தில் வளர்ந்து பெரியவர்களான பின்பு கல்வித் திறமையாலும், தன்னடக்கத்தாலும், சூழ்நிலையை அனுசரித்தும் மதிப்பாக நடந்து கொண்டாலும் சில அரிய பெரிய தியாகக் காரியங்களைச் செய்தாலும் பாவ மனிதர்களாய் பிறந்தபடியால் அந்தரங்க, வெளியரங்க பாவிகளாய் இருக்கிறார்கள். வேளா வேளைகளில் பெரிய தவறுகளையும் செய்கிறார்கள். ஏனென்றால், அவர்கள் மனித விந்துவினால் தோன்றியவர்கள். இந்தக் குழந்தையோ பரிசுத்த ஆவியினால், பரிசுத்தமான கன்னிகையிடம் பிறந்தது. தெய்வீகக் குழந்தை தேவனே. "உன்னிடத்தில் பிறப்பது பரிசுத்தமுள்ளது, அது தேவனுடைய குமாரன் எனப்படும்" [லூக். 1:35].

அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக. அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி இரட்சிக்கிறவர். கண்ணுடையவனே குபோதிக்கு [குருடன்] வழி காட்ட முடியும், மேலே நிற்கிறவனே சேற்றில் அமிழ்கிறவனை தூக்கி விட முடியும். பலசாலி தான் பலவீனமானவனுக்கு உதவி செய்யமுடியும். பாவமற்ற ஒருவன் தான் பாவிகளை மீட்க முடியும். இயேசுவானவர் ஒருவரே பூமியில் பரிசுத்த வாழ்வு வாழ்ந்து, மனுஷர்களுடைய பாவங்களுக்காக கல்வாரிச் சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்த தெய்வம். அவரை விசுவாசித்து, அவரைத் தன்னுள்ளத்தில் ஏற்றுக்கொண்டவர்களே அவருடைய ஜனங்கள். அவர்களை, அவர்களுடைய பாவங்களிலிருந்து நீக்கி இரட்சிக்கிறார். வேத நூல்களும், தீர்க்கதரிசிகளும் அவரையே முன்னறிவித்தனர். அவருடைய நாமத்தினாலே பாவ விமோசனம் உண்டாகும் [அப். 10:43].

இதோ! இயேசுவானவர் இரண்டாந் தடவை பரலோகத்திலிருந்து வரப்போகிறார். தம்முடைய மெய் பக்தர்களை பரலோகம் அழைத்துச் செல்ல மறுபடியும் வரப்போகிறார் [1 தெச. 4:15-17; யோ. 14:2,3].

இவரே உலக இரட்சகர் [Saviour of world]. உன்னை பாவத்திலிருந்தும், வியாதியிலிருந்தும், துன்ப துக்கங்களிலிருந்தும், அஞ்ஞானத்திலிருந்தும், மரணத்திலிருந்தும், நரகத்திலிருந்தும் மீட்கிறவர். அவருடைய பிறந்த நாளை கொண்டாடுகிற, நினைவு கூருகிற நீங்கள் அவரைச் சொந்த தெய்வமாக, மீட்பராக ஏற்றுக் கொண்டிருக்கிறீர்களா? இல்லையென்றால்,

அவருடைய பிறப்பின் பண்டிகையை கொண்டாடுகிற இந்த நாளிலே அவரை உங்களுக்குச் சொந்த தெய்வமாகவும், மீட்பராகவும் ஏற்றுக்கொள்ளுங்கள். இதுவே கிறிஸ்துவின் பிறப்பு.

இயேசு கிறிஸ்து பிறந்து விட்டார்!
இறைமகன் பிறந்து விட்டார்!!
இறைவன் பிறந்து விட்டார்!!!

இனி சந்தோஷந்தான்.
அல்லேலூயா!

"இயேசுவின் நாமத்தில் வானோர் பூதலத்தோர், பூமியின் கீழானோருடைய முழங்கால் யாவும் முடங்கும்" பிலி.2:10.

## முதல் மாதம் முதல் தேதியிலே...!

கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய ஊழியர்களுக்கும் தேவனுடைய பிள்ளைகளுக்கும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் கிறிஸ்மஸ் - புதுவருட வாழ்த்துதலைக் கூறிக்கொள்ளுகிறேன். மகிமையானவைகளின் மேலெல்லாம் காவல் உண்டாயிருக்கும்.

*புத்தாண்டில் கிறிஸ்தவர்கள் தீர்மானிக்க வேண்டிய*
*10 காரியங்கள்: எபி. 11:13-16.*

1. வாக்குத்தத்தங்கள் எல்லாவற்றையும் நாம் இன்னும் பெற்றுக் கொள்ளவில்லை,
2. தூரத்தில் வாக்குத்தத்த ஆசீர்வாதங்களைக் காணுகிறோம்.
3. வாக்குத்தத்தங்களெல்லாம் உண்மையாயிருக்கிறது,
4. அவைகளை நம்பி ஆலிங்கனம் [அணைத்துக் கொள்ளல்] செய்கிறோம்.
5. பூமியிலே நாம் அந்நியர்கள் என்று அறிக்கை செய்தல்,
6. பூமியிலே பரதேச யாத்திரிகர்கள் என்று அறிக்கை செய்தல்,
7. பரலோகத்தை நாங்கள் தேடிப்போகிறோம் என்று அறிவித்தல்,
8. உலகப் பொருள், பதவி மேல் மனதை வைக்காதிருத்தல்,
9. மறுபடியும் உலகத்துக்குள் திரும்பிப்போக விரும்பவில்லை,
10. பரலோக இராஜ்யத்தையே விரும்புகிறோம், தேவன் அதற்கு எங்களை அழைத்துள்ளார் என்பதே.

ஆண்டு முழுவதும் இதுவே உங்கள் சிந்தையும் நாட்டமும் தேட்டமுமாக இருப்பதாக. ஆமென்!

அதைக்கொடுக்க இதோ தேவன் வருகிறார்.

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

எண்ணாகமம் 3:1-4:41: இஸ்ரவேலின் எண்ணிக்கையில் சேர்க்கப்படாமல் தனியாக லேவியருடைய எண்ணிக்கை (Census) எடுக்கப்பட்டது. லேவியருடைய எண்ணிக்கையும் அவர்களுடைய பணிவிடைகளும் குறிக்கப்பட்டிருக்கின்றது. இஸ்ரவேலர்களுடைய எண்ணிக்கைக்கும் லேவியருடைய எண்ணிக்கைக்கும் வித்தியாசம் உண்டு.

### லேவியருடைய எண்ணிக்கை (Census)

ஒரு மாதம் முதல் அதற்கு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டார்கள் [எண். 3:15,22,28,39]. அப்படி எண்ணப்பட்டவர்களுடைய கூட்டங்கள் (4 Groups). ஆசாரியர்கள், லேவியர்கள் 4 பிரிவாக பாளையமிறங்கினார்கள்.

FIRST GROUP: மோசே, ஆரோன் அவர்களுடைய குடும்பங்களாகும்.

### லேவியருடைய பிரிவுகள்:

1. கோகாத்தியர்: கோகாத்தியருடைய எண்ணிக்கை 8,600. இவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் தென்பாகத்தில் பாளயமிறங்க வேண்டும். இவர்களுடைய வேலைகள் சாட்சிப்பெட்டி, மேஜை, குத்துவிளக்கு, பீடங்கள், ஆராதனைக்கேற்ற பரிசுத்த ஸ்தலத்தின் பணிமுட்டுகள், தொங்கு திரைகள் அதின் எல்லா வேலைகளுக்கடுத்த வேலைகளுமாகும் (எண். 3:27-32].

2. கெர்சோனியர்: இவர்களில் எண்ணப்பட்ட ஆண் பிள்ளைகள், 7,500. இவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் பின்பக்கம் அதாவது ஆசரிப்புக் கூடாரத்தின் மேற்குப் பக்கமாக பாளயமிறங்க வேண்டும். இவர்களுடைய வேலைகள்: வாசஸ்தலம், கூடாரம் அதன் மூடி, ஆசரிப்புக் கூடார வாசல் மறைவு, வாசஸ்தல பலிபீடம் இவைகளண்டையில் இருக்கிற பிராகார தொங்கு திரைகள், பிராகார வாசல் மூடுதிரை அவைகளின் வேலைகளுக்கெல்லாம் உரிய அவைகளின் கயிறுகள் இவர்களுடைய காவலிலே இருந்தது (எண். 3:21-26].

3. மெராரியர்கள்: இவர்களுடைய எண்ணிக்கை 6,200. இவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் வடபுறம் பாளயமிறங்க வேண்டும் வாசஸ்தலத்தின் பலகைகள், தாழ்ப்பாள்கள், தூண்கள், பாதங்கள், அவற்றின் எல்லாப் பணிமுட்டுகளும் அதற்கடுத்தவைகளனைத்தும் சுற்றுப்பிராகாரத்தின் தூண்களும் அவைகளின் பாதங்களும், முளைகளும், கயிறுகளுமே. இவைகள் மெராரிபுத்திரர்களின் காவலில் இருந்தது. இவர்கள் வாசஸ்தலத்தின் வடபுறம் பாளயமிறங்க வேண்டும் [எண்.3:3-37.] ஒரு மாதம் முதல் அதற்கு மேற்கொண்ட வயதுள்ள லேவியர்களின் எண்ணிக்கை மொத்தம் 22,000 [எண். 3:39).

மோசேயும், ஆரோனும் அவன் குமாரர்களும், ஆசரிப்புக் கூடாரமாகிய வாசஸ்தலத்திற்கு முன்பாக சூரியன் உதிக்கும் திசையாக கீழ்ப்புறத்திலே ஆசரிப்புக் கூடார

வாசலுக்குமுன் தங்கள் கூடாரங்களைப் போட்டு இறங்கி இஸ்ரவேல் புத்திரரின் காவலுக்குப் பதிலாக பரிசுத்த ஸ்தலத்தைக் காவல் காக்கவேண்டும். வாசஸ்தலத்தைச் சேருகிற அந்நியன் கொலை செய்யப்படக்கடவன் [எண். 3:38]. இவ்விதமாக ஆசாரியர்கள், லேவியர்கள் 4 பிரிவாக பாளயமிறங்கியிருந்தார்கள். முதல் பிரிவு மோசே, ஆரோன் அவர்களுடைய குமாரர்கள் பாளயமிறங்கியிருந்தார்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்கு முன்புறம். 2-வது கோகாத்தியர்கள் தென்பக்கம் பாளயமிறங்கியிருந்தார்கள். 3 வது கெர்சோனியர்கள் மேற்குப்புறம் பாளயமிறங்கியிருந்தார்கள். 4-வது மெராரியர்கள் வடக்குப்புறம் பாளயமியங்கியிருந்தார்கள். இவர்களைச் சுற்றி இஸ்ரவேல் புத்திரர்கள் நான்கு பெரும்படைகளாக கூடாரமிட்டு பாளயமிறங்கியிருப்பார்கள். ஆசரிப்புக் கூடாரம் நடுவிலும், அதைச் சுற்றிலும் ஆசாரியர்களும் லேவியரும் அதற்கப்புறம் சுற்றிலும் இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் நான்கு சேனைகளாக பாளயமிறங்கி தங்கி இருப்பார்கள்.

### இஸ்ரவேலர் பாளயம் அடிக்க வேண்டிய மாதிரி

ஆசரிப்புக் கூடாரத்தை பாளயத்தின் மத்தியில் அமைத்து, கர்த்தர் கட்டளையிட்டபடியே கூடாரத்தைச் சுற்றிலும் ஆசாரியர், லேவியர் பாளயமடித்திருந்தார்கள். கூடாரத்தின் கிழக்கு பாகத்தில் மோசே ஆரோன் குடும்பங்களும் மேற்கே கெர்சோனியர்களும், தெற்கே கோத்தியரும், வடக்கே மெராரியும் பாளயமடித்திருந்தார்கள். இவர்களைச் சுற்றிலும் பன்னிரண்டு கோத்திரத்தாரும் பாளயமடித்திருந்தார்கள். கிழக்கே யூதா கோத்திரம் தன் கொடியுடன் யூதா கோத்திரத்தின் சேனைக்குட்பட்ட இசக்கார், செபுலோன் கோத்திரங்களும் பாளயமடித்து தங்கியிருந்தார்கள். தெற்கே ரூபன் கோத்திரம் தன் கொடியுடன், ரூபன் கோத்திரத்தின் சேனைக்குட்பட்ட சிமியோன், காத் கோத்திரங்கள் பாளயமடித்து இருந்தன. மேற்கே, எப்பிராயீம் கோத்திரம் தன் கொடியுடன, எப்பிராயீம் கோத்திரத்தின் சேனைக்குட்பட்ட மனாசே, பென்யமீன் கோத்திரங்கள் பாளயமடித்து இருந்தன. வடக்கே, தாண் கோத்திரம் தன் கொடியுடன், தாண் கோத்திரத்துக்குட்பட்ட ஆசேர், நப்தலி கோத்திரங்கள் பாளயமடித்து தங்கி இருந்தது (எண். 2:1-31).

**கடைசியான ஆயத்தம் (எண். 5:1-9,23); லேவியர்கள் பிரதிஷ்டை (எண். 8:1-26).**

### ஆசரிப்புக் கூடாரத்தின் ஊழியத்திற்காக ஊழியரை நியமித்தல்

கர்த்தர் லேவியரை ஊழியத்திற்காக ஏன் தெரிந்தெடுத்தார்? தேவ ஜனங்கள் எகிப்தில் பார்வோனுக்கு அடிமைகளாயிருந்தார்கள். தேவ ஆராதனை இல்லை, ஊழியமில்லை. தேவனை ஆராதிக்க, பார்வோனிடமிருந்து ஜனத்தை விடுதலை செய்ய மோசேயை தேவன் அனுப்பினர் (யாத். 3:12,5,1). பார்வோன் அவர்களை விடவில்லை. கர்த்தர் எகிப்து தேசத்தின் மேலும், பார்வோன் மேலும் அவனுடைய ஜனங்களின் மேலும் வாதைகளை அனுப்பினர். கடைசியாக தேவன் ஒரு வாதையை அனுப்பினர் அது பத்தாவது வாதை. ராஜாவின் அரண்மனை முதல் ஏழையின் குடிசை வரையுள்ள மிருக ஜீவன்களும், மனிதர்களிலுமுள்ள முதற்பேறனைத்தையும் கர்த்தர் அழித்தார். இஸ்ரவேலரோ கர்த்தருடைய கட்டளைப்படி பஸ்கா ஆட்டை அடித்து இரத்தத்தை வீட்டு நிலைக்கால்களில் பூசியிருந்தபடியால் காக்கப்பட்டார்கள். எகிப்திலுண்டான வாதையினால் இஸ்ரவேலிலுள்ள முதற்பேறனைத்தும் காக்கப்பட்டபடியால் இஸ்ரவேலரின்

முதற்பேறனைத்தும் எனக்குரியது என்று கர்த்தர் கட்டளையிட்டிருந்தார். இவ்விதமாக முதற்பேறனைத்தும் கர்த்தருக்குரியது [யாத். 13:1,12].

இவ்வாறு எகிப்திலிருந்து புறப்பட்ட மூன்றும் மாதம் இஸ்ரவேலர் சீனாய்மலையண்டையில் வந்தார்கள். கர்த்தர் தமது ஜனம், தம்மை சேவிக்க வேண்டிய விதம், கைக்கொள்ள வேண்டிய கற்பனை பிரமாணங்கள் முதலியவற்றைக் கொடுக்க மோசேயை மலையுச்சிக்கு அழைத்துவிட்டார். மோசே கர்த்தருடைய பிரமாணங்களை வாங்க மலைக்குச் சென்றார். மோசே வர நாற்பது நாளாகிவிட்டது. மோசே மலையின் மேல் போயிருக்கும் பொழுது நியாயப்பிரமாணத்தில் பிரதானமான பத்துக் கட்டளைகள் இறைவனால் அருளப்பட்டது. அது ஜனங்கள் எல்லாரும் கேட்கத்தக்கதாக வெளிப்படுத்தப்பட்டது. அப்படியிருந்தும் இஸ்ரவேலர்கள் ஆரோனிடம் எகிப்து தேசத்திலிருந்து எங்களை அழைத்து வந்த அந்த மோசேக்கு என்ன சம்பவித்ததோ தெரியாது எனவே எங்களுக்கு முன் செல்லும் தெய்வங்களை உண்டு பண்ணும் என்று கேட்டுக்கொண்டபோது ஆரோன், உங்கள் காதணிகளையும் நகைகளையும் கொண்டு வாருங்கள் என்று கேட்டான். அவைகளை அவர்கள் கொடுத்தார்கள். அதனால் ஆரோன் ஒரு கன்றுக் குட்டியை உண்டுபண்ணி அது தெய்வம் என்று விக்கிரகாரதனையை ஸ்தாபித்தான்.

இஸ்ரவேலர்கள் தேவனுடைய பிரமாணத்தை விட்டு வீழ்ச்சியடைந்த சம்பவமே விக்கிரகாரதனையின் ஆரம்பமாக இருக்கிறது. அப்பொழுது கர்த்தர் மோசேயை நோக்கி நீ இறங்கிப்போ, நீ எகிப்து தேசத்திலிருந்து அழைத்து வந்த உன் ஜனங்கள் தங்களைக்கெடுத்துக் கொண்டார்கள். அவர்கள் ஒரு கன்றுக்குட்டியை உண்டாக்கி, அதைக்கும்பிட்டு, விழாக் கொண்டாடி நடனம் பண்ணுகிறார்கள் என்று தேவன் மோசேக்குச் சொன்னார். மோசே கீழே இறங்கி வந்து கோபமுண்டவராகி அந்தக் கன்றுக்குட்டியைத் தூளாக்கி தண்ணீரில் கலந்து அதை ஜனங்கள் குடிக்கும்படிச் செய்தார் (யாத். 32:20). பின்னர், மோசே சகல ஜனங்களையும் பார்த்து கர்த்தருடைய பட்சத்தில் நிற்கிறவன் யார் என்று கேட்டார் (யாத். 32:26). உடனே லேவி கோத்திரத்தார் மோசேயிடம் சென்றார்கள் அப்பொழுது மோசே கர்த்தரின் கட்டளைப்படி அவனவன் தன் பட்டயத்தை உருவி பாவஞ்செய்த, அசுத்தமாயிருக்கிறவர்களை குடித்து, வெறித்து நடனம் பண்ணி அருவருப்பான காரியங்களை நடப்பித்துக் கொண்டிருந்தவர்களை வெட்டும்படி கட்டளையிட்டார் (யாத். 32:27). இவ்விதம் தேவக்கட்டளைப்படி லேவியர்கள், சகோதரர்கள் என்றும், சகோதரிகள் என்றும், பாராமல் பாவஞ்செய்தவர்களை வெட்டினார்கள். விக்கிரகாரதனை சம்பந்தப்பட்டு எப்பொழுதும் குடியும், வெறியும், நடனமும் களியாட்டும், கூக்குரலும் காமவிகார நடவடிக்கைகளும் உண்டாயிருக்கும். இவ்விதம் லேவியர்கள் தங்களுடைய சகோதரர்களையும், சகோதரிகளையும் பாராமலும் பாவஞ்செய்தவர்களை வெட்டித்தள்ளினார்கள். அதினிமித்தம் கர்த்தர், லேவியர்களை தம்முடைய ஊழியத்திற்கென்று பிரித்தெடுத்துக்கொண்டார் (உபா. 32:8,10). ஆகவே, இக்காரணத்தால் எகிப்திலிருந்து புறப்பட்ட சகல இஸ்ரவேலரிலும் முதற்பேறு தனக்குரியது என்று கர்த்தர் சொல்லியதை நினைத்து அதற்குப்பதிலாக லேவியரை முதற்பேராக நியமித்துக் கொண்டார் [எண். 3:12,13;8:18]. இவ்விதமாக லேவியர் தேவனுடைய ஊழியத்திற்கென்று வேறுபிரிக்கப்பட்டார்கள்.

### லேவியர்களின் பிரதிஷ்டை:

ஊழியத்திற்குத் தகுதியுள்ளவர்கள் 25 வயதுக்கு மேற்பட்டவர்கள் ஆசரிப்புக்

கூடாரத்தில் ஊழியஞ்செய்யும்படி நியமிக்கப்பட்டார்கள். இந்த லேவியையும், லேவி கோத்திரத்துக்குட்பட்டு ஊழியத்துக்கு அழைக்கப்பட்டவர்களுக்கு தேவன் கொடுத்த கட்டளை தேவனுடைய பரிசுத்தத்தையும், ஆராதனை ஒழுங்கு, ஊழியர்களுடைய ஒழுங்கு ஆகியவை நமக்கு வேதாகமத்தின் மூலமாய் அருளப்பட்டிருக்கிறது. அவைகளையும் நாம் சுருக்கமாக கவனிக்க வேண்டியதாயிருக்கிறது.

லேவி: இது யாக்கோபின் மூன்றாவது குமாரன் (ஆதி. 35:23). யாக்கோபு பதான் அராமில் இருபது வருஷம் இருந்தார். பின்பு தன் தகப்பன் வீட்டுக்குப் போகிற வழியில் சாலேம் என்னும் சீகேமுடைய பட்டணத்துக்கு எதிரே கூடாரம் போட்டுத் தங்கியிருந்தார் (ஆதி. 33:18). அங்கு இருக்கும் போது, யாக்கோபின் மகள் தீனாள் என்பவள் தேசத்துப் பெண்களை சுற்றிப்பார்க்கப் போனாள் என்று பார்க்கிறோம். ஊர் சுற்றிப்பார்க்கப் போகிற பெண்கள், தனியாய்ப்போகிற பெண்களுக்கு என்ன ஏற்படும் என்பதற்கு தீனாள் ஒரு எச்சரிப்பாக இருக்கிறாள். அந்த தேசத்தின் பிரபுவாகிய சீகேம் என்பவன் அவளைக் கண்டு இச்சித்து அவளைக் கொண்டு போய் கெடுத்துப் போட்டான் அதோடு, அவளை தனக்கு மனைவியாக்கிக் கொள்ள வேண்டுமென்று தன் தகப்பன் வீட்டாரோடு கூட யாக்கோபினிடத்தில் வந்து பேசினான். இந்தச்செய்தியைக் கேள்விப்பட்ட தீனாளின் சகோதரர்கள் மந்தையிலிருந்து திரும்பிவந்தார்கள். லேவியும், சிமியோனும் இச்செய்தியைக் கேள்விப்பட்டு மிகவும் ஆத்திரமடைந்தார்கள். யாக்கோப்பின் புத்திரர்கள் எல்லாரும் ஆத்திரமடைந்தனர். அப்பொழுது யாக்கோபின் புத்திரர் தந்திரமாக, விருத்தசேதனமில்லாதவர்களுக்கு எங்கள் சகோதரியைக் கொடுப்பதில்லை நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக் கொண்டால் உங்களுக்குக் கொடுப்போம் என்று சொன்னார்கள். அதற்கு உடன்பட்ட அந்தப்பட்டணத்தின் ஆண்மக்கள் எல்லாரும் விருத்தசேதனம் பண்ணிக் கொண்டார்கள். அப்பொழுது லேவியும், சிமியோனும் பட்டயத்தை உருவி, பட்டணத்துக்குள் புகுந்து அந்தப் பட்டணத்தின் வாலிபர், ஆண்மக்கள் எல்லோரையும் கொன்று போட்டார்கள் [ஆதி. 34:25]. இந்தக் காரணத்தால் யாக்கோபு தன் அந்திய காலத்தில் லேவியை சபித்தார் ஆதி. 49:5,7). இவ்வாறு லேவி சாபத்துக்குட்பட்டவனாயிருந்த போதிலும் அவனுடைய சந்ததியார் கர்த்தருடைய பட்சத்தில் நின்று கர்த்தருக்காக வைராக்கியம் பாராட்டினதினால் சாபம் நீங்கி, ஆசீர்வாதத்துக்குப் பாத்திரமாகி கனமான ஊழியத்துக்குத் தகுதியுள்ளவர்களானார்கள். எப்படிப்பட்டவன் ஊழியத்திற்குத் தகுதியுள்ளவன்?

[தொடரும்.]

" நீ இஸ்ரவேல் சந்ததியாரிலிருந்து லேவியரைப் பிரித்தெடுத்து அவர்களை சுத்திகரிப்பாயாக" எண். 8:6.

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. ஜெயம் | Sis. ராஜகனி | தூத்துக்குடி | 12-11-1992 |
| Bro இம்மானுவேல் | Sis. ஹெப்சிபா | மதுரை | 18-11-1992 |

# இந்து மதம்

(தொடர்ச்சி)

காமன் போன்ற கடவுள்களுக்கு சதா வேலை காமசேஷ்டைகள் உண்டுபண்ணுவதுதான். அதையும் தெய்வமாக்கி கும்பிடுகிறார்கள். தேவிகளின் வரலாறுகளைப் பார்த்தால் இதைவிட மோசமாயிருக்கும். பார்வதியின் மறுநாமமுள்ள அவதாரங்களும் மிகவும் அசிங்கமாக இருக்கும். யமுனை என்னும் ஆற்றைக் கடக்க தான் கழுதை ரூபம் எடுத்ததாயும் கதை உண்டு. சக்தி பூசையின் இரகசியத்தை இங்கே எழுதவே கூடாது என்ற பரந்த நோக்கத்துடன் விட்டுவிடுகிறோம். சில இடங்களில் சத்திக்கு நரபலியும் கொடுக்கிறார்கள்.

மாரியம்மனின் வரலாற்றை நீங்கள் அறிந்தால் மாரியம்மன் யார் என்பதை தெரிந்துக் கொள்வீர்கள். கரூர் பெரும்பறையின் மகள் ஆதி என்பவளை பேராளி மாமுனியின் குமாரரான பகவன் பெண்சாதியாக எடுத்துக் கொண்டாராம். பகவன் என்பவன் பார்ப்பனனும், ஆதி என்பவள் பறைச்சியுமாகையால் இவ்விருவரும் மற்றவர்களால் புறக்கணிக்கப்பட்டு ஊரிலே பிச்சை எடுத்து உண்டு காட்டிலே சஞ்சரித்தார்களாம். இவர்களுக்கு நான்கு பெண்களும் மூன்று ஆண்களும் பிறந்ததாம். இவர்களுடைய பெயர்கள் : உப்பை, உருவை, ஔவை, வள்ளி, அதியமான், கபிலர், வள்ளுவன் என்பதாம். உப்பையை ஊற்றுக்காட்டிலே வண்ணார் வளர்த்தார்களாம். இவளே எங்கும் கிராம தேவியாய்ப் போற்றி வணங்கப்படும் தற்கால மாரியம்மன் தேவி. இவளுக்கு வைசூரி வியாதி கண்டு அதினாலே தினவு எடுத்து இரணமானதினிமித்தம் துர்நாற்றம் எடுத்து ஈக்கள் மொய்த்தபடியால், அவள் புருஷனை வெட்டியான் மிகத்தரித்திரனும் வஸ்திரமில்லாதவனுமாதலால் வேப்பந்தளைகளை இவளுக்குக் கீழ்பரப்பி, அவள் மேல் அதை போர்வையாக இட்டு மூடி, ஈக்கள் மொய்த்துக் கடித்து வதைக்காதபடி பாதுகாத்து, ஊரில் போய் இரந்து வந்து போஷிப்பானும். இவள் வியாதி கொஞ்சம் தெளிந்தபின் இருவரும் பிச்சைக்குப் போகையில், இவள் புண்களில் மொய்கிற ஈக்களின் உபத்திரவம் பொறுக்க முடியாமல் அந்த வேப்பிலை தளைகளாலே அவைகளை ஒட்டி விசிறிக் கொண்டு வீடு வீடாய்ப் போய்ப் பிச்சை இரந்து உண்டு காலத்தைக் கழித்தார்களாம். முடிவில் இவள் மரித்ததும் ஊரார் பெரும் மரியாதையுடன் அம்மை (வைசூரி) கண்டவளானதால் உப்பை என்னும் பெயரை மாற்றி மாரியம்மன் என்னும் பெயரால் சமாதி கட்டி, விளக்கேற்றி வைத்து தங்கள் கிராம தேவதையாக வணங்கினார்கள். இப்பழக்கம் இன்றைய வரையில் எங்கும் மாரியம்மன் திருவிழா என்று ஒரு பெரிய ஆர்ப்பாட்டமாக கொண்டாடப்பட்டு வருகிறது.

உருவை: இவளை சாணார் வளர்த்தார்களாம்.

ஔவை: இவள் மரப்புச்சேரி அல்லது சேரிமரப்பு அஃதாவது மரப்புக் கரிபிலியோ சேரிபாணரிடத்தே வளர்ந்தாளாம்.

வள்ளி: இவள் மலைக்கருகில் குறவரிடத்தில் வளர்ந்தாளாம்.

அதியமான்: அருரில் அரசனாயிருந்த அதியமான் வீட்டிலே வளர்க்கப்பட்டாராம்.

கபிலர்: ஆரூரிலே அந்தணர் வீட்டிலே வளர்ந்தாராம்.

வள்ளுவர்: தொண்டைமானிடத்தில் மைலாப்பூரிலே பறையரிடத்தில் வளர்க்கப்பட்டாராம். இப்படியாகக் கதை.

இவைகளைக் குறித்து பல முனிவர்கள் கவிபாடியிருக்கிறார்கள். புலவர்களுடைய வக்கணையினால் இவர்களை தெய்வங்களாகப்

புனைந்து வழிபடுகிறதைப் பார்க்கிறோம். சாமானியத்தவர், ராட்சதர்கள், கந்தர்வர், கின்னரர், வித்தியாதரர், விஞ்சயர் அப்சரர், அஷ்டதசா கணங்கள், இவர்களுமல்லாமல் காத்தவராயன், கருப்பன், மன்னார்வா மாடன்வீர், வீரங்கன், ரங்கன், முத்தையன், சபாபதி, போத்துராஜன் என்னும் பல புதிய தேவர்களும், இன்னும் புதிய புதிய தேவர்களும் இந்து மதத்தில் பிறந்துக் கொண்டிருக்கிறார்கள். உயிரோடே வணங்காமல், அவர்கள் செத்தபிறகு அவர்களை சாமியாக்கி வணங்குவார்கள். இது தான் இந்துமதம். சர்வத்தையும் தெய்வமாக வணங்குகிற மடைமையான சுபாவம் காணப்படுகிறது. சிருஷ்டிகரை விட்டு சிருஷ்டியை தொழுது சேவிக்கிற தோஷமாகும் இது. இவர்கள் சிருஷ்டிகராகிய இறைவனை அவமதிக்கிறதற்கான பலன்களை அனுபவிப்பார்கள். அது மாத்திரமல்ல பசு வணக்கம், எருது வணக்கம், அனுமார் வணக்கம், நாய் வணக்கம், பட்சி வணக்கம், மச்ச வணக்கம், விருட்ச வணக்கம் கற்கள் வணக்கம், நதி வணக்கம், ஆயுத வணக்கம், நவக்கிரக வணக்கம் என்று பற்பல வணக்கங்கள் காணப்படுகிறது. விக்கிரக வணக்கத்தைப்பற்றி எடுத்துரைப்போம்.

## விக்கிரகாராதனை

விக்கிரகாராதனை சாத்தானுடைய தந்திரமாகும். விக்கிரகாராதனை எந்த தேசத்தில் எப்பொழுது ஆரம்பமாயிற்று என்று திட்டமாகச் சொல்ல முடியாது. சிலர் பிலோனிலிருந்து ஆரம்பமாயிற்று என்றும் சிலர் எகிப்தில் ஆரம்பமாயிற்று என்றும், சிலர் நோவாவின் குமாரர்கள் காலத்தில் ஆரம்பமாயிற்று என்றும், இன்னும் சிலர் இந்தியாவில் ஆரம்பமாயிற்று என்றும் சொல்கிறார்கள், திட்டமாகச் சொல்ல முடியாது.

விக்கிரகாராதனை, விக்கிரக வணக்கம் வகைகளைக் குறித்து நன்றாக யோசித்துப் பார்ப்போமென்றால் மனிதனை நிலையான தேவனை விட்டுப் பிரிக்கும்படியாக அவனுடைய ஆத்துமாவானது தன்னுடைய நிலையாகிய தேவனை விட்டுப் பிரிந்து அது அவபக்தியிலும், அவமார்க்கத்திலும், படிப்படியாய் முன்னேறிப்போகும்படி சாத்தானால் நியமிக்கப்பட்டிருக்கிறது.

ஆதியிலே விக்கிரகங்கள், நித்திய வஸ்துவையும், அவருடைய மகத்துவங்களையும் மனிதனுக்கு சகாயமாயிருக்கப் பட்ட வஸ்துகளையும், அவர்கள் மறந்து போகாமல் ஞாபகம் பண்ணும் பொருட்டு ஏற்பட்டிருக்கலாம். ஆனால் மனிதன் வர வர இழிவும், பைத்தியமுமான காரணங்களுக்கெல்லாம் தேவர்களை ஏற்படுத்திக்கொண்டார்கள். அவ்வளவு கொடிய இருள் மூடின மனிதர்கள், விக்கிரகத்தின் தேவதைகளுடைய தொகையிலே பாவமும் பாழாய்ப்போன அறிவும் சேரக்கூடிய எந்த பொருள் சேராதிருந்தது? ஐயோ, ஒப்பும் உருவமுமற்ற நித்திய தேவனுடைய மகிமையை யாருக்கு ஒப்பாக்கலாம்? எந்த சாயலை அதற்கு ஒப்பிடலாம்? ஒப்பிடத்தகாததாயினும் மனிதர் அப்படிச் செய்து விட்டார்கள். அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பைத்தியக்காரராகி, அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர் பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள் ஆகியவைகளுடைய ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள். அஞ்ஞானிகளுடைய தேவதைகளின் தொகையை அறிவது எளிதல்ல. அவைகளின் வகையைக் கொண்டு தொகையை யோசித்துக் கொள்ளலாம்.

நாம் இங்கே சுருக்கமாய் அவைகளை பத்துப்பிரிவாக பிரித்துக் காட்டுவோம்.

1. அரூபிகள்:அவையாவன சம்மனசுகள் [தேவ தூதர்கள்], துர்மனசுகள் [பேய்கள்], குல தேவதைகள், வீட்டுத் தேவதைகள், கிராம தேவதைகள், இறந்தவர்க

ருடைய ஆத்துமாக்கள் முதலியவைகள்.

2. மனிதருள்வான்கள், வீரர், அரசர், தபசிகள், பத்தினிகள் முதலானவர்கள்.

3. மனிதருக்குரிய ஆசை, இச்சை, குணம், வியாதி, சுகம் முதலியன.

செல்வத்தை லட்சுமியாகவும், கல்வியை சரஸ்வதியாகவும், காமத்தை மன்மதனைவும், பிறப்பிக்கும் சக்தியை லிங்கமாகவும் இப்படிப்பட்ட அநேக காரியங்களை தேவதைகளாக வணங்குகிறார்கள்.

4. வானத்திலுள்ள சிருஷ்டிகள்: சந்திரன், சூரியன் முதலிய கிரகங்களும் நட்சத்திரங்களும்.

5. பூமி, சமுத்திரம், அக்கினி, காற்று, நதிகள் முதலியவைகள்.

6. மரங்கள், துளசி, அரசு, வேம்பு, வில்வம் முதலியவைகள். [எகிப்தியர் வெங்காயத்தையும் தொழுது கொண்டார்கள்).

7. நீர்வாழ்வன:
எகிப்தியரும், சீரியரும் மச்சங்களை ஆராதித்தார்கள். மச்சங்கள், முதலைகள், நண்டுகள் முதலியன.

8. ஊர்வன: நாகம் முதலியன.

9. பறப்பன: கருடன் முதலியவைகள்.

10. மிருகங்கள்: ரிஷபம், காளை மாடு, [குரங்கு] அனுமான் முதலியவைகள்.
நாயும் பூனையும் எகிப்தியர் முதலான ஜாதிகளால் வணங்கப்பட்டன.

இவ்வாறு ஒருபட்சம் முப்பதுமுக் கோடி தேவர்களானார்கள்.

ஆ! ஆ! மனிதனே, சிருஷ்டிகளில் சிறந்தவனே, மேலான வரங்களைப் பெற்றவனே, நீ என்ன இழிவடைந்தாய்! விக்கிரகப்புத்தி இம்மட்டிலாவது நின்றதா? இல்லையே. அதனுடைய தேவர்கள் பெருகவே, சிறப்பும் ஆடம்பரங்களும் அதிகரித்தன. நாம் மேற்கூறியது போல சித்திரங்கள் விக்கிரக பக்தியின் முதல் சிறப்பாய் இருக்கலாம். பிறகு சாஸ்திரியாகிய வால்த்தர் சொல்லுகிறது போல் கம்மாளர் உருவமைத்ததுமல்லாமல், ஆசாரியர்கள் அவைகளுக்கு மூர்த்திகரிப்பித்து, புஷ்பத்தைச் சாற்றி, பீடம் கட்டினார்கள்.

இவ்விதமாய் நினைவூட்டும்படி உண்டானது நாளடைவில் வணங்கப்படுவதாயிற்று. வணங்கப்பட்டது படிப்படியாக நாடறிய தேவதைகளாக சிறப்படைந்தன. விக்கிரக பக்தி மெய் தேவபக்திக்கு விரோதமாக இருந்தாலும் அது இதை தனக்கு மாதிரியாக கொண்டாற் போல் இருக்கிறது. எப்படியென்றால் சர்வேஸ்வரன் அருளி செய்த சத்திய வேதத்தின் முதற்பங்கிலுள்ள சரித்திரங்களும், ஆராதனை முறைகளும், திரிந்தும், திரண்டும் ஆகியும் அழிந்தும், அக்கியானத்திற்கு ஆதாரமானதேயொழிய அதற்கு சொந்த அஸ்திபாரத்தைக் காணோம். இதை இவ்விடத்திலே மேலும் விவரிக்காமல் விடுகிறோம்.

இவ்வகையாய் விக்கிரக பக்தி மார்க்கத்தை ஒருட்டி திரட்டி உருவப்படுத்தினவர்கள் இருந்தாலும் அவர்களே என்றென்றைக்கும் துதிக்கப்படத்தக்க தேவனைக் குறித்து அறிந்த சத்தியத்தை பொய்யாக மாற்றி, அமிர்தத்தில் விஷம் கலந்தாற் போல பூர்வத்திலே அவர் செய்த இரக்கமும் நீதியுமான கிரியைகளை எழுதாமலும், எழுதியுமிருந்த வேத சத்தியங்களை அருவருப்புள்ள அவபக்திக்கேதுவாகும்படி புரட்டிப்போட்டார்கள். இதனால் விக்கிரகப்புத்தி கண்டு பாவனை என்ற வசனம் போலாயிற்று.

யூதர்களுடைய முன்னோர் துவக்கத்திலே தோப்புகளை நாட்டி, மலைகளிலும் நேர்ந்து கொண்ட இடங்களிலும் பீடா

களைக் கட்டி, கற்றூண்களை நாட்டி, பலிகளையிட்டு என்றுமுள்ள தேவனுடைய நாமத்தைத் தொழுது கொண்டார்கள்.

(தொடரும்)

"அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பயித்தியக்காரரானார்கள்"
ரோ. 1:22.

சிறுவர் பகுதி

# அவன் இப்பொழுது ஜெபம் செய்கிறான்

கிறிஸ்துவுக்குள் அன்பான தம்பி, தங்கைகளே, இன்றைக்கு ஜெபத்தின் மேன்மையைக் குறித்துப்பார்க்கலாம்.

உலகம் பொல்லாங்கனுக்குள் கிடக்கிறது. சிலருக்கு நேரம் போதவில்லை, சிலருக்கு நேரம் போகவில்லை, சிலர் சினிமா பார்த்துக் கொண்டிருக்கலாம், சிலர் சூதாடிக்கொண்டிருக்கலாம். சிலர் குடித்துக் கொண்டிருக்கலாம், சிலர் விக்கிரக ஆராதனை செய்து கொண்டிருக்கலாம், சிலர் விபசார வாழ்க்கை செய்து கொண்டிருக்கலாம், சிலர் வெட்டிக் கதை பேசிக் கொண்டிருக்கலாம், சிலர் ஏதாவது வேலை செய்து கொண்டிருக்கலாம். ஆனால் இறைவனுடைய கண்களுக்கு முன்பாக சர்வமும் நிர்வாணமும், வெளியரங்கமுமாய் இருக்கிறது. எல்லாவற்றையும் தேவன் நியாயத்திலே கொண்டுவந்து நிறுத்துவார்.

அரசாங்கம் அறிவிப்புக் கொடுக்கிறது 'நேரம் தவறாமை இரயில்களுக்கு மட்டுமா, உங்களுக்கும் கூட' என்று. நாம் குறித்த நேரத்தில் ஜெபிக்கவேண்டும். வண்டிக்குத் தேவை அச்சாணி. ஆவிக்குரிய வாழ்க்கைக்கு ஜீவனை ஜெபம். "நீ எழுந்து நேர்த்தெரு என்னப்பட்ட தெருவுக்குப் போய் யூதாவின் வீட்டிலே தர்சு பட்டணத்தானாகிய சவுல் என்னும் பேருள்ள ஒருவனைத்தேடு; அவன் இப்பொழுது ஜெபம் பண்ணுகிறான்" [அப் 9:11.] தேவனுடைய கண்கள் ஜெபித்துக் கொண்டிருக்கும் சவுலின் மேல் நோக்கமாயிருக்கிறது. சவுல் ஜெபித்தார். எனவேதான் தேவன் தம்முடைய பரிசுத்தவானாகிய அனனியாவை சவுலிடம் அனுப்பி தேவ இரகசியத்தை வெளிப்படுத்தினார். பரிசுத்தவான்கள் நம்மிடம் வரும்படி ஜெபம் செய்யவேண்டும். அப்பொழுது தேவன் தம்முடைய பரிசுத்தவான்களை நம்மிடம் அனுப்புவார். தேவ இரகசியங்களை அறியலாம். தானியேல் ஜெபித்துக் கொண்டிருக்கும் போது. தேவன் தம்முடைய தூதனை அனுப்பி தேவ இரகசியத்தை தானியேலுக்கு வெளிப்படுத்தினார். சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ ஜெபித்தார்கள். தேவன் தம்முடைய தூதனை அனுப்பி அக்கினி ஜுவாலையிலிருந்து அவர்களைக் காப்பாற்றினார்.

'ஜெபம்' என்பது தேவனுக்கும் மனிதனுக்கும் இடையே உள்ள தெய்வீக உறவாகும். ஜெபமின்றேல் உறவுமுறியும். ஜெபிக்கிறவன் பாவத்தில் விழுவதில்லை. பாவத்தில் விழுபவன் ஜெபிப்பதில்லை. எனவே அந்தி, சந்தி, மத்தியான வேளையிலும் ஜெபிப்போம், தேவனோடு உறவாடுவோம் ஜெயம் பெறுவோம். "ஜெபமே ஜீவன்; ஜெபம் ஜெயம் ஜீவியத்திற்கு இதுவே சட்டம்."

"என்னை நோக்கிக் கூப்பிடு, அப்பொழுது நான் உனக்கு உத்தரவு கொடுத்து, நீ அறியாததும், உனக்கு எட்டாததுமான பெரிய காரியங்களை உனக்கு அறிவிப்பேன்" (எரே. 33:3) என்று தேவன் சொல்லுகிறார்.

தேவன் ஒருவரே
**THERE IS ONE GOD...**

Regd No 040088 84
Postal Regd No MH BY NE-94/83
Tamil Monthly Magazine

# ஞானஸ்நானம்

ஞானஸ்நானம் [illegible] பெற்றுக்கொள்ள வேண்டும், கொடுக்கப்பட வேண்டும். ஞானஸ்நானம் கிறிஸ்துவின் மரணம், அடக்கம் பண்ணப்படுதலோடுகூட மனிதனை ஐக்கியப்படுத்துகிறது. ஞானஸ்நானம், இயேசு கிறிஸ்துவினுடைய கட்டளையாம் நீங்கள் உலகமெங்கும் புறப்பட்டுப்போய சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுங்கள் என்று இயேசுவானவர் கட்டளையிட்டார். அது இயேசுவின் கட்டளைப்படி பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே கொடுக்கவேண்டும். அப்படி கொடுக்கிறவர் இயேசுவின் கட்டளைப்படி கொடுக்கிறபடியால் இயேசுவின் பெயரால், இயேசுவுக்குப் பதிலாகக் கொடுத்தார், இயேசுவே கொடுத்தார் என்று அர்த்தம். ஆனபடியால், இந்த ஞானஸ்நானத்திற்கு இயேசுவின் நாமத்தில் ஞானஸ்நானம் கொடுத்ததாகவும், பெற்றுக்கொண்டதாகவும் எழுதப்பட்டிருக்கிறதே யொழிய இயேசுவின் நாமத்தைச் சொல்லி கொடுக்கப்பட்டதென்று அர்த்தமல்ல. இயேசுவின் கட்டளைப்படி பிதா, குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தில் கொடுத்ததினால் இயேசு கொடுத்தார் என்று அர்த்தம். இயேசுவின் நாமத்தில் கொடுக்கப்பட்டது என்று அர்த்தம்.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   8 [வெள்ளி] ஜனவரி 1993
   8 [திங்கள்] பிப்ரவரி 1993
   8 [திங்கள்] மார்ச் 1993
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00
   அனுப்ப வேண்டிய முகவரி

   **CHIEF PASTOR N. LAZAR**
   **"NEW JERUSALEM CHURCH"**
   **CHURCH LANE, TILAK NAGAR,**
   **DARGA ROAD, BHANDUP,**
   **BOMBAY-400 078 INDIA**
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.